# அழைக்கிறது அமெரிக்கா!

## கல்கி - டயானா வொர்ல்ட் டிராவல் இணைந்து வழங்கும்



# குவிஸ் போட்டி—1



## நீங்கள் செய்ய வேண்டியது :

ஒவ்வொரு வாரமும் ஆறு கேள்விகள் இடம் பெறும்.

ஒவ்வொரு கேள்விக்கும் ஒரு வார்த்தை அல்லது ஒரு எண்தான் விடையாக அமையும்.

அந்த வார்த்தை அல்லது எண்ணை நீங்கள் விடை பகுதியில் எழுத வேண்டும்.

தெரியாவிட்டால் தேடிக் கண்டுபிடித்து எழுதலாம்.

அடித்தல் திருத்தல் இருக்கக் கூடாது.

இந்த இதழ் தொடங்கி, கல்கி பத்திரிகையில் இடம் பெறும் கூப்பனில் தான் எழுத வேண்டும். ஜெராக்ஸ் ஒட்டக் கூடாது.

உங்கள் முழு விலாசம் தெளிவாகக் குறிப்பிடல் வேண்டும்.

26 வாரங்கள் சென்றதும் ஒட்டு மொத்தமாக கூப்பன்களை அனுப்பவும்.

## நாங்கள் செய்யப் போவது :

26 வாரங்கள் சென்றதும் நீங்கள் அனுப்பும் கூப்பன்கள் பரிசீலிக்கப்படும்.

மிக அதிகமான கேள்விகளுக்குச் சரியான விடைகளை எழுதுபவருக்கு அமெரிக்கப் பயணம் பரிசு!

அடுத்த நிலையில் சரியான விடையை எழுதியவருக்கு ஐரோப்பா பயணம்.

மூன்றாவது நிலையில் சரியான விடையை எழுதியவருக்கு மலேசியா – சிங்கப்பூர் பயணம்.

மூன்று நிலைகளிலும் ஒருவருக்கு மேல் குறிப்பிட்ட எண்ணிக்கையில் சரியான விடைகள் எழுதியிருந்தால் பரிசு பெறுபவர் குலுக்கல் முறையில் தேர்வு செய்யப்படுவார்; மற்றவர்களுக்கு அமரர் கல்கியின் நூல்கள் பரிசாக வழங்கப்படும்.

போட்டிக் கடைசி வாரம் முடிவு தேதி குறிப்பிடப்படும். அதற்குள் கூப்பன்கள் அனுப்பி வைக்க வேண்டும்.

ஆசிரியர் தீர்ப்பே இறுதி!

## குவிஸ் கூப்பன்—1

1) புகழ் பெற்ற டென்னிஸ் வீராங்கனைகளான வில்லியம்ஸ் சகோதரிகளில் ஒருவர் செரினா. மற்றவர் யார்?

2) ராமபிரானின் இரு மகன்களில் ஒருவன் லவன். மற்றவன் யார்?

3) 1993ல் அமைதிக்கான நோபல் பரிசு பெற்ற தென்னாப்பிரிக்கர்களில் ஒருவர் டி கிளெர்க். மற்றவர் யார்?

4) பிரபல இந்தித் திரைப்பட இரட்டை இசையமைப்பாளர்களில் ஒருவர் சங்கர். மற்றவர் யார்?

5) புகழ் பெற்று வரும் கர்நாடக இசையுலக சகோதரிகளில் ஒருவர் ஹரிப்ரியா. மற்றவர் யார்?

6) சண்டிகரைத் தலைநகரமாகக் கொண்ட இரு மாநிலங்களில் ஒன்று பஞ்சாப். மற்றது எது?

### விடைகள்:

1)............................................

2)............................................

3)............................................

4)............................................

5)............................................

6)............................................

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com   ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

**பி.எஸ். ராகவன், மேற்கு வங்காள மாநிலத்தில் பணியாற்றிய ஐ.ஏ.எஸ். அதிகாரி. 1955ல் பாரக்பூர் என்ற இடத்தில் சப் கலெக்டராகச் சேர்ந்து, '84ல் தலைமைச் செயலாளருக்கு இணையான பொறுப்பு வகித்து '87ல் ஓய்வு பெற்றவர். மே.வங்காள முதல்வராக இருபத்து நாலுவருடம் பணியாற்றி ஓய்வு பெற்ற ஜோதிபாசுவை நன்கு அறிந்தவர். அவர் பற்றிய மலரும் நினைவுகளை நம்முடன் பகிர்ந்து கொண்டார். அதிலிருந்து:**

● ''1955ம் வருடம் முதல் எனக்கு ஜோதிபாசு பரிச்சயம். அப்போது நான் பாரக்பூர் என்ற இடத்தில் சப் கலெக்டராகப் பணிபுரிந்து கொண்டிருந்தேன். என் பொறுப்பில் பதினான்கு சட்டமன்றத் தொகுதிகள் இருந்தன. அவற்றில் பதிமூன்று தொகுதிகளில் காங்கிரஸ் ஜெயித்திருந்தது. ஒரே ஒரு தொகுதி மட்டும் கம்யூனிஸ்ட் வசமிருந்தது. அந்த ஒரு தொகுதியின் எம்.எல்.ஏ. ஜோதிபாசு!



● பி.சி. ராய் மே.வங்காளத்தின் முதலமைச்சராக இருந்த கால கட்டம். காங்கிரஸ் ஆளும் கட்சியாக இருக்கிறபோது, மாற்றுக் கட்சி எம்.எல்.ஏ. சொன்னால் எந்த அரசு அதிகாரி கேட்பார்? உதவி செய்வார்? என்ற தயக்கம் இருந்தது ஜோதிபாசுவுக்கு. அந்தத் தயக்கத்துடன்தான் என்னை அணுகினார் அவர். ஆனால் அவருடைய இனிமையான குணம், நாணயம், பிறருக்கு மதிப்பு கொடுக்கும் பண்பு இவை என்னை வெகுவாகக் கவர்ந்தன. சீக்கிரமே அவர் எத்தனை நேர்மையானவர் என்றும் புரிந்து கொண்டேன். நான் அங்கே இருந்த இரண்டு ஆண்டுகளில் அவரது கோரிக்கைகளில் என்னால் முடிந்த அனைத்தையும் நிறைவேற்றி வைத்தேன். அப்போது எங்களுக்கு ஏற்பட்ட பரஸ்பர அறிமுகம் பின்னர் பல வருடங்களுக்குத் தொடர்ந்தது.

● பாசு எப்போதும் முகத்தை சீரியஸாகத்தான் வைத்துக் கொண்டிருப்பார். ஒரு தடவை அவர் முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு, தம் அறையில் உட்கார்ந்து கொண்டிருந்தபோது, நானும் முகத்தை சீரியஸாக வைத்துக் கொண்டு, அவரிடம், படு சீரியஸாகக் கேட்டேன்: 'ஏன் ஐயா! கம்யூனிஸ்ட் தத்துவத்திலோ, மார்க்ஸ் நூல்களிலோ புன்னகை புரிவதுகூட மக்களுக்கு இழைக்கப்படும் மன்னிக்க முடியாத குற்றம் என்று கூறப்பட்டிருக்கிறதா?' உடனே பாசு குபீரென்று சிரித்துவிட்டார்! அதற்கப்புறம் என்னிடம் கலகலப்பாகப் பேச ஆரம்பித்தார்.

● நேர்மையாகச் செயலாற்றும் அதிகாரிகளைக் கண்டால் அவருக்கு ரொம்பப் பிடிக்கும். அவர்கள் சொல்லும் கருத்துக்கள் தனக்கோ, தான் சார்ந்த கட்சிக்கோ ஏற்புடையதில்லை என்றாலும், பெருந்தன்மையுடன், பொறுமையாகக் கேட்பார். 1970ல் அஜய் முகர்ஜியின் அரசு கவிழ்ந்து, பொதுத் தேர்தலுக்கு ஆணையிடப்பட்டிருந்த நேரம். நான் மாநிலத்தின் முக்கிய தேர்தல் அதிகாரியாக இருந்தேன். தேர்தல் பிரசாரக் கூட்டங்களில் ஜோதிபாசு, அரசு அதிகாரிகளையும், ஊழியர்களையும் பயமுறுத்தும் விதமாகப் பேசினார் என்று பத்திரிகைகளில் செய்திகள் வெளியாயின. ''அச் செய்திகள் உண்மையானால், உங்கள் பேரில் சட்டப்படி ஏன் நடவடிக்கை எடுக்கக் கூடாது?''என்று விளக்கம் கேட்டு, நோட்டீஸ் அனுப்பினேன். கவிழ்ந்த அரசாங்கத்

# ''ஜெ ஹோ

# "அபூர்வப் பிறவி!"



• பி.எஸ். ராகவன்

இல் துணை முதல்வராகவும், ஓர் அகில இந்தியக் கட்சியின் முன்னணித் தலைவராகவும் இருக்கும் எனக்கு எப்படி நோட்டீஸ் அனுப்பலாம் என்று ஈகோ பார்க்காமல், எனது நோட்டீஸுக்குத் தன் தரப்பின் விரிவான பதிலை அனுப்பி வைத்ததுடன் என்னை என் அலுவலகத்துக்கே வந்து நேரில் சந்தித்து, விளக்கம் அளித்துவிட்டுப் போனார்.

● பாசு 1984ல் முதலமைச்சராக இருந்தபோது மாநிலத்தில் கடுமையான மின் பற்றாக்குறை, நிலவியது. தினமும் ஐந்தாறு மணிநேரம் மின்சப்ளை இருக்காது. ஆனால், போதிய அளவில் மின் உற்பத்தி செய்ய அவசியமான மின் நிலையங்களை நிறுவுவதற்கு மத்திய, மாநில அரசுகளிடம் நிதி வசதி இல்லை. அத்தருணத்தில், சில ஜப்பானிய கம்பெனிகள் தங்கள் முதலீட்டிலேயே மின் உற்பத்தி நிலையங்கள் கட்டி, தங்கள் பராமரிப்பிலேயே மின் உற்பத்தி செய்து, மின் கட்டணம் மூலம், முதலீட்டைத் திரும்பப் பெற்றவுடன், மின் நிலையங்களையும், இலவசமாகவே அரசிடம் ஒப்படைத்துவிட ஒரு திட்டம் தயாரித்தனர். இது கம்யூனிஸ்ட் அணுகுமுறைகளுக்கு முற்றிலும் புறம்பானது. ஆனாலும், பொது நலத்துக்கு முக்கியத்துவம் கொடுத்து, இத்திட்டத்தைப் பரிசீலிக்க வேண்டும் என நான் சிபாரிசு செய்தேன். என் கோரிக்கையைத் தயக்கமின்றி ஏற்றுக் கொண்டார் பாசு. (கடைசியில் அத்திட்டம் வேறு சில காரணங்களுக்காகக் கைவிடப்பட்டது)

● ஒருமுறை மகாராஷ்டிர மாநிலத்திலிருந்து சில அதிகாரிகள் பாசுவைச் சந்தித்து, சில திட்டங்கள் குறித்து விவாதிப்பதற்காக வந்திருந்தார்கள். அவர்கள், முதலமைச்சருடன் கலந்துரையாடியபோது நானும் உடனிருந்து சில கருத்துக்களைத் தெரிவித்தேன். முதல்வரின் அறையைவிட்டு, வெளியே வந்தவுடன், மகாராஷ்டிர அதிகாரிகள் வியப்புடன் என்னிடம் கேட்ட கேள்வி: என்ன இப்படி தடாலடியாக முதலமைச்சரிடம் பேசுகிறீர்கள்? முதல்வரின் கருத்துக்கு எதிரான கருத்துக்களை இவ்வளவு தைரியமாக, வெளிப்படையாக அவரிடமே சொல்லுகிறீர்களே! இதனால் பிரச்னைகள் வராதா?"

நான், "இங்கே இதுதான் கலாசாரம். முதல்வர் சொல்கிறார் என்பதற்காக, அதிகாரிகள் தலையாட்டிக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. மாற்றுக் கருத்துக்களுக்கும் மதிப்பளிக்கும் மனப்பக்குவம் இங்கே உண்டு" என்றதும், "எங்கள் ஊரில் இதுபோலப் பேசினால், குறைந்த பட்சம், டிரான்ஸ்பர் கிடைக்கும்" என்றார் அந்த அதிகாரி.

● பழுத்த அனுபவசாலி, சிறந்த நிர்வாகி

## அர்ச்சனையில் தப்பிய ஜெ!

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரின் 93வது ஜெயந்தி விழா பேரணியை திருச்சியில் அமைதியாகவே நடத்திக் காட்டினர் திருச்சி மண்டல தேவர் பேரவை



யினர்.

● சிந்தாமணி அண்ணா சிலையிலிருந்து மாலை ஐந்து மணிக்குத் துவங்கியது பேரணி. திருச்சி மண்டல தேவர் பேரவைத் தலைவர் டாக்டர் கே.எஸ். சுப்பையா, பேரணி மற்றும் ஜெயந்தி விழா ஏற்பாடுகளைச் செய்திருந்தார்.

● பேரணியில் 'சிறப்பிப்பவர்கள்' பட்டியலில் இடம் பெற்றிருந்த தி.மு.க. பிரமுகர்களான திருச்சி சிவா, கே.கே.எம். தங்கராசு ஆகியோர் ஏனோ கலந்து கொள்ள வில்லை.

● பேரணியின் துவக்கத்தில் அறிவிப்பு இல்லாமலேயே திடீரென 'புயல்' போல வந்து இணைந்து கொண்டார் சண்முகையா பாண்டியன். இவரின் திடீர் வருகையால் போலீசார் தங்கள் பலத்தை அதிகப்படுத்த வேண்டியிருந்தது!

● சண்முகையா பாண்டியனின் அரை மணி நேரப் பேச்சு அனைவரையும் அதிர்ச்சி அடையச் செய்தது. விழாவுக்கு ஏற்பாடு செய்திருந்தவர்கள் மேடையிலேயே நெளிய ஆரம்பித்தார்கள். அவரது பேச்சில் அச்சில் ஏற்ற முடியாத அநாகரீகமான அருவெறுக்கத்தக்க வார்த்தைகள்!

● தி.மு.க. தலைவர் கருணாநிதி, த.மா.கா. தலைவர் மூப்பனார், கம்யூனிஸ்ட் கட்சிகளின் சங்கரய்யா, நல்லக்கண்ணுவிலிருந்து ஜெ. அரசில் அமைச்சர்களாயிருந்த எஸ்.டி.எஸ்., சேடப்பட்டி, பரமசிவம் என எல்லோர்க்கும் ஏகமாய் லட்சார்ச்சனை! (இதில் வந்த வார்த்தைகளைக் கேட்டு சிலர் காதைப் பொத்திக் கொண்டனர்.)

● தம் பேச்சில் ஜெவை மட்டும் எந்த இடத்திலும் வசைபாடாமல் தவிர்த்துவிட்டார் சண்முகையா பாண்டியன்!

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

என்றாலும், மே.வங்காளத்தில் நடப்பது கம்யூனிஸ்ட் கூட்டணி ஆட்சி என்பதை ஒரு போதும் பாசு மறந்தது இல்லை. ஒவ்வொரு விஷயத்திலும் கூட்டணிக் கட்சிகளைக் கலந்து ஆலோசித்துத்தான் முடிவுகள் எடுப்பார். நிலச்சீர்திருத்த விஷயத்தில், மே.வங்காளம், இந்தியாவிற்கே முன்னுதாரணமாக இருக்கிறதென்றால், அதற்கு முழுக் காரணம் பாசுவின் நடவடிக்கைகள்தான். அதுபோலவே, அதிகாரத்தைப் பரவலாக்கி, உள்ளாட்சி அமைப்புகளை வலுப்படுத்திய முன்னோடியும் அவரே!

● எளிமைக்கு உதாரணம் அவர். அவரது காருடன் ஒரே ஒரு பாதுகாப்பு அதிகாரி மோட்டார் சைக்கிளில் வருவார். அவ்வளவுதான். கான்வாய் போல வரிசையாய் கார்கள், ஜீப்கள் கூடவே செல்லுவது என்பது அங்கே நினைத்துக்கூட பார்க்க முடியாத விஷயம். இதைவிட ஆச்சரியம், முதல்வரின் கார், ஒவ்வொரு சிக்னலிலும் நின்று, பச்சை விளக்கு வந்தபின்னரே புறப்படும். இதைவிட ஆச்சரியம், தலைமைச் செயலகம் உள்ள ரைட்டர்ஸ் பில்டிங்கில் வந்து இறங்கியதும், தாமே லிஃப்ட் வரை நடந்து போய், பொத்தானை அழுத்திவிட்டுக் காத்திருப்பார். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமென்றால், சுதந்தரம் பெற்றபோது, காங்கிரசில் இருந்த தியாக மனப்பான்மை கொண்ட தலைவர்களைப் போன்றவர். இன்றைய அரசியலில் ஒரு அபூர்வப் பிறவி!

— எஸ். சந்திரமௌலி

படம்: ஸ்ரீஹரி

# கல்லைப் பொடி செய்து கடவுள் ஓவியங்கள்!

புத்தாயிரம் ஆண்டின் சித்திரைத் திருவிழாவில் பழைமை மாறாமல் வரவேற்கத் தயாராகிக் கொண்டிருக்கிற மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோவிலின் பொற்றாமரைக் குளத்திற்கு எதிரேயுள்ள சுற்றுப்பிரகார மண்டபம்.

முந்நூறு ஆண்டுகள் பழைமை வாய்ந்த மூலிகைகளால் வரையப்பட்ட இங்குள்ள ஓவியங்கள் புதியதாக வரையப்படுகின்றன.

சுமார் முந்நூற்றி ஐம்பது அடி நீளத்திற்கு ஏழு அடி உயரத்தில் இந்த ஓவியங்கள் வரையப்படுகின்றன. சிவபெருமானின் அறுபத்துநான்கு திருவிளையாடல்களும் முப்பத்துநான்கு பாகங்களாகப் பிரிக்கப்பட்டு, அதை இயற்கை மூலிகைகளால் உயிரோவியங்களாக வரைகிறார் கேரள மாநிலம் குருவாயூரைச் சேர்ந்த ஓவியர் ஜி. வினோத்.

இந்த ஓவியங்களைப் பற்றி அவரிடம் கேட்டபோது,



• மூலிகை ஓவியம்

''ஓவியம் வரைய உள்ள இடம் முதலில் உளியால் கொத்தப்படும். பிறகு கடலிலிருந்து எடுக்கப்பட்ட உயிருள்ள சங்கிலிருந்துத் தயாரிக்கப்பட்ட சுண்ணாம்பு, பழச்சாறுகள், மணல், மூலிகை விதைகள் கலந்த கலவையை மூன்று இஞ்ச் அளவிற்கு அந்த இடத்தில் பூசிப் படம் வரையும் பகுதி தயார் செய்யப்படும்.

''பஞ்சவர்ணங்கள் என்று சொல்லப்படுகின்ற வெள்ளை, மஞ்சள், நீலம், சிவப்பு, பச்சை ஆகிய வண்ணங்களினால் இந்த ஓவியங்கள் வரையப்படுகின்றன. இந்த வண்ணங்கள் அனைத்தும் ஆற்றுப் படுகைகள், மலை முகடுகளில் கிடைக்கும் கற்களிலிருந்து தயாரிக்கப் படுகின்றன.

''ஒரு கிலோ அளவுள்ள கல்லை அரைத்தால் ஒரு கிராம் அளவிற்குத்தான் வண்ணம் கிடைக்கும். இந்தக் கற்களில் பச்சை மற்றும் மஞ்சள் கற்கள் கேரளாவிலும், வெள்ளைக் கல் தமிழ்நாட்டில் கும்பகோணம் பகுதியிலும், சிவப்புக் கற்கள் குற்றாலத்தில் செண்பகாதேவி அருவி பகுதிகளிலும், நீலக்கற்கள் கொல்லூர் மூகாம்பிகை கோவில் பகுதிகளிலுமிருந்து எடுத்து வரப்படுகின்றன.



• ஜி. வினோத்

இந்த இயற்கை கற்களிலிருந்து கிடைக்கும் வண்

ணங்களுடன் இளநீர் மற்றும் கடுக்காய் கலந்த வண்ணக் கலவையைத் தேங்காய் சிரட்டைகளில் வைத்துக் கொண்டு ஓவியங்கள் வரையப்படுகின்றன. எந்த விதத்திலும் இவற்றுடன் தண்ணீர் சேர்க்கப்படுவதில்லை.

"இம்முறையில் வரையப்படும் ஓவியங்களைத் தண்ணீர் படாமல் பாதுகாத்தால் ஐந்நூறு ஆண்டுகள் வரை அப்படியே இருக்கும்" என்றார்.

நான்கு தலைமுறைகளாக ஓவியர்களாக உள்ள குடும்பத்தில் பிறந்து ஒன்பது வயதிலிருந்தே ஓவியங்கள் வரைய ஆரம்பித்தவராம் இந்த வினோத்! முதலில் மூலிகைப் பொடிகளால் தரைகளில் "களம் எழுத்து" என்று கேரளாவில் அழைக்கப்படுகின்ற ஓவியங்களை வரைந்து பிறகு "தாளி சித்ரா" என்ற துணிகளில் வரையப்படும் ஓவியங்களைக் கற்றுக் கொண்டவர். ஓவியத்தில் தேசியப் பட்டயம் (National Diploma in Painting) பெற்றவர்.

இந்தியாவில் உள்ள அனைத்துக் கோவில்களையும் சுற்றி வந்து, ஓவிய முறைகளைக் கண்டறிந்த இவர் உ.பி. மாநிலம் ஹரித்துவார் கோவிலைப் பார்க்கும்போதுதான் பழைமையான ஓவியங்களை வரைய வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டதாகத் தெரிவித்தார்.

"இந்த இயற்கை வண்ண ஓவிய முறைகளை குருவாயூர் அருகேயுள்ள குரு பொம்பியூர் என்பவரிடம் ஐந்து ஆண்டுகள் குருகுல வாசம் செய்து கற்றுக் கொண்டேன். கேரளாவில் உள்ள வைக்கம் கலைக் கல்லூரியில் எனக்குத் தலைமை பயிற்றுநர் வேலை கிடைத்தது. கல்லூரியில் படிக்கும் மாணவர்களுக்கு நான் சொல்லிக் கொடுக்க முடிந்ததே தவிர... மீண்டும் அந்தக் கலையில் என்னால் ஈடுபடமுடியவில்லை. இந்த "தாந்திரிகக் கலை"யை கடவுளின் அனுக்கிரஹத்தால் படித்தேன். இந்தக் கலை குருகுல வாசம் செய்து படித்தால்தான் கற்றுக் கொள்ள முடியுமே தவிர... கல்லூரி படிப்பில் கற்றுக் கொள்ள முடியாது. கல்லூரி வேலையை ஒரு வருடத்திலேயே ராஜினாமா செய்துவிட்டேன்.



• ஓவியம் வரையப்படும் மண்டபம்

"அப்போதுதான் 1994ஆம் ஆண்டு குருவாயூர் கோவிலில் காஞ்சி மடாதிபதி ஜெயேந்திர சரசுவதி சுவாமிகளை தரிசிக்கும் வாய்ப்பு கிடைத்தது. அவர்கள் மூலமாகத்தான் மதுரையில் இந்த ஓவியங்களை வரையும் பணி கிடைத்தது. சங்கம் வைத்து தமிழ் வளர்த்த இடம்... இறைவனே மக்களோடு மக்களாகத் திருவிளையாடல்கள் நிகழ்த்திய இடம்... இந்த இடத்தில் அந்தத் திருவிளையாடல்களை ஓவியமாக வரையும் பணி மனத்துக்கு சந்தோஷமாக இருக்கிறது...



"முதல் ஓவியமும்,

சுற்றுச் சுவரை ஓவியம் வரையத் தயார் படுத்தும் வேலையும்தான் அதிக காலம் பிடிச்சது... சித்திரைத் திருவிழாவுக்குள்ளே இந்தப் பணி முடிந்துவிடும்... என்னோட சிஷ்யர்கள் ஐந்து பேர்களும் இந்தப் பணியிலே இருக்காங்க....

"மதுரையில் இந்தப் பணியை ஆரம்பித்தவுடன் ஏராளமான கடிதங்களும், பாராட்டுக்களும் தினமும் வருகின்றன. நிறைய பேர்... வெவ்வேறு இடங்களுக்கு இது போல ஓவியங்கள் வரைய அழைக்கிறாங்க... வெளிநாட்டவர்கள் நிறைய பேரும் என்னிடம் இதுபற்றி கேட்கிறாங்க... அவர்களுக்கும் ஓரளவு வழிகாட்டுகிறேன்.

"முறையான சாஸ்த்திரப்படி இந்த ஓவியங்கள் வரையப்படுகின்றன... மீடியாக்களிலும், மேற்கத்திய மோகங்களிலும் சிக்கித் தவிக்கின்றனர் நம் மக்கள். முந்நூறு ஆண்டு காலத்துக்கு முன்பு இந்த ஓவியங்களுக்கு எவ்வளவு வரவேற்பு இருந்ததோ... அதே வரவேற்பும், சந்தோஷமும் நம் மக்கள் இந்த ஓவியங்களின் மீது என்று காட்டுகின்றார்களோ அன்றுதான் இந்தப் பணியின் வெற்றி எனக்கு" என்று சொல்லும் வினோத், தாம் வரைந்த எந்த ஓவியத்தின் அடியிலும் தமது பெயரை எழுதுவதில்லை என்ற கொள்கையுடையவர்... இறைவன்தான் எல்லாம். அவர் ஆட்டுவிக்கிறார்... நான் ஆடுகிறேன் என்கிறார்...

"பழமையான ஓவியங்களை மரபு மாறாமல் மீண்டும் இந்தத் தலைமுறைக்குத் தருவதைத்தான் என்னுடைய வாழ்க்கைப் பணியாக ஏற்றுக் கொண்டுள்ளேன்... இந்தப் பணியில் எனக்கு உதவியாக என்னுடைய தந்தை இருக்கிறார். திருமணம் குடும்பம் என்ற வட்டத்துக்குள் சிக்கிக் கொள்ள விரும்பவில்லை" என்று சொல்லும் இந்த பிரம்மச்சாரிக்கு வயது இருபத்திஒன்பது.

"மொத்தம் இருபத்து ஆறு லட்சத்து இருபத்தைந்தாயிரம் ரூபாய் மதிப்பீட்டில் இந்தப் பணி நடைபெறுகிறது. இதில் பொது மக்கள் நன்கொடைகள் மூலம் பதினோறு லட்சங்களும், மீனாட்சியம்மன் திருக்கோயில் திருப்பணி கணக்கிலிருந்து பதினான்கு லட்சத்து இருபத்தைந்தாயிரம் ரூபாயும் ஒதுக்கப்பட்டு செலவிடப் படுகிறது. எதிர் காலத்தில் இந்த ஓவியங்களைப் பராமரிப்பதற்காக ஓவியங்களைச் சுற்றி அலுமினிய தகடுகள் பொருத்தப்பட்டு கண்ணாடி பிரேம் செய்யப்பட உள்ளது. ஏற்கெனவே வரைந்த ஓவியங்களைப் புதுப்பிக்கும் பணியல்ல இது... ஓவியங்களைப் புதியதாகவே வரையும் பணி..." என்றார் மீனாட்சியம்மன் கோவிலின் தக்காரும், நிர்வாக அதிகாரியுமான போ.ராமராஜு. இந்த ஓவியங்களின் செய்முறைகள் எதிர்காலத் தலை முறைகளுக்குப் பயன்படும் வகையில் திருக்கோயிலின் ஆவணமாகப் பேணப்படுமா? என்று கேட்டபோது, "செய்யப்படும்" என்று சொல்லியவாறே தமது உதவியாளரை அழைத்து அதற்குரிய நடவடிக்கை எடுக்க உடனே உத்தரவிட்டார்!

• போ. ராமராஜு



— கி. சிங்காரவடிவேல்

படங்கள்: செ. செந்தில்குமார்

---

"ஏன் உங்க உடம்பு நடுங்குது?"

"எனக்கு நடக்கிற முதல் ஆபரேஷன்"

"எனக்கு நடக்கிற முதல் ஆபரேஷன் டாக்டர் இது. அதனாலதான். அதிருக்கட்டும் உங்க உடம்பு ஏன் டாக்டர் நடுங்குது?"

"எனக்கும் இதுதானே முதல் ஆபரேஷன்!"

தஞ்சாவூர் அசோக்ராஜ்



அரசியலுக்கு முடிவு கட்டவும் புரட்சித் தலைவரின் விருப்பப்படி ஜெயலலிதாவை அரசியல் அரங்கிலிருந்து அகற்றவும் ஆரம்பிக்கப்பட்டது.



கடந்த சட்டமன்றத் தேர்தலில் எம்.ஜி.ஆர். கழகம் நடத்திய மாபெரும் ஊழல் எதிர்ப்பு இயக்கம் அதன் வெற்றிக்கு ஓர் அடித்தளமாக அமைந்தது என்று சொல்ல வேண்டும். திராவிட இயக்கத்தின் இமயம் போன்ற தலைவர் கலைஞர் தலைமையில், புரட்சித்தலைவர் பொருளாளராக வளர்த்தத் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு எங்கள் ஆதரவைத் தந்து ஊழல் எதிர்ப்புப் போரில் எம்.ஜி.ஆர். கழகம் அணிவகுத்து நின்றது. இந்த அரசியல் முடிவுதான், தமிழ் மாநில காங்கிரஸ் தோன்ற அடிப்படையாக அமைந்தது. சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்தை அரசியல் குறித்துப் பேச வைத்தது.

பிறகு கலைஞர் தலைமையில் தி.மு.க. அரசு அமைந்தது. அதோடு எங்கள் பணி முடியவில்லை. 96-ம் ஆண்டு ஜூலை 6ம் தேதி சென்னையில் ஒரு மாபெரும் ஊழல் எதிர்ப்புப் பேரணி நடத்தி, முன்னாள் முதல்வர் ஜெயலலிதாவின் ஊழல்களை நீதிமன்றத்தின் முன் வைக்க வேண்டும் - விசாரிக்கப்பட வேண்டும் - உரிய தண்டனை வழங்க வேண்டும் என்ற கோரிக்கைகளை வைத்து, அதற்காக "தனிநீதிமன்றம்" அமைக்க வேண்டுமென்ற கோரிக்கையையும் வைத்து, முதல்வர் கலைஞரிடம் மனு ஒன்று வழங்கப்பட்டது. பின்னர், தனி நீதிமன்றங்கள் அமைக்கப்பட்டன.

அரசியலில் அராஜகம், அநாகரீகம்,

# "நாகரிக

எம்.ஜி.ஆர். புகழைக் காக்க, 1995 அக்டோபர் 17ம் நாள் தொடங்கப் பெற்றது எம்.ஜி.ஆர். கழகம்.

வழக்கமான அரசியல் இயக்கங்களைப் போல, தேர்தலில் போட்டியிட்டு, சட்டமன்ற இடங்களைப் பெறுவதற்காக மட்டும் தொடங்கப் பெறவில்லை.

புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். பெயரைப் பயன்படுத்தி, அவர் உருவாக்கி வளர்த்த ஒரு பேரியக்கத்தை அபகரித்து, அந்த இயக்கத்தின் பெயரால் அதிகாரத்தை வைத்துக் கொண்டு 1991 முதல் 1996 வரை தமிழகத்தில் ஜெயலலிதா நடத்திய அராஜகம், அநீதி, ஊழல் ஆகிய அரசியல் வெறியாட்டங்களைத் தடுத்து நிறுத்தவும் அந்த அராஜக

ஊழல் ஒழிப்பு - எம்.ஜி.ஆர். புகழ் காக்கின்ற பணி என்ற கொள்கைகளை முன்னிறுத்திய எம்.ஜி.ஆர். கழகம் - ஈரோடு மாவட்டம் கோபியில் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆரின் முழு உருவ வெண்கலச் சிலையை 17.1.1988 தேதியன்று தமிழக முதல்வர் மற்றும் த.மா.கா. தலைவர் மூப்பனார் கலந்து கொண்ட விழாவில் திறந்து வைத்தது.

பிறகு 5.12.1999 தேதியன்று நெல்லையில் நடைபெற்ற எம்.ஜி.ஆர். கழக சிறப்புக் கூட்டத்தில் புரட்சித் தலைவரின் முழு உருவச் சிலை த.மா.கா. தலைவர் மூப்பனார் கலந்து கொள்ள, தமிழக முதல்வர் கலைஞ ரால் திறந்து வைக்கப்பட்டது. புரட்சித் தலைவரின் மூன்றாவது வெண்கலச் சிலை இராமநாதபுரம் நகரில் 2001ம் ஆண்டு புரட்சித் தலைவரின் பிறந்த நாளன்று திறந்து வைக்கப்பட உள்ளது.

மேலும், 1999ம் ஆண்டு நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலில், தேசிய ஜன நாயகக் கூட்டணியில் போட்டியிட்டு அரக்கோணம் தொகுதியில் எம்.ஜி.ஆர். கழகம் வெற்றி பெற்றது. 1996ம் ஆண்டு நடைபெற்ற உள்ளாட்சி மன்றத் தேர்தலில் தி.மு.க. கூட்டணியில் இடம்பெற்று, பெரம்ப லூர் மாவட்ட ஊராட்சி மன்றத் தலைவர் மற்றும், நான்கு மாநகராட்சிகளில், நகராட்சி களில் உறுப்பினர்களையும் பெற்றிருக்கிறது.

எம்.ஜி.ஆர். கழகம் தான் எடுத்துக் கொண்ட கொள்கை வழியில் நின்று தமிழகத்தில் ஊழல் பெருச்சாளிகளின் முகமூடியைக் கிழித்துக் காட்டுவதில் இன்றைக்கு வெற்றி பெற்றுள்ளது என்று சொல்ல வேண்டும். எத்தனையோ அகடவிகடங்களைச் செய்து தனிநீதி மன்றங்களின் தீர்ப்பை தள்ளிப் போட்டு விடலாம் என்று முன்னாள் முதல்வர் ஜெயலலிதா செய்த முயற்சிகள் தோல்வி கண்டு, "அறம் வெல்லும் - பாவம் தோற் கும்" என்ற கம்பன் கூற்றுக்கிணங்க ஜெய லலிதாவிற்குத் தண்டனை கிடைத்துள்ளது.

ஆனாலும், ஊழல் சக்தியின் கொக்கரிப் பும், ஆணவமும் அடங்கிவிடவில்லை. அரசியல் தடுமாற்றங்களினால் - பதவி ஆசைகளினால் - ஊழலை எதிர்த்தவர்கள் கூட சட்டமன்றங்களில் சில இடங்களுக் காக, அற்பமான பதவிகளுக்காக, ஊழலை ஆதரிக்கின்ற போக்கு இன்றைக்குத் தமிழ்நாட்டில் ஏற்பட்டிருப்பது ஒரு மாபெரும் அரசியல் விபத்தாகும். வரலாற்று வீழ்ச்சி என்றும் சொல்ல வேண்டும். இந்த நேரத்தில் தமிழ் மக்களின் நலன் காக்கும் ஒரே சக்தியாக விளங்குவது தலைவர் கலைஞரின் தலைமைதான்.

எனவே இன்றைய நிலையில் தமிழ் மக்களின் மரபுகளையும் மாண்புகளையும் இழிவுபடுத்தி, ஊழலின் மொத்தவடிவமாக விளங்கும் ஜெயலலிதா என்ற அராஜக சக்தியை அரசியலி லிருந்து அப்புறப்படுத்துகின்ற பணிதான் மக்களின் தலையாய இலட்சியம்.

இராம வீரப்பன்



# "அரசியலே குறிக்கோள்!"

புரட்சித் தலைவர் தன்னுடைய இறுதி நாட்களில் எந்தத் தீமையை எல்லோருக்கும் அடையாளம் காட்டி, அரசியலில் இருந்து அப்புறப்படுத்த வேண்டுமென்று விரும் பினாரோ அந்த இலட்சியத்தை நிறைவேற்று வதுதான் எம்.ஜி.ஆர். கழகத்தின் குறிக் கோள். இதன் மூலம் 'நாகரிக அரசியல்' 'ஜன நாயகப் பண்புமிக்க அரசியல்', 'அறம் காக்கும் அரசியல்' தமிழகத்தில் நிலைக்க எம்.ஜி.ஆர். கழகம் பாடுபடும். இதுதான் வரும் தேர்தலில் எம்.ஜி.ஆர். கழகத்தின் குறிக்கோள். ●



# பத்து, ஜன்பத்துக்குப் பக்கத்து வீடு!

"தேர்தல் பிரசார குழுவினரும் என் மாமனாரோடு சேர்ந்து ஒரு முறை வீட்டில் சாப்பிட வந்தார்கள். என் மாமியார் தன் கணவருக்கு என்று தனியாகக் கொஞ்சம் கோதுமை மாவை எடுத்து வைத்திருந்ததைப் பார்த்து, என்னமோ உங்கள் கணவருக்கு மட்டும் நெய்யெல்லாம் விட்டு ஸ்பெஷலா சப்பாத்தி மாவா? என்று கேட்க, என் மாமியார் "நீங்க வேற இந்த மாவு அவர் சொந்த சம்பாத்தியத்தில் வாங்கியது. உங்களுக்காகப் பிசைந்த மாவு தேர்தல் நிதியி லிருந்து வாங்கியது'' என்றார்.

"மாமியார் - மாமனார் இருவரின் அம்மாக்களும் சிறுவயதிலிருந்தே தோழிகள். சுதந்தரப் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபடும் எண்ணம் இருந்ததால் மாமனார் திருமணத்தைப் பற்றி அக்கறை கொள்ளவில்லை. என் மாமியாருக்கு அவரைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற விருப்பம். மாமியாரின் வீட்டில் வரன் பார்க்கத் தொடங்கினார்கள். ''இந்த இடத்தை முடிச்சிடலாம்னு தோணுது" என்று தன் பெற்றோர் பேசினால், உடனே என் மாமியார் தன்னிடமிருந்த சிவலிங்கம் ஒன்றைச் சின்ன சொம்பில் உள்ள தண்ணீரில் போட்டு விடுவாராம். 'இந்த இடம் எனக்குத் தகையாமல் போனால்தான் உன்னைத் தண்ணீரிலிருந்து எடுப்பேன்' என்று வேண்டிக் கொள்வாராம். இப்படி சில தடவை ஆன பிறகு திருமணத்திற்குச் சம்மதம் தெரிவிக்க, அதற்குப் பிறகுதான் சிவபெருமான் தண்ணீர் கண்டத்திலிருந்து தப்பித்தார்."

- இவ்வாறு தமது குடும்ப நினைவுகளைப் பகிர்ந்து கொண்டவர் நீரஜா சாஸ்திரி. லால்பகதூர் சாஸ்திரியின் மருமகள்.

நீரஜா சாஸ்திரி இன்று பி.ஜே.பி. (டெல்லி) மகளிர் அணியின் தலைவி. டாட்டா நிறுவன பணியை ராஜினாமா செய்து விட்டார். சோனியா காந்தியின் அண்டை வீட்டில் வசிக்கிறார் (10, ஜன்பத்துக்குப் பக்கத்து வீடு). தாம் வசிக்கும் வீட்டை சாஸ்திரியின் நினைவு இல்லமாக்க வேண்டும் என்று முயன்று வெற்றி பெற்றிருக்கிறார்.

"ஒரு நாள் என் மாமனார் தம் செயலாளருடன் வீட்டுக்கு வந்தபோது என் மாமியார் வெளியே போயிருந்தார். செயலாளரிடம் சமையலறைக்குச் சென்று தமது மனைவி தனக்காக வைத்திருக்கக் கூடிய உணவைக் கொண்டுவரச் சொன்னார். உள்ளே சென்று வந்த காரியதரசி, "உணவு எதுவுமில்லை" என்றார். சமையலறையில் இரண்டு சப்பாத்திகளும் கொஞ்சம் உருளைக் கிழங்கும் மட்டும் இருந்ததை அவர் பார்த்திருந்தாலும் அது ஏதோ வேலைக்காரருக்காக எடுத்து வைத்தது என்று நினைத்துவிட்டார். அதுதான் தனக்கான உணவு என்று என் மாமனார் கூறியதும் காரியதரிசியின் வியப்பு அடங்கவில்லை. ஒரு மத்திய அமைச்சர் அவ்வளவு எளிமையான உணவை உண்பார் என்று யார் தான் எதிர்பார்த்திருக்க முடியும்?

"என் மாமனார் டெல்லி சாலைகளில் வாக்கிங் போவார். சில இளைஞர்கள் அவரை முதுகில் தட்டிக் கொடுத்துவிட்டு ''நீங்கள் பிரதமரைப் போலவே இருக்கிறீர்கள்" என்று கூற, ''நான்தான் பிரதமர்'' என்று இவர் கூற, அவர்கள் வெலவெலத்துப் போனார்கள். இது போன்ற நிகழ்ச்சிகள் அடிக்கடி நடந்ததுண்டு.

- ஜி.

படம் : ஸ்ரீஹரி

# தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

# பவர்ஃபைனான்ஸ்

நடத்தும்

## டெபாசிட் திரட்டும் முகாம்

உள்ளூர் காசோலை ஏற்றுக்கொள்ளப்படும்

| தஞ்சாவூர் | புதுக்கோட்டை |
|---|---|
| நாள் : 17, நவம்பர், 2000. | நாள் : 18, நவம்பர், 2000. |
| இராமநாதன் மன்றம், | புதுக்கோட்டை மாவட்ட வர்த்தக கழகம், |
| காந்தி சாலை, | சில்வர் ஹால், மேலராஜ வீதி, |
| (பழைய பஸ் நிலையம் அருகில்) | (தலைமை தபால் நிலையம் எதிரில்) |
| தஞ்சாவூர். | புதுக்கோட்டை - 622 001. |
| தொலைபேசி : 30068 | தொலைபேசி : 22777 |

**நேரம் : காலை 9 மணி முதல் மாலை 7 மணி வரை**

## 12.12%

12 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 10.59%.
24 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 11.10%
36, 48, 60 மாதங்களுக்கு மாதத்திற்கு வட்டி 12.00%,
காலாண்டிற்கு வட்டி 12.12%.

## 16.34%

60 மாதங்களுக்கு
(மாதாந்திர கூட்டுவட்டி
ஆண்டிற்கு 12.00%)




*மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :*

**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

பதிவு அலுவலகம் : எண் 84, டி.டி.கே சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894.

30-9-2000 தேதியிட்ட எகனாமிக் டைம்ஸ் இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது

Visit us at : www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com / www.southindia.com / www.webulagam.com

தென் தமிழ்நாட்டுப் பெண் ஒருத்தி, காஷ்மீருக்குப் புதுக் கணவருடன் போன கையோடு, தீவிரவாதிகளால் கணவன் கடத்தப்பட்டுவிட, அவள் சந்திக்கும் பிரச்னைகளை மணிரத்னம் 'ரோஜா' என்று சினிமாவாக எடுத்தார். இப்போது, காஷ்மீரைச் சேர்ந்தவரான விது வினோத் சோப்ரா, காஷ்மீர் பிரச்னையை மையப்படுத்தி 'மிஷன் காஷ்மீர்' என்ற படத்தை எடுத்திருக்கிறார்.

''இந்தப் படம், இந்தியா ஆதரவுப் படமும் இல்லை; பாகிஸ்தான் எதிர்ப்புப் படமும் இல்லை; காஷ்மீரத்து மக்களின் துயரத்தை வெளிப்படுத்தும் படம்'' என்கிறார் விது வினோத்



## மிஷன் காஷ்மீர்:

# வில்லாதி ஹீரோ ஹிர்த்திக்!

சோப்ரா. ''நான் இந்துவும் இல்லை; முஸ்லிமும் இல்லை. நான் ஒரு காஷ்மீரி. காஷ்மீரின் ஹஸ்ரத்பால் உள்ளிட்ட பல முஸ்லிம் புனிதத் தலங்களில் நான் பிரார்த்தனை செய்திருக்கிறேன். என் பால பருவத்தில் மதவேறுபாடு என்பது நான் அறிந்திராத ஒன்று. வளர்ந்தபின், மும்பை வந்தபோதுதான் நான் மதத்தின் பேரால் மக்கள் தங்களுக்குள் மோதிக் கொள்ளுவதைப் பார்த்தேன். காஷ்மீரில் மதக் கலவரம் நடந்தது கிடையாது.''



• விது வினோத் சோப்ரா

மிஷன் காஷ்மீர் படத்தை எடுக்கத் திட்டமிட்டபோது, ''எதற்காக அனாவசியமாக, பிரச்னையை விலை கொடுத்து வாங்குகிறீர்கள்? சென்சாரில் படம் தடை செய்யப்பட்டால், பெரும் முதலீடு செய்துள்ள உங்களால் தாக்குப் பிடிக்க முடியாது. இந்தக் கதையை விட்டுவிட்டு, ஹிர்த்திக்-பிரீத்தி ஜிந்தா ஜோடி நடிக்கும் வேறு ஒரு சிம்பிள் லவ் ஸ்டோரி பண்ணுங்கள்' என்று நண்பர்கள் பலரும் அறிவுரை சொன்னார்களாம் டைரக்டரிடம். சாதாரண காதல் கதையையே சுதந்திரப் போராட்டப் பின்னணியில் 1942 லவ் ஸ்டோரி எடுத்த டைரக்டரிடம் இப்படிச்



சொன்னால் கேட்பாரா என்ன? நல்ல கதை தேடி அலைய ஆரம்பித்தார். கதாசிரியர் விக்ரம் சந்திரா சொன்ன கரு, இவரது மனத்தில் பொறிதட்டிவிட, இரண்டு பேரும் உட்கார்ந்து, பேசி, கதையைத் தயார் படுத்திவிட்டார்கள்.

அப்பா, அம்மா, ஒரே மகன் என்று சந்தோஷமான குடும்பம். தீவிரவாதிகளின் தாக்குதலின்போது, அப்பா, அம்மாவைப் பறிகொடுத்துவிட்டு, அனாதையாக நிற்கிறான் மகன் அல்டாஃப். ஆதரவற்ற அல்டாஃபை, அன்புகாட்டி, அரவணைத்து, வளர்க்கிறார் போலீஸ்காரர் இனாயத்கான். வளர்ந்த அல்டாஃப், ஒரு நாள் தீவிரவாதிகள் தாக்குதலின்போது, சம்பவத்துக்குச் சற்றும் சம்பந்தமில்லாத தனது அப்பா, அம்மாவைக் கொன்றது போலீஸ்காரர் இனாயத்கான்தான் என அறிகிறான். அதிர்ச்சியடைகிறான்; ஆர்ப்பரித்து எழுகிறான். பெற்றோர் கொல்லப்பட்டபோது, இனாயத்கான் அணிந்திருந்த முகமூடியை எடுத்து அணிந்து கொண்டு, மௌனமாய் வீட்டை விட்டுப் வெளியேறுகிறான் இந்த வில்லாதி ஹீரோ ஹிர்த்திக்.

பத்து வருடங்கள் பறந்தோடி விடுகின்றன. காஷ்மீரை அமைதிப்பூங்காவாய் மாற்றும் லட்சியத்தோடு இயங்கும் கொரில்லா இயக்கம் ஒன்றிற்கு லட்சியத் துடிப்புள்ள இளைஞன் ஒருவன் தேவைப்படுகிறான். அவர்களைச்





சந்திக்கிறான் அல்டாஃப்.
கொரில்லாப்படை தனது இலக்கை நோக்கிப் புறப்படுகிறது. இந்தத் திட்டத்துக்கு வைக்கப்பட்ட ரகசியப் பெயர்தான் 'மிஷன் காஷ்மீர்'!

தான் இளம் வயதில் விளையாடித் திரிந்த ஸ்ரீநகரின் தெருக்களில் மறுபடி நடந்து போகிறபோது, பசுமையான பழைய நினைவுகள். இளம் வயதில் தன் மனம் கவர்ந்த சுஃபியைச் சந்திக்கிறான். அவள் இப்போது துடிப்பான, டீ.வி. ரிப்போர்ட்டர்.

அல்டாஃபும், அவன் பழிவாங்கத் துடிக்கும் இனாயத்கானும் நேருக்கு நேர் மோதிக் கொள்ளுகிறார்கள் கிளைமாக்ஸில். ஆனால், இனாயத்கான், திட்டமிட்டுத் தன்னுடைய பெற்றோரைக் கொல்லவில்லையென அறிகிறான் அல்டாஃப். எனவே பழிவாங்கும் படலம் அரங்கேறாமல் போய்விடுகிறது.

"கதையில் புதுசாக ஒன்றும் இல்லை; வழக்கமான பார்முலாதான்; கதைக் களமாக காஷ்மீரைக் காட்டியிருப்பதுதான் கொஞ்சம் புதுசு" என்று இலேசாய்ச் சலித்துக் கொள்ளுகிறது மும்பை விமர்சன வட்டாரம். ஆனால், படம் ஹிட்! உலகெங்கிலும் ரிலீஸ் ஆகியிருக்கிறது.

"உலக அரங்கில் காஷ்மீர் பிரச்னையை எழுப்பி, தனக்கு ஆதரவு தேடும் முயற்சியில் பாகிஸ்தான் ஈடுபட்டிருக்கும் வேளையில் நீங்களும் உலகளாவிய திரையீடு மூலம் அனைவரது கவனத்தையும் கவர்ந்து பணம் சம்பாதிக்க முயற்சி செய்கிறீர்களா? என்று டைரக்டரிடம் கேட்டால், இலேசாய்க் கோபப்படுகிறார்.

"பணம் சம்பாதிப்பது என் நோக்கமில்லை. உலகத் தரத்துக்குப் படம் எடுப்பதுதான் என் நோக்கம். இல்லையெனில் படத்தின் சவுண்டு மிக்ஸிங்கிற்காக லண்டனுக்குப் போயிருக்க மாட்டேன். இங்கேயே மிக்ஸிங் பண்ணியிருந்தால், ஐந்தாறு லட்சத்திலேயே வேலை முடிந்திருக்கும். ஆனால் நான் சுமார் எழுபத்தி இரண்டு லட்சம் ரூபாய் அதற்காக செலவழித்திருக்கிறேன் என்றால் என்ன காரணம்? நான் ஒரு பர்பெக்ஷனிஸ்ட்! உலகத்தரத்துக்குப் படம் எடுக்க இந்தியராலும் முடியும் என்று உலகிற்கு நிருபணம் செய்யத்தான் லண்டனிலும், நியூயார்க்கிலும் திரையிட ஏற்பாடு செய்து வருகிறேன்" என்கிறார்.

இந்தப் படத்தை எடுக்க ஆரம்பித்தபோது டைரக்டர் கம் தயாரிப்பாளரான விது வினோத் சோப்ராவின் கையில் பணமில்லை. காரணம், போன படம்(கரீப்) அடைந்த தோல்வியினால் ஏற்பட்ட நஷ்டம். அதன்பின் ஒரு விளம்பரப்படம் எடுக்க வாய்ப்பு கிடைத்தது. அதில் சம்பாதித்த பணத்தை வைத்துக் கொண்டு இப்படத்தை ஆரம்பித்தார். இது ஒரு பெரிய பட்ஜெட் படம்தான் என்றாலும், லாபம் சம்பாதிக்க முடியும் என்கிற அவரது நம்பிக்கை பொய்த்துவிடவில்லை.

படத்துக்கு சங்கர் மகாதேவன், எசான், லாய் என மூன்று வெவ்வேறு மதத்தைச் சேர்ந்தவர்கள் இசையமைத்திருக்கிறார்கள். ஸ்ரீநகரின் தால் ஏரி, ஹஸ்ரத்பால், ஆகிய இடங்களிலும், மும்பையிலும் படம் பிடிக்கப்பட்டது. படத்தில் காஷ்மீரி கிராமியப் பாடல்களுக்குத் தனி முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது.

**— கௌதம்ராம்**



''கல்யாணத்துல 'ஜோடிப் பொருத்தம்'ன்னா இப்படில இருக்கணும்!''

''பொண்ணு மாப்பிள்ளையைச் சொல்றீங்களா?''

''இல்லீங்க! எனக்குக் கிடைத்த ஐந்நூறு ரூபா செருப்பைச் சொல்றேன்!''

– தேனி எஸ். மாரியப்பன்

✉ கல்கி இன்று இருந்தால் என்ன சொல்லி இருப்பாரோ அதையேதான் கல்கி தலையங்கமாகத் தீட்டியுள்ளது. விடாக் கண்டன் வீரப்பன், கொடாக் கண்டன் சுப்ரீம் கோர்ட். சுப்ரீம் கோர்ட் நீதிபதிகள் மனிதநேயம் மிக்கவர்களாக மாற வேண்டும். வித்தகம் பேசும் நேரம் இது அல்ல.
**மறைமலைநகர், க. மணிஅரசு**

✉ சுமியின் மறுபிரவேசம் எங்களை மகிழ்ச்சிப்படுத்தியிருக்கிறது. வரவேற்கிறோம். சுமி வந்த முதல் வாரத்திலேயே அசத்தியிருந்தார். பெண்கள் வேலைக்குப் போவதில் நிச்சயம் தவறில்லை. பெண்கள் வேலைக்குப் போகக்கூடாது என்று சொன்னால், எங்களுக்கு சுமியின் எழுத்துக்கள் படிக்கக் கிடைக்காதே!
**ஈரோடு, க.நா. இராஜேஸ்வரன்**

# பாங்க் லாக்கரிலே...!

✉ செய்தியா? சித்ரவதையா? இதழியல் பிரிவு மாணவர்களின் உபயோகமான அலசலை அரசும், சாட்டிலைட் சேனல்களும் செவி சாய்த்து வன்முறையின் வலிமையைக் குறைக்க ஆவன செய்ய வேண்டும்.
**நெய்வேலி, ஸ்ரீகாந்த்**

✉ தமிழக அரசு இன்னும் அகவிலைப்படியை உயர்த்தவில்லையே என்று நாங்கள் மனம் நொந்திருக்கும் வேளையில் தங்கம், வைரம் என்று எழுதி எங்கள் வயிற்றெரிச்சலை ஏன்யா கொட்டிக் கொள்றீர்கள்!
**சென்னை, புளியறை கணேசன்**

✉ சென்னை பனகல் பூங்காவிலிருந்து தி.நகர் பஸ் ஸ்டாண்ட் வரை பொடி நடையாக நடந்தபடி அடுத்தடுத்து இருக்கும் நகைக் கடைகளில் ஏறி இறங்கினால் வரும் மன கிளுகிளுப்பு அப்படியே இந்த வார தீபாவளி சிறப்பிதழில் பக்கத்திற்குப் பக்கம் தங்கமும் - வைரமும். பாங்க் லாக்கரில் வைக்க வேண்டிய சிறப்பிதழ்.
**வியாசர் காலனி, சுகந்தி நாராயண்**

✉ வீரப்பனது கெடுபிடிகளைக் களைவதில் மெத்தனம் காட்டியதன் பலனாக நீதிக்கு முன் குற்றவாளிகளாய்த் தலை குனிந்து இருதலைக் கொள்ளி எறும்பெனக் கைகட்டி வாய் பொத்தி நிற்கின்ற அவலம் இரு மாநில முதல்வர்கட்கு! இரண்டரை மாதங்களாக ராஜ்குமாரை விடுவிப்பதற்கான வழிவகுக்காமல் சட்டம் பேசி வருகிற உச்ச நீதிமன்றம் பிரச்னைக்குத் தீர்வு காண உதவாததை தலையங்கத்தில் சரியாகக் காண்பித்துள்ளீர்கள்.
**மணியாச்சி, ச.ஆ.கேசவன்**

✉ நல்ல வைரத்திற்கு நாலு 'சி' கட்டுரை பயனுள்ளது. இந்தியாவில் தயாராகும் வைரத்திற்கு உள் நாட்டிலும் வெளி நாட்டிலும் நல்ல கிராக்கி என்பதைப் படிக்கும்போது மனத்திற்கு ரொம்ப சந்தோஷமாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கிறது சார்!
**லால்குடி, இராஜேந்திரன்**

✉ 'பாராளுமன்றத்துக்கு வந்த குரோர்பதி' கட்டுரை வரவேற்கத்தக்கது. நிகழ்ச்சி நடந்த அன்றே நாங்கள் அந்தத் தவறை கவனித்தோம். அது மட்டுமல்ல, சில நாட்களுக்கு முன்பு நம் நாட்டின் தென் கோடி முனைக்கு மிக அருகில் உள்ள நாடு எது? என்று ஒரு கேள்வி. இதற்கு கம்ப்யூட்டர் கூறிய பதில் இந்தோனேஷியா. எங்களுக்கு இப்பொழுது கூட குழப்பமாகத்தான் இருக்கிறது. இந்தியாவின் தென் கோடி என்றால் கன்னியாகுமரி. அதற்கு மிக அருகில் உள்ள நாடு ஸ்ரீலங்கா. ஆனால் அமிதாப் பச்சன் இந்தியில் கூறிய பதிலில் இருந்து அந்தமான் நிக்கோபார் தீவுகளுக்கு மிகவும் அருகில் இருப்பதால் சரியான பதில் இந்தோனேஷியாதான் என்றார்.
**சென்னை, கோபாலன்**

வட்டமேஜை



2000 நவம்பர் 12
விக்ரம ஐப்பசி 27
மலர் : 59
இதழ் : 15

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## ஜால்ரா போடாத ஜிதேந்திரா!

சோனியா காந்திக்காக எண்பத்திரண்டு வேட்பு மனுக்கள் தாக்கலாகியுள்ளன. ஜிதேந்திர பிரசாதாவுக்கு ஆதரவாகத் தாக்கல் செய்யப்பட்டவையோ ஐந்தே ஐந்து மனுக்கள்தான். காங்கிரஸ் தலைவர் தேர்தலில் யார் ஜெயிக்கப் போகிறார்கள் என்பதைச் சந்தேகமின்றி யூகித்துவிடலாம். எனினும் குறிஞ்சிப் பூ போல அபூர்வமாக, காங்கிரஸ் தலைமையின் ஏகாதிபத்திய போக்கிற்கு எதிர்ப்பு எழுந்துள்ளது என்பது மிக நல்ல விஷயம். அதிலும் கட்சிக்குள் இருந்தபடியே ஓர் உறுப்பினர் எதிர்ப்பு தெரிவித்திருக்கிறார் என்பது வரவேற்கப்படவேண்டும்.

அதுவும் உணர்ச்சிவசப்பட்ட தனி நபர் எதிர்ப்பாக அன்றி, கொள்கை அடிப்படையிலான எதிர்ப்பு அரும்பி, பதிவும் ஆகியிருக்கிறது.

கட்சி அடிமட்டத் தொண்டர்களின், உறுப்பினர்களின் உழைப்புக்கும் உணர்வுக்கும் மதிப்புக் கொடுத்து காங்கிரஸில் உட்கட்சித் தேர்தல் நடத்தப்படவேண்டும் என்பது ஜிதேந்திர பிரசாதாவின் கோரிக்கை.




'நியமன முறையில் பல நிலைகளில் தலைவர்கள் தேர்வு செய்யப்படும் வழக்கம் முடிவுக்கு வரவேண்டும். பஞ்சாயத்துத் தேர்தல்களிலும் உள்ளாட்சித் தேர்தல்களிலும் வெற்றி காண்கிற காங்கிரஸ், மேல்மட்டத்தில் பல தலைவர்களை மாநிலத் தேர்தல்களில் நிறுத்தி தோல்விதான் காண்கிறது. அடிமட்டத் தொண்டர்களின் முக்கியத்துவத்தை இதிலிருந்தே புரிந்து கொள்ள வேண்டும். அவர்களும் படிப்படியாகக் கட்சியில் உயர்வதற்கு நியாயமான வாய்ப்பளித்து அவர்களையும் கட்சியையும் வளர்க்க வேண்டும்' என்றெல்லாம் விரிவாகவும் நியாயமாகவும் எடுத்துச் சொல்லியிருக்கிறார் பிரசாதா. கட்சியின் சீரமைப்புக்கு ஓர் எட்டு அம்சத் திட்டத்தையும் முன் வைத்திருக்கிறார்.

காங்கிரஸ் தலைவி ஜிதேந்திர பிரசாதாவை அழைத்துப் பேச வேண்டும்; சமரசம் செய்விக்கவேண்டும் என்று விரும்பி கட்சியின் ஒரு பிரிவினர் கடுமையாக முயற்சி செய்திருக்கிறார்கள். ஜிதேந்திர பிரசாதாவும் சோனியாவைச் சந்தித்துத் தமது நிலையை விளக்கத் தயாராயிருந்திருக்கிறார்.

ஆனால், சோனியாவின் அணுக்கத் தொண்டர்கள் குறுக்கிட்டு சமரசத்துக்கு முட்டுக்கட்டை போட்டுவிட்டார்கள்.

மாற்றுக் கருத்துக்களைப் பரிசீலிக்கக்கூட தயாரில்லை என்று வழக்கமான பிடிவாதத்தில் காங்கிரஸ் தலைமை தொடர்கிறது.

பிரசாதாவின் எதிர்ப்பைப் பரிசீலித்திருந்தால் ஆரோக்கியமான உட்கட்சி ஜனநாயகத்துக்கு வழி பிறந்திருக்கும். ஆனால், அதனை ஓரங்கட்டிவிட்டுத்




தொடரும் காங்கிரஸ் தலைமை, கட்சியை சரியான பாதையில் நடத்திச் செல்ல வில்லை.

இந்தியா முழுவதும் பரவலாகத் தனது ஆதிக்கத்தை நிலைநாட்டிய கட்சி காங்கிரஸ். நாட்டின் மிகப் பழைமையான, அனுபவம் மிக்க கட்சியும்கூட. சுதந்தரப் போராட்டத்துடன் தொடர்புடைய காரணத்தால் மூத்த தலைமுறையினர் பலரது உணர்வில் ஊறிப்போன கட்சி. இத்தனை ஆதாயங்கள் இருந்த போதிலும் இக்கட்சி இன்று பலம் பொருந்தியதாக இல்லாமல் போனதற்குக் காரணம் என்ன...? உட்கட்சி ஜனநாயகத்தின் இடத்தைத் தனிநபர் ஆளுமைக்குத் தாரைவார்த்து விட்டமை தான்!

காங்கிரஸ் கட்சி நேரு குடும்பத்துக்குச் சொந்தமானது அல்ல; அதன் நூற்றுக் கணக்கான பெருந்தலைவர்களுக்கோ, ஆயிரக்கணக்கான சிறு தலைவர் களுக்கோ, பல்லாயிரக்கணக்கான உறுப்பினர்களுக்கோகூட உரியது அல்ல.

கோடானு கோடி இந்தியர்களின் பொதுச் சொத்து காங்கிரஸ் கட்சி. அவ்வாறு செயல்பட்ட காலத்தில் கட்சியும் நாடும் கண்ட உயர்வுகள் உன்னதமானவை. இந்த உண்மையை உணராமல் தனிநபர் தலைமைக்கு ஜால்ரா போடும் சுயநலத் தலைவர்கள், கட்சியை வீழ்ச்சி நோக்கி அழைத்துப் போய் கொண்டிருக்கிறார்கள்.

காங்கிரஸின் இன்றையத் தேவை உட்கட்சி ஜனநாயகத்தில் நம்பிக்கை கொண்ட மேலும் பல ஜிதேந்திர பிரசாதாக்கள். ●

# எட்டாத உயரத்தில்

**முதலில் சிங்காரச் சென்னை.**

**பிறகு எழில் மிகு சென்னை... இரண்டாயிரத்துக்குள் எல்லாம் தலைகீழாய் மாறிவிடும் என ஆட்சியாளர்கள் எதிர்பார்த்தார்களோ, இல்லையோ, சென்னைவாசிகள் நிறையவே எதிர்பார்த்தனர். இரண்டாயிரமாவது ஆண்டு விடைபெற ஒரே ஒரு மாதம் மட்டும் எஞ்சியிருக்க, எழில்மிகு சென்னையை எட்டிப்பிடிப்பது இப்போதைக்கு சாத்தியமில்லை என்பது நிரூபணமாகியிருக்கிறது. ஏன் இந்த நிலை? எழில்மிகு சென்னை 2000 திட்டத்திற்கு எதிராகப் பட்டியலிடப்படும் முட்டுக்கட்டைகள் என்ன? முட்டுக்கட்டைகளைக் களைய அரசும், மாநகராட்சியும் என்ன நடவடிக்கை மேற்கொண்டுள்ளன? களத்தில் இறங்கினோம்.**

"சென்னை மாநகரின் திருஷ்டிப் பரிகாரம் போல, கூவம், அடையாறு உள்ளிட்ட நீர்வழிகள் கழிவுநீர் சுமந்து நிற்கின்றன. இவற்றின் கரையோரங்களில் காலங் காலமாய் குடிசைகள். இந்த நீர்வழிகளைச் சுத்தப்படுத்தாமல் எழில் மிகு சென்னை பற்றி கனவுகூட காண முடியாது. மலேரியா, டிங்கு உள்ளிட்ட உயிர் கொல்லி, காய்ச்சல்களை உண்டாக்கும் ஒட்டு மொத்த கொசு உற்பத்திக் கூடமாக, தேங்கிப் போன இந்த நீர்வழிகள் நிலை கொண்டுள்ளன. பொதுப் பணித் துறையின் நிர்வாகத்தில் இருக்கும் இந்த நீர்வழிகள் தூர், அள்ளப்பட்டு பல மாமாங்கம் ஆகிறது. எனவே கொசு ஒழிப்பு மிகப்பெரிய சவாலாகி விட்டது. மாநகராட்சியிடமும் இதற்கென்று பெரிய அளவிலான திட்டம் எதுவு மில்லை" என்கிறார் மாநகர எதிர்க்கட்சித் தலைவரான வெற்றிவேல். இந்த நீர்வழிகளில் பக்கிங்ஹாம் கால்வாயின் ஒரு பகுதி மட்டும் தூர் அள்ளப்பட்டிருக்கிறது. எஞ்சிய பகுதிகளில் தூர் அள்ளிட, கால்வாயின் கரையோர குடிசைகள் பெரும் தடையாக இருக்கின்றன.



• மைலாப்பூரில்

இந்தக் குடிசைகளுக்கான மாற்று வீடுகளை வழங்கும் குடிசை மாற்று வாரியம் என்ன செய்து கொண்டிருக்கிறது? அப்படியொரு வாரியம் உண்மையில் செயல்படுகிறதா என்ற சந்தேகம் தான் நமக்கு மிஞ்சுகிறது. இன்னொரு பக்கம், மாற்றாக ஒதுக்கிடு செய்யப்



# எழில்மிகு சென்னை?

• வெற்றிவேல்

• சுற்றிவரும் கழிவுநீர்

படும் வாரிய வீடுகளை வாடகைக்கு விட்டுவிட்டு, மறுபடியும் வேறெங்காவது குடிசை போட்டு விடுகிறார்கள் அந்த மக்கள். "இதை எப்படித் தடுக்க?" என்று நொந்து கொள்கிறார் வாரியத்தில் பணிபுரியும் ஒரு முதுநிலை அதிகாரி.

குப்பை அகற்றுவதற்காகச் சென்னை மாநகராட்சியால் ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்கும் ஓனிக்ஸ் நிறுவனமும் அதன் ஊழியர்களும், சிறப்பாக செயல்படுகிறார்கள் என்று தொடக்கத்தில் வந்த செய்திகளுக்கு முரணாக இப்போது பல தகவல்கள் நமக்குக் கிடைக்கின்றன.


• எல்லாம் குப்பையாக

"ஓனிக்ஸ் வந்தபிறகு எங்கள் வேலை வாய்ப்பு பறிக்கப்பட்டு விட்டது. எஸ்.சி, எஸ்.டி ஊழியர்கள் ஓய்வு பெற்றால், வாரிசு அடிப்படையில் இப்போது வேலை வாய்ப்பு மறுக்கப்படுகிறது. கட்டட இடிபாடுகளிலிருந்து ஒரு கல் எடுத்துச் சென்றால்கூட எங்களைப் பணி இடை நீக்கம் செய்து விடுகிறார்கள். ஆனால் ஓனிக்ஸ் ஆட்கள், நிறைய இடிபாடுகளை ஏற்றிக்கொண்டு மேலே குப்பையைப் போட்டு மறைத்து எடுத்துச் சென்று விடுகிறார்கள். இதை யாரும் கண்டுகொள்வதில்லை" என்று குமுறுகிறார்கள்


• எப்போதாவது இயங்கும் பெசன்ட் நகர் மின்சார சுடுகாடு



பாரம்பரியமாகக் குப்பை அகற்றும் பணியில் ஈடுபட்டு வரும் மாநகராட்சியின் துப்புரவுத் தொழிலாளர்கள்.

வெற்றிவேலும் இது உண்மைதான் என்கிறார். "ஓனிக்ஸ் நிறுவனத்திற்கு, ஒரு டன் குப்பைக்கு மாநகராட்சி வழங்கும் தொகை ரூபாய் அறுநூற்று நாற்பத்தெட்டு. ஆனால் மாநகராட்சி ஊழியர்களுக்கோ டன்னுக்கு ரூபாய் நூற்று பத்து முதல் நூற்று இருபது வரைதான் கொடுக்கிறார்கள். ஆனால் மாநகராட்சி நிர்ணயித்திருக்கும் 'டார்கெட்' எடையைக் கணக்குக் காட்ட வேண்டும் என்பதற்காக ஓனிக்ஸ் ஊழியர்கள், கட்டட இடிபாடுகளை ஏற்றிச் செல்கிறார்கள். இது மாநகராட்சிக்குத் தெரிந்தும், அதைக் கண்டுகொள்ளவில்லை.

குடிநீரும் சென்னையைப் பொருத்தவரை அடிக்கடி கானல் நீராகி விடுகிறது. "கிருஷ்ணா ஒப்பந்தப்படி ஸ்ரீசைலம் அணையிலிருந்து சோமசிலா, கண்டலேறு வழியாக பூண்டி நீர்த்தேக்கத்திற்குப் பன்னிரண்டு டி.எம்.சி தண்ணீர் திறந்து விட வேண்டும். ஆனால் ஆந்திர அரசு அடிக்கடி காய்ந்துவிடும் கண்டலேறு அணையில் தண்ணீர் இருந்தால் மட்டுமே திறந்து விடுவேன் என்கிறது. இத்தனைக்கும் ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் ஸ்ரீசைலம் அணையின் கொள்ளளவு 368 டி.எம்.சி. பெரும்பாலும் இந்த அணையில் 350 டி.எம்.சி நிரம்பியிருக்கிறது. இதிலிருந்து பன்னிரண்டு டி.எம்.சி திறந்து விடுவது அவர்களுக்கு ஒரு பொருட்டே அல்ல" என்கிறார் சென்னைக் குடிநீர் மற்றும் கழிவு நீர் அகற்று வாரியத்தின் அதிகாரி ஒருவர்.

பிரதான சாலைகளைத் தவிர எஞ்சிய சாலைகளைச் சீரமைக்கும் பணி பல இடங்களில் நடைபெறவே இல்லை. வாகனப் பெருக்கம், சாலைகளின் நிலையை இன்னும் மோசமாக்கி வருகிறது. மினி மேம்பாலங்கள் கட்டப்பட்ட பகுதிகளில் நெரிசல் குறைந்திருப்பது உண்மை என்றாலும் பாலம் தேவைப்படும் பல இடங்கள் தினசரி நெருக்கடிகளைச் சந்தித்து வருகின்றன. பெரம்பூர் மேம்பாலம் நீண்ட காலமாகக் கிடப்பில் போடப்பட்டிருப்பதில் பல்வேறு சிக்கல்கள் இருப்பது தெரிய வந்துள்ளது. ஆனால் மாநகராட்சியின் பாலங்கள் துறை, பெரம்பூர் பாலம் பற்றி கொஞ்சமும் கவலைப்படுவதாகத் தெரியவில்லை என்று குமுறுகிறார்கள் பெரம்பூர்வாசிகள்.

தெருவிளக்குகளின் நிலை பற்றி கேட்க வேண்டாம். தீய்ந்து போன தெருவிளக்குகளை மாற்றிட மாநகராட்சி குறைந்தது ஒரு மாத காலம் அவகாசம் எடுத்துக்கொள்கிறது. இது போன்ற உடனடிப் பழுதுப் பணிகளை மேற்கொள்ளவும், திட்டப் பணிகளை மேற்கொள்ளவும் மாநகராட்சியிடம் போதிய நிதி இல்லை என்கிறார் எதிர்கட்சித் தலைவர்.

"வீட்டு வரி வசூலை மட்டுமே வருமானமாக மாநகராட்சி நம்பியிருக்கிறது. கமர்ஷியல் வரி இல்லை. இதைக் கருத்தில் கொண்டு புதிய வரி இனங்களை மாநகராட்சி உருவாக்கவில்லை. மாநகராட்சி கடைகள் கட்டிக் கொடுக்கப்பட்டும், நடைபாதைக் கடைகள் நாளுக்கு நாள் முளைத்துக் கொண்டேதான் இருக்கின்றன. கோவில் என்ற பெயரில் புதிய புதிய ஆக்கிரமிப்புகள் பெருகி வருவதையும் மாநகராட்சி கண்டு கொண்டதாகத் தெரியவில்லை. நூற்றுக் கணக்கான விளம்பரப் பலகைகள், விதிகளை மீறி வைக்கப்பட்டிருப்பதையும் மாநகராட்சி கண்டும் காணாமலிருக்கிறது.

இன்னொரு பக்கம் ஏற்கெனவே ஏற்படுத்தப்பட்டிருக்கும் பொதுக் கழிப்பிடங்கள் உபயோகிக்க முடியாத நிலையில் இருப்பதை மாநகராட்சி வேடிக்கை பார்த்து வருகிறது. மின்சார சுடுகாடுகள் அடிக்கடி செயல் இழந்து விடுவதாகத் தொடர்ந்து வரும் பொது மக்களின் புகார் அலட்சியம் செய்யப்பட்டு வருகிறது.

எழில்மிகு சென்னைக்கு இடையூறாக நீளும் பட்டியல் பெரிது. எழில்மிகு சென்னை 2000த்தின் எந்தக் கட்டத்தை எட்டியிருக்கிறோம்? அது எட்டா கனவு தானா? மாநகராட்சி கமிஷனர் ராதா கிருஷ்ணனின் பதில்கள் 74ம் பக்கம்.

**— ஆர். சி. ஜெயந்தன்**

படங்கள்: **ராஜன்**

**"அந்த நடிகை பீல்டுலேருந்து அவுட் ஆயிட்டாரா?"**

**"எதுக்காக கேக்கறீங்க?"**

**"நல்ல சாகுபடி தரக்கூடிய வயல் ஏதும் விற்பனைக்குக் கிடைக்குமான்னு விசாரிக்கறாங்க."**

**- அம்பை தேவா**



சில ஆண்டுகளுக்கு முன்பு நடந்த சம்பவம் இது. ஈரோடு மாவட்டம் பவானியைச் சேர்ந்த பத்து வயது சிறுமி, சென்னை பொது மருத்துவமனையில் இருதய அறுவைச் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டிருந்தாள். அந்தச் சிறுமியின் தந்தை ஆபரேஷனின் போது தேவைப்படும் ரத்தத்துக்காக அங்கும் இங்கும் அலைந்து தவித்துப் போனார். மிகவும் ஏழையாததால் பணம் கொடுத்து ரத்தம் வாங்கவும் முடியவில்லை. தன்னுடைய பரிதாப நிலையை டாக்டரிடம் சொன்னார் அந்த ஏழை தந்தை.

உடனே டாக்டர், "ஆர்.எஸ்.எஸ். ஊழியர்களிடம் கேட்டால் ரத்தம் கிடைக்கும்" என்றார். ஆனால் அந்த ஏழை தந்தை தயங்கினார். காரணம் அவர் ஒரு முஸ்லிம். உடனே டாக்டர், "இதுபோன்ற தொண்டு விவகாரங்களில் ஆர்.எஸ்.எஸ்.காரர்கள் மத வித்தியாசம் பார்க்க மாட்டார்கள். தைரியமாகச் சென்று கேளுங்கள்" என்றார். டாக்டர் ஒரு கிறிஸ்துவர். அந்தத் தந்தையும் ஆர்.எஸ்.எஸ். காரியாலயத்திற்குச் சென்று விஷயத்தைச் சொல்ல, உடனே ஆறு பாட்டில் ரத்தம் தர ஏற்பாடு செய்யப்பட்டது. வெற்றிகரமாக அறுவைச் சிகிச்சை நடந்தது. மகிழ்ச்சியுடன் ஊர் திரும்பிய அந்தத் தந்தை, "நீங்கள் என் மகளுக்கு உயிர்ப் பிச்சை அளிக்க முன் வந்தீர்கள். ஆர்.எஸ்.எஸ். ஓங்கி வளர அல்லா அருள்புரிவானாக" என்று கடிதம் எழுதினார்.





"நாங்கள் மைனாரிட்டி மக்களுக்கு எதிரானவர்கள் என்று செய்யப்படும் பிரசாரத்துக்குப் பதிலளிக்க இதுபோன்ற சம்பவங்கள் நிறையவே உள்ளன" என்று நம்மிடம் சொன்னார் ஆர்.எஸ்.எஸ்.ஸின் முக்கிய பிரமுகர் ஒருவர்.

தனி மனிதர்களுக்குத் தொண்டு செய்வது மட்டுமல்லாமல் வகுப்புக் கலவரம், இயற்கையின் கோர தாண்டவம் ஆகியவற்றின்போது எந்தத் தயக்கமுமில்லாமல் களத்தில் குதித்து சேவை செய்கிறார்கள் ஸ்வயம் சேவக்குகள்.

தன்னலம் பாராத அவர்களது தொண்டு அனைவரின் மனத்திலும் இடம்பெற்று விட்டது. தொண்டு செய்யும் அதே சமயம் ஆர்.எஸ்.எஸ். அவ்வப்போது கிளப்பி விடும் வகுப்பு வாத கோஷங்கள் நாட்டிலுள்ள கோடிக்கணக்கான சிறுபான்மை மக்களை பீதியில் ஆழ்த்துகின்றன.

"பூர்வீகத்தில் தாங்களும் இந்துக்களாக இருந்தவர்கள்தான் என்பதை முஸ்லிம்களும் கிறிஸ்துவர்களும் ஒப்புக் கொள்ள வேண்டும்; ஸ்ரீராமபிரான், கிருஷ்ணர் ஆகியோரின் ரத்தம் தங்கள் நரம்புகளில் ஓடிக் கொண்டிருக்கிறது என்பதையும் முஸ்லிம்கள் உணர வேண்டும்" என்று ஆக்ராவில் நடந்த ஆர்.எஸ்.எஸ். பவள விழா கொண்டாட்டத்தின் போது தலைவர் சுதர்ஷன் பேசியதன் மூலம் புதிய சர்ச்சை உருவாகியுள்ளது.

"சிறுபான்மை மக்களைப் புண்படுத்தும் இப்படிப்பட்ட பேச்சுக்கள் ஆர்.எஸ்.எஸ். வளர்வதற்கு வேண்டுமானால் உதவுமே தவிர, நாட்டை ஒற்றுமைப்படுத்த உதவாது என்று சொல்கிறார்கள்

# ஆர்.எஸ்.எஸ்.: தொடரும் சர்ச்சை;



ஆர்.எஸ்.எஸ். எதிர்ப்பாளர்கள்.

# தொய்வில்லாத பயணம்!

ஏழுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு நாக்பூர் நகரில் ஒரு விஜயதசமி நன்னாளில் டாக்டர் ஹெட்கேவார் என்பவரால் சமூக கலாசார அமைப்பாக துவக்கப்பட்டது ஆர்.எஸ்.எஸ். இயக்கம். அவர் துவக்கும்போது டாக்டர் மூஞ்சி, டாக்டர் பராஞ்சியே, டாக்டர் தோல்கார்; டாக்டர் பாபாராவ் சவார்க்கார் ஆகியோரும் உடனிருந்தனர். நாக்பூரின் பல பகுதிகளுக்கும் சென்று பத்து, பன்னிரண்டு வயது பள்ளிச் சிறுவர்களை ஒருங்கிணைத்து, காலை வேளையில் அவர்களுக்கு உடற்பயிற்சி அளித்து, வீர, தீர செயல்களைச் சொல்லி நாட்டுப்பற்றை ஊட்டினார் ஹெட்கேவார். சுதந்தரப் போராட்டம் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்த காலம் அது. நாட்டின் அனைத்துத் தரப்பு மக்களையும் தட்டி எழுப்பி விடுதலைப் போராட்டத்தில் பங்கு கொள்ளச் செய்தார் காந்தி. அப்போது இந்து மகா சபை என்ற அமைப்பு இருந்தது. டாக்டர் ஹெட்கேவார் மற்றும் அவரது தோழர்கள் அதிலிருந்து வந்தவர்கள்தான். ''இந்துக்கள் மட்டுமே போராடி நாடு விடுதலை பெற வேண்டும்; இல்லையேல் பின்னர் விரும்பத்தகாத விளைவுகள்

ஏற்படும்" என்று ஆர்.எஸ்.எஸ்ஸைத் துவக்கிய போது அறிவிக்கப்பட்டது. அந்த அடிப்படையில் நிறைய இளைஞர்கள் சங்கத்தில் இணைந்தனர். இன்று நாடு முழுவதும் 45,000 இடங்களில் ஷாகாக்கள் (உடற்பயிற்சி வகுப்புகள்) நடக்கின்றன. ஐந்தரை லட்சம் ஸ்வயம் சேவக்குகள் இருக்கிறார்கள். சங்கத்தின் லட்சியங்களை நோக்கங்களைக் கொண்டு வெவ்வேறு பெயர்களில் நாடெங்கும் கிட்டத்தட்ட நூறு அமைப்புகள் இருக்கின்றன.

டாக்டர் ஹெட்கேவார் சங்கத்தைத் துவக்கினாலும் சுமார் 33 ஆண்டுகள் அதன் தலைவராக இருந்து சில அடிப்படை கோட்பாடுகளை உருவாக்கியவர் மாதவ சதாசிவ கோல்வல்கர். இந்தியா முழுக்க சுற்றிச் சுற்றி, அவர் நிகழ்த்திய சொற்பொழிவுகள், கலந்துரையாடல்கள் ஆகியவற்றை 'ஞான கங்கை' என்ற பெயரில் தொகுத்திருக்கிறார்கள். இந்த நூல் தான் சங்கத்தின் வழிகாட்டியாக இருக்கிறது. மகாத்மா காந்தி கொலையில் இந்து மகா சபையைச் சேர்ந்தவர்கள் சம்பந்தப்பட்டிருந்ததால், ஆர்.எஸ்.எஸ். இயக்கமும் சர்ச்சைக்குள்ளாகியது.

"உங்கள் கொள்கைகள் தேச விரோதமானவை. சங்கம் வன்முறை இயக்கம் அல்ல என்று நீங்கள் சொல்வதை நம்ப முடியாது" என்றார் நேரு. ஆர்.எஸ்.எஸ். தடைசெய்யப்பட்டது. அந்தத் தடையை நீக்குவதற்கு முன்னர் "அரசியலமைப்புச் சட்டத்திற்குட்பட்டு நாங்கள் இயங்குவோம்" என்று சங்கம் உறுதிமொழியைத் தர வேண்டியிருந்தது.

தடைவிலக்கப்பட்ட போது (ஐம்பதுகளில்) சமூக, கலாசார அமைப்பாக இருந்த ஆர்.எஸ்.எஸ், அரசியல்ரீதியாக களத்தில் குதிக்க, 'ஜனசங்கம்' என்ற கட்சியைத் துவக்கியது.

கோல்வல்கருக்குப் பிறகு வந்தவர் பாபா சாஹேப் தியோரஸ். இவரது தலைமைக் காலத்தில், அவசர நிலையின் போது சங்கம் மறுபடி தடைசெய்யப்பட்டது. ஆயிரக்கணக்கான ஆர்.எஸ்.எஸ். பிரமுகர்கள் தலைமறைவானார்கள். எமர்ஜென்ஸி கொடுமைகளை விளக்கியும், ஜனநாயக மீட்பின் அவசியம் குறித்தும் ரகசிய பத்திரிகைகள், சிறு பிரசுரங்கள் ஆர்.எஸ்.எஸ். இயக்கத்தால் நாடெங்கிலும் வெளியிடப்பட்டன. அந்தக் காலகட்டத்தில் தத்துவார்த்த ரீதியில் நேர் எதிரான கம்யூனிஸ்டுகளோடு கூட இணைந்து செயல்பட்டார்கள் சங்க உறுப்பினர்கள்.

1989ல் வி.பி.சிங் ஆட்சிக் காலத்தில் மண்டல் கமிஷன் அறிக்கை அமுல்படுத்தப்பட்ட போது வடநாட்டில் பெரிய அமளி ஏற்பட்டது. ஜாதி ரீதியாக இந்து சமூகம் துண்டாடப்பட்டுவிடும் என்றும் உயர்ஜாதி

> **"கடன் தொல்லையால் ஒரு மாதமா வீட்டுக்கே போகலைடா நான்!"**
>
> **"இதுக்குத்தான் அப்பவே சொன்னேன்.... யாரிடம் கடன் வாங்கினாலும் வாங்கு, பெண்டாட்டியிடம் மட்டும் வாங்காதேனு!"**
>
> **– உ.ராஜாஜி**

இந்துக்களின் கல்வி, வேலை வாய்ப்பு பாதிக்கப்பட்டு விடும் என்றும் 'இந்துத்வா' அமைப்புகள் கருதின. இந்தக் கட்டத்தில்தான் அயோத்தியில் பாபர் மசூதி இருக்கும் இடத்தில் ராமர் கோயில் கட்ட வேண்டும் என்ற கோஷம் தீவிரமாகியது. இதன் உச்சகட்டமாக 1992ல் பாபர் மசூதி இடிக்கப்பட்டது. ஆர்.எஸ்.எஸ். இயக்கம் மூன்றாவது முறையாக தடைசெய்யப்பட்டது. ராமர் கோயில் பிரச்னை தற்போது நீதிமன்றத்தில் இருந்தாலும் அதை ஒரு முக்கிய மற்றும் முதன்மைப் பணியாக தனது வேலை திட்டத்தில் வைத்திருக்கிறது ஆர்.எஸ்.எஸ்.

1994ல் சங்கத்தின் தலைவராக பொறுப்பேற்ற பிற்பட்ட சமுதாயத்திலிருந்து வந்த ராஜேந்தர் சிங் காலத்தில்தான் மத்திய அரசை பின்னணியிலிருந்து இயக்கும் புதிய பொறுப்பும் சங்கத்துக்கு வந்தது. கடந்த மூன்று வருட காலத்தில் மூன்றாவது முறையாக பிரதமர் பொறுப்பேற்றிருக்கும் வாஜ்பாய்க்கும் சங்கத்துக்கும் இணைப்புப் பாலமாக ஆர்.எஸ்.எஸ். பிரமுகர் ஒருவர் நியமிக்கப்பட்டார்.

சமஸ்கிருதம் ஆட்சி மொழியாக வேண்டும் என்பது ஆர்.எஸ்.எஸ். லட்சியங்களில் ஒன்று. சென்ற ஆண்டை சமஸ்கிருத ஆண்டாக அறிவித்து, அதன் வளர்ச்சிக்கு நிறைய நிதியையும் ஒதுக்கியது பா.ஜ.க. தலைமையிலான அரசு.

தங்கள் நோக்கங்களைச் செயல்படுத்திக் காட்டும் மாதிரி களமாக குஜராத் மாநிலத்தை எடுத்துக் கொண்டுள்ளது சங்கம். சங்கத்தின் விருப்பங்களில் ஒன்றுதான் இந்தியா அணுகுண்டு பரிசோதனை நடத்த வேண்டும் என்பது. அதை நிறைவேற்றினார் வாஜ்பாய்.

"பல்வேறு இன, மொழி மக்கள் கலந்து பன்முக அமைப்போடு வாழும் நமது நாட்டில் சங்கம் சொல்லும் கலாசார தேசியம் (Cultural Nationalism) என்பது ஏற்புடையதே அல்ல; அதுமட்டுமல்லாமல், இதுபோன்ற கோஷங்கள் நமது அரசியல் சட்டத்திற்கு எதிரானதாகவே அமையும். சிறுபான்மையோரை பாதுகாப்பற்ற நிலைக்குத் தள்ளும்" என்கிறார் பெரியார் திராவிட கழகப் பொதுச் செய்



வாளரான ராஜேந்திரன். "இந்து என்று சொல்வதன் மூலம், சீக்கிய, ஜைன மற்றும் இதர மதங்களைச் சேர்ந்தவர்களை ஒரு குடையின் கீழ் கொண்டு வர முடியாது என்பதால் "இந்துத்வா" என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார்கள். அடிப்படையில் எல்லாம் "இந்து ராஷ்ட்ரம்" என்ற கோட்பாட்டைக் கொண்டதுதான். ஜெர்மனியில் யூதர்களை, ஹிட்லர் விரட்டியடித்தது போல, முஸ்லீம்களை விரட்டியடிக்க வேண்டும் என்பதே சங்கத்தின் கொள்கை. ஆர்.எஸ்.எஸ். இயக்கம் நேரடியாகத் தேர்தலில் நிற்காது. காரணம் வோட்டு அரசியலில் அது நிராகரிக்கப்படும் ஆபத்து இருக்கிறது. எனவேதான் தனது முகமூடியாக பா.ஜ.க.வைத்து அதன் மூலம் செயல்பட நினைக்கிறது. எப்பாடுபட்டும் வர்ணாஸ்ரம தர்மத்தை பாதுகாப்பதே அதன் அடிப்படை நோக்கம்" என்கிறார் ராஜேந்திரன்.

இதுபோன்ற குற்றச்சாட்டுகள் ஆர்.எஸ்.எஸ். மீது தொடர்ந்து வீசப்பட்டு வருவதாகச் சொல்கிறார் அதன் தென்னிந்திய அமைப்பாளரான சண்முகநாதன். "பிறப்பால் வேறுபடுத்திப் பார்க்கும் வர்ணாஸ்ரம தர்மம், விஞ்ஞானம் வளர்ந்துவிட்ட இந் நாட்களில் அழிந்து விட்ட ஒன்று. எனவே அதைக் கட்டிக் காப்பாற்ற வேண்டிய அவசியமும் இல்லை. ஆர்.எஸ்.எஸ். துவக்கப்பட்டபோதே தேர்தலில் நிற்கக் கூடாது என்று முடிவெடுக்கப்பட்டது. நல்ல தரமான குடிமக்களை உருவாக்குவதன் மூலம் நல்ல தலைவர்களை உருவாக்க முடியும் என்று சங்கம் நம்புகிறது. நாங்கள் வலியுறுத்தும் இந்து ராஷ்ட்ரம் என்பது சமயரீதியான கோட்பாடு அல்ல; பண்பாடு சம்பந்தப்பட்டது. தேசியம் கலந்தது. கலாசார தேசியம்தான் இந்து ராஷ்ட்ரம். நாங்கள் வலியுறுத்தும் இந்து ராஷ்ட்ரத்தில் தான் சிறுபான்மையோருக்கு உண்மையான பாதுகாப்பு கிடைக்கும்" என்கிறார் சண்முகநாதன்.

இப்படிப்பட்ட சர்ச்சைகள் ஒரு பக்கம் நடந்து கொண்டிருக்க, பொருளாதாரம், காஷ்மீர் போன்ற விவகாரங்களில் சங்கத்துக்கும், பா.ஜ.க.வுக்கும் கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டுள்ளன. இந்த மோதல் காரணமாக, குஜராத்தில் உள்ளாட்சி தேர்தல்களில் பா.ஜ.கவுக்குப் பாதிப்பு ஏற்பட்டதாகச் சொல்லப்படுகிறது. கூட்டணிக் கட்சிகளை அணைத்துக் கொண்டு கம்பி மேல் நடப்பது போல சர்க்கஸ் செய்யும் பிரதமருக்கு, ஆர்.எஸ்.எஸ்.ஸின் அழுத்தம் சங்கடத்தை உருவாக்கியிருக்கிறது. இதன் காரணமாக பா.ஜ.க. ஆட்சிக்குப் பெரிய பிரச்னை ஏதும் வந்திடாது. பிரதமர் அமெரிக்கா சென்ற போது, "முதலில் நான் ஒரு ஸ்வயம் சேவக்; அப்புறம் தான் பிரதமர் என்றார்". இதைவிட பா.ஜ.கவுக்கு சங்கத்துடன் உள்ள நெருக்கத்தை எப்படிச் சொல்ல முடியும்" என்கிறார்கள் சங்க எதிர்ப்பாளர்கள்.

## எடைபோடுகிறார்கள்!

**சின்னக்குத்தூசி:** *(பத்திரிகையாளர்)*

ஆக்ராவில் நடைபெற்ற ராஷ்ட்ரீய ஸ்வயம்சேவக் மாநாடு – இந்தியாவெங்கிலுமுள்ள சிறுபான்மை மக்கள் மத்தியிலும் மதச்சார்பின்மையில் நம்பிக்கை கொண்ட மனிதநேயர்கள் மத்தியிலும் பெரும் கவலையையும் அச்சத்தையும் ஏற்படுத்தியிருக்கிறது.

அந்த மாநாட்டில் பேசிய அதன் தலைவர் சுதர்சன் "கிறிஸ்தவ தேவாலயங்கள் – அன்னிய நாட்டினரின் தொடர்புகளை அறுத்தெறிந்து விட்டு சுதேசிச் சபைகளாகச் செயல்பட வேண்டும்"– என்று கிறிஸ்தவ சமூகத்தினரின் மீதும், "முஸ்லீம்கள் – தங்களது முன்னோர்கள் எல்லாம் இந்துக்களாக இருந்தவர்கள்தான் என்ற அடிப்படையில் இந்துக் கடவுள்களான ராமன் – கிருஷ்ணன் போன்றோரை அங்கீகரிக்க வேண்டும்" என்று இஸ்லாமிய சமுதாயத்தினர் மீதும் தாக்குதல் தொடுத்திருக்கிறார்.

"ஆர்.எஸ்.எஸ். ஒரு இந்துமத வெறி அமைப்புதானே; அதன் தலைவர் அப்படிப் பேசுவதில் புதிதாக என்ன இருக்கிறது"– என்று அந்தப் பேச்சை யாரும் அலட்சியமாகக் கருதி விட முடியாது. காரணம் –

பாரதீய ஜனதா கட்சி என்பது ஆர்.எஸ்.எஸ்ஸின் குழந்தைதான். அது ஆர்.எஸ்.எஸ்ஸின் நோக்கங்களை அரசியல்ரீதியாக நிறைவேற்றி வைப்பதற்காக உருவாக்கப்பட்டது.

பி.ஜே.பியின் இரண்டாவது பெரிய



• சின்னக்குத்தூசி

தலைவரான அத்வானி – ஆக்ரா மாநாட்டில் கலந்து கொண்டு, ''பா.ஜ.கவுக்கும் ஆர்.எஸ்.எஸ்ஸுக்கும் இடையிலான உறவு பிரிக்க முடியாதது'' என்ற ரீதியில் பேசியிருக்கிறார்.

ஆர்.எஸ்.எஸ்ஸின் உத்தரவுப்படி பா.ஜ.க. ஆடுவதில் ஆட்சேபிக்க என்ன இருக்கிறது? என்று சிலர் நினைக்கலாம். அப்படி நினைப்பது சரியல்ல. காரணம் –



• எம்.எச். ஜவாஹிருல்லா

1. பா.ஜ.க. மத்தியில் ஆட்சியில் இருக்கிறது.

2. இந்திய மக்கள் அனைவரும் பா.ஜ.க. தனது விருப்பம் போலவோ அல்லது ஆர்.எஸ்.எஸ்ஸின் உத்தரவுப்படியோ ஆட்சி நடத்தட்டும் என்று பா.ஜ.கவுக்கு மெஜாரிட்டி பலம் கிடைக்கும் வகையில் வாக்களித்து பா.ஜ.கவை ஆட்சியில் அமர்த்தவில்லை.

3. பா.ஜ.க.வின் இந்துத்வா கொள்கைகளையும் ஆர்.எஸ்.எஸ்ஸின் வெறித்தனத்தையும் ஒப்புக் கொள்ளாத ஜனநாயகக் கட்சிகள் கூட்டணியில் உள்ளன.

4. மதச்சார்பின்மை மீது அசையாத பற்றும், மதவெறிக்கு எதிராக பலமான கொள்கையும் கொண்ட கட்சிகளின் கூட்டுறவோடுதான் மத்தியில் பா.ஜ.க. ஆட்சிக்கு வர முடிந்தது.

5. ஆட்சி – கூட்டணி ஆட்சியாக இருக்கும். அதன் மூலம் பா.ஜ.க. கொள்கையான இந்துத்வாவை அமல்படுத்த மாட்டோம். மதச்சார்பின்மை கொள்கையை உறுதியாகக் கடைபிடிப்போம்'' என்று கூட்டணிக் கட்சிகளுக்கு உறுதிமொழிப் பத்திரத்தை ''தேசிய ஜனநாயகக் கூட்டணியின் செயல் முறை'' என்ற பெயரால் எழுதிக் கொடுத்து விட்டே ஆட்சியில் அமர்ந்திருக்கிறது பா.ஜ.க.

இந்த நிலையில், பா.ஜ.க. அமைச்சர்கள் அதுவும் பிரதமர், உள்துறை அமைச்சர் போன்றவர்களே ஆர்.எஸ்.எஸ்ஸின் விசுவாசிகள் தான் நாங்கள் என்று பேசுவதும், ஆர்.எஸ்.எஸ். மாநாட்டில் கலந்து கொள்வதும் எந்தவிதத்திலும் நாணயத்திற்கும் நேர்மைக்கும் தொடர்புள்ள விஷயங்கள் அல்ல.

1996 தேர்தல் – 1998 தேர்தல் – 1999 தேர்தல் என்று வரிசையாக நடந்த மூன்று தேர்தல்களிலும் பா.ஜ.கவுக்கு மக்கள் நிகர மெஜாரிட்டி பலத்தை அளிக்காது நிராகரித்து விட்டார்கள். ஆகவே மக்கள் சம்மதத்துடன் மத்தியில் பா.ஜ.க. ஆட்சிக்கு வந்தது என்று சொல்ல இடமேயில்லை. கூட்டணிக் கட்சிகளின் தயவால்தான் அது ஆட்சியில் இருக்கிறது.

இந்நிலையில் – கூட்டணி கட்சிகள்தான் பா.ஜ.க. தலைமையை அன்போடு எச்சரிக்க வேண்டும்.

**எம்.எச். ஜவாஹிருல்லா:** *(தலைவர்– தமிழ்நாடு முஸ்லீம் முன்னேற்றக் கழகம்)*

ஆக்ரா பயிற்சி முகாமில் சுதர்சன் கூறிய இரண்டு அபாயகரமான கருத்துக்களில் ஒன்று மட்டுமே பத்திரிகைகளில் வெளிவந்தது. மீடியாவின் கவனத்துக்கு உட்படாத அபாயகரமான மற்றொரு கருத்து ''ஹிம்சாசக்தி–அதாவது ''வன்முறைக்கான ஆற்றல் பெறவேண்டும்'' என அவர் முழங்கியது. இதுதான் ஆர்.எஸ்.எஸ்ஸின் விருப்பம்.

''ஒரு இனம் தன்னை எப்படி பாதுகாத்து கொள்ள வேண்டும் என்பதற்கு உதாரணமாக நாசிக் கொள்கை இருக்கிறது. எனவே நாம் ஹிட்லரிடம் பாடம் கற்றுக் கொள்ள வேண்டும்.அந்த வழிமுறையை நாம் இந்தியாவில் பின்பற்றவேண்டும். ஒன்று நாம் சொல்வதைப் போல சிறுபான்மையினர் தங்களைத் திருத்திக் கொள்ள வேண்டும். அல்லது அவர்கள் நம்மிடம் சரணாகதி அடைந்து அடிமைகள் போல் வாழவேண்டும் என்று ஆர்.எஸ்.எஸ். தலைவர்களில் முக்கியமானவராகக் கருதப்படும் ஹெக்டேவர் எழுதியிருக்கிறார்.

இந்தக் கருத்தைத்தான் சுதர்சன் எழுபத்தைந்து ஆண்டுகள் கழித்துப் பிரதிபலித்திருக்கிறார்.

சிலபேர் ஆர்.எஸ்.எஸ்., சமூக சேவையில் ஈடுபடுகிறது என்று சொல்கிறார்கள். சேவை என்பது ஒரு முகமூடி. இதை வைத்துக் கொண்டு அந்த இயக்கத்தை எடைபோட முடியாது.

இதைவிட வருத்தமான விஷயம், மதச்சார்பின்மையை விரும்பும் கலைஞர், ராமதாஸ், சந்திரபாபு நாயுடு, ராம்விலாஸ்பாஸ்வான், ஜார்ஜ்பெர்னாண்டஸ் போன்றவர்கள் இன்றைய ஆட்சி அதிகாரத்திற்காக நாளை விளையப் போகும் ஆபத்துபற்றி கவலைப்படாமல் பி.ஜே.பியோடு கைகோர்த்திருக்கிறார்கள். இதைச் சிறுபான்மை மக்கள் நீண்டநாள் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டார்கள்.

**எம்.எஸ். உதயமூர்த்தி:** *(மக்கள் சக்தி இயக்கம்)*

ராஷ்ட்ரிய சுயம் சேவக் சங்கத்தின்

## கல்கி தீபாவளி மலர் 2000

❐ மலரின் வடிவமே மனத்தை கொள்ளை கொண்டுவிட்டது. ஓவியர் பத்மவாசனின் படைப்புகள் பொக்கிஷமாக வைத்து பாதுகாக்கப்பட வேண்டியவை. மலரை கையிலெடுத்தால் தாள் கசங்கிவிடுமோ, ஓவியங்கள் அழுக்காகிவிடுமோ எனும் அச்சம் மேலோங்க ஒரு குழந்தையைப் போல கையாள வேண்டுமென்கிற உணர்வு ஏற்படுகிறது.

பாளையங்கோட்டை, இரா. கண்ணன்

❐ கல்கி தீபாவளி மலர் படித்தேன். பிரமிப்புக்கு மறுபெயராக விளங்கியது. பத்மவாசனின் அட்டைப் படமும் அதற்கு சுகி.சிவத்தின் விளக்கமும் அருமை. தமிழோடு முருகக் கடவுளுக்கு உள்ள ஒற்றுமைகளை விளக்கியது புதுமை. யாஜ்ஞவல்கியரின் கதையை ராஜாஜி மிக அழகாகச் சொல்லியிருந்தார். பரம்பொருள் குறித்தான கருத்துக்கள் நயம். ஆனந்தியின் மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் திருத்தலம் பற்றிய அனுபவங்கள் எங்களை கோயிலுக்கே அழைத்துச் சென்றிருந்தது. அமரர் கல்கியின் பாலஜோசியர் கதை மலருக்கு மகுடம் சூட்டியிருந்தது. கோபுலுவின் படங்கள் டாப் ரகம்!

ஈரோடு, சு.நா.இராஜேஸ்வரன்

❐ காஞ்சி மகா பெரியவர், ஜெயேந்திரர், இளையவர், தயானந்த சரஸ்வதி சுவாமிகள் ஆகியோரது பூஜைக்குரிய படங்கள், காந்தனின் கோட்டோவியம், வியன்னா, ஸ்பெயின் நாட்டு தேவாலய அழகிய தோற்றங்கள், மயக்கும் மணாலி, குதிரைபூட்டிய ரதத்தில் சூரிய பகவானாக பத்மவாசனின் அழகிய வண்ண ஓவியம் ஆகிய சிறப்பு அம்சங்களால் இந்த ஆண்டு கல்கி தீபாவளி மலர் தீப ஒளியாக பிரகாசித்தது!

சாத்தூர், செல்லையா

❐ இவ்வாண்டு கல்கி தீபாவளி மலர் வழக்கம் போல் ஒளிவிட்டு ஜொலித்திருந்தது. குறிப்பாக காஞ்சி மஹாபெரியவரின் வண்ணப் படம், ரமணமஹரிசியின் தீர்க்க தரிசனம் பற்றிய கட்டுரை, மராட்டியர்களின் கலை உணர்வினை இன்னும் பறைசாற்றி வரும் தஞ்சைக் கலைகள் பற்றிய வண்ணமடல் ஆகியன கல்கியின் தீபாவளி மலரை மனத்தில் நிறுத்தச் செய்திருந்த அற்புதங்கள்.

தோட்டக் குறிச்சி, இரா. வளையாபதி

பல்வேறு பயிற்சி பட்டறைகளில் என்னை உரையாற்ற அழைத்திருக்கிறார்கள். மத அடிப்படையில் மக்கள் சக்தியை திரட்டுகிற இயக்கமாக நான் அதைப் பார்ப்பதில்லை. என்னைப் பொருத்தவரை அது தேவையற்ற பயம். வலிய திணிக்கப்பட்ட பயம் என்று கூட சொல்லத் தோன்றுகிறது. முதலில் ஆர்.எஸ்.எஸ். இயக்கத்தில் என்னை மிகவும் கவர்ந்த விஷயம் தனிநபர் சுயகட்டுப்பாடு. ஒவ்வொரு இந்தியக் குடிமகனுக்கும் அது இருந்துவிட்டால் ஒரு ஒப்புயர்வற்ற சமுதாயம் தானாக உருவாகி விடும். எனவேதான் எங்கள் மக்கள் சக்தி இயக்கம் கூட கட்டாய ராணுவப் பயிற்சி எல்லோருக்கும் கொடுக்கப்பட வேண்டும் என்று சொல்கிறது. அது சுயகட்டுப்பாட்டை, ஒழுக்கத்தை வளர்க்கும். அத்தகைய பயிற்சியை ஆர்.எஸ்.எஸ். கொடுப்பது சிறுபான்மை சகோதரர்களுக்கு அச்சத்தை ஏற்படுத்துவதாக மீடியாக்கள் புலம்பக் கூடாது. அல்லது பொய்ப் பிரசாரம் செய்யக் கூடாது என்பதே எனது வேண்டுகோள்.



• எம்.எஸ். உதயமூர்த்தி

"வெளியே இருக்கும்போது பல காரியங்களைச் செய்ய வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் பதவிக்கு வந்தபோது பல காரியங்களை செய்ய முடியாது என்று உணர்ந்தேன்" என்று ஜான்கென்னடி சொன்னார். பி.ஜே.பியாக இருந்தாலும், ஆர்.எஸ்.எஸ்ஸாக இருந்தாலும் ஆட்சிக்கு வந்தால், நினைத்ததையெல்லாம் செய்ய முடியாது.

இந்தியாவிலிருக்கும் பெரும்பான்மை சமூகத்தினரைக் காட்டிலும் சிறுபான்மை சமூகத்தினருக்கே நாம் சலுகைகளை அதிகம் கொடுத்திருக்கிறோம். இவை யாரோ வழங்கியவை அல்ல. நமக்காக நாம் உருவாக்கிக் கொண்டவை. ஆகவே, இங்கே விட்டுக் கொடுக்கும் மனோபாவம் இயற்கையாகவே இருக்கிறது. அது நம் இரத்தத்தில் கலந்தது. ஆர். எஸ்.எஸ். போன்ற அமைப்புகளால் அதற்கு எந்த பங்கமும் வந்துவிடாது என்பதே என் எண்ணம்.

— ப்ரியன், ஜெயன்

படம்: வெங்கடேஷ்

# அச்சடி!



**வா**ழ்த்து அட்டைகள் தயாரிக்கும் பிரபல நிறுவனமான 'ஆர்ச்சீஸ்' சென்னையில், பிரத்யேக ஷோரூம் ஒன்றை அண்மையில் திறந்தது. அதற்காக வந்திருந்த ஆர்ச்சீஸ் சேர்மன் அனில் மூல்சந்தானியிடம் பேசியபோது கிடைத்த சுவையான தகவல்கள்:

♦ இந்தியாவில் ஆண்டுக்கு முந்நூறு கோடி ரூபாய் அளவுக்கு வாழ்த்து அட்டைகள் விற்பனையாகின்றன.

♦ இந்தியாவில் வாழ்த்து அனுப்பும் கலாசாரம் இன்னமும் நகரங்களைத் தாண்டி பரவவில்லை. நான் லண்டனில் ஒரு டாக்ஸி ஓட்டுனர் தாம் வருடாவருடம் குறைந்தபட்சம் இருநூற்று ஐம்பது புத்தாண்டு, கிறிஸ்துமஸ் வாழ்த்துக்கள் அனுப்புவது வழக்கம் என்று கூறியதைக் கேட்டு, வியப்படைந்தேன்.

♦ அமெரிக்காவில் செல்லப் பிராணிகளுக்குக்கூட வாழ்த்து அட்டைகள் விற்பனை செய்யப்படுகின்றன.

♦ எங்களின் குடும்பத் தொழிலான புடைவை வியாபாரம் தொய்வடைந்த சமயம், வேறு ஏதாவது புதுத் தொழில் ஆரம்பிக்கலாம் என்று நினைத்தேன். ஆங்கிலப் படப்பாடல் புத்தகங்கள், ஹாலிவுட் ஸ்டார்களின் புளோ அப்கள் எனக்கு ரொம்பப் பிடிக்கும். ஆனால், அவை சுலபத்தில் கிடைக்கவில்லை. எனவே, நம்மைப்போல பல பேர் இருக்கலாமே! நாமே அவற்றை அச்சிட்டு விற்றால் என்ன என்ற எண்ணம் தோன்ற, ஆர்ச்சீஸ் பிறந்தது.

♦ ஆர்ச்சீஸ் ஆரம்பித்தபோது என் பாக்கெட்டில் இருந்த தொகை எவ்வளவு தெரியுமா? வெறும் ஐந்நூறு ரூபாய். இன்று வருடாந்திர பிசினஸ் நூறு கோடி ரூபாய்.

♦ ஆர்ச்சீஸ் என்று பெயர் வைக்க என்ன காரணம் என்று தெரிந்தால் ஆச்சரியப்படுவீர்கள். எங்கள் பக்கத்து வீட்டுக்காரர் ஒரு செல்ல நாய் வளர்த்து வந்தார். அதை எனக்கும் ரொம்பப் பிடிக்கும். அதன் பெயர் ஆர்ச்சீஸ்.

♦ ஆங்கிலம் தவிர இந்தி, பஞ்சாபி, மராத்தி, தெலுங்கு மொழிகளில் வாழ்த்து அட்டைகள் வெளியிட்டுக் கொண்டிருக்கிறோம். விரைவில் தமிழ் மற்றும் மலையாளத்தில் வாழ்த்துக்கள் வெளியிடும் ஐடியா இருக்கிறது.

♦ வாழ்த்து அட்டைகள் வாங்க வருகிறவர்கள் கூடவே பரிசுப் பொருட்களும் வாங்க விரும்புகிறார்கள். எனவே, பரிசுப் பொருட்கள், மியூஸிக் கேஸட்கள் போன்றவையும் விற்கப்படுகின்றன.

♦ செயற்கைக் கோள் சேனல்கள் ஏகமாய் வந்தபின்னர், காதலர் தினம், போன்ற பல தினங்கள் மக்களிடையே பிரபலமாகியிருக்கின்றன.

♦ ஒரு ஆர்ச்சீஸ் விற்பனை நிலையத்தில் ஆர்டர் கொடுத்து, இந்தியாவில் உள்ள மற்ற ஊர்களில் உள்ளவர்களுக்கு வாழ்த்தும், பரிசும் வீட்டுக்கே கொண்டுபோய் டெலிவரி செய்யும் திட்டமும் அண்மையில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது.

- கௌதம்

ஸ்வாமியே சரணம் ஐயப்பா



ரூ 350.00-க்கு
மேல் இங்கே குறிப்பிட்டுள்ள
பொருட்களை வாங்குபவர்களுக்கு
ஐயப்பன் பக்தி பாடல்
கேசட் ஒன்று இலவசம்*
மட்டுமே

மாலைகள் முதல் வேஷ்டிகள் வரை
விபூதி முதல் தூபம் வரை
ருத்ராக்ஷம் முதல் டாலர் வரை
இருமுடிபை முதல் பூஜா பொருட்கள் வரை
ஸ்தோத்திர புத்தகங்கள் முதல் பாடல் கேசட்டுகள் வரை

* கீதா கேஸட் வெளியீடுகள் மட்டும்

**ஐயப்ப பக்தர்களுக்கு தேவையான அனைத்துப் பொருட்களும் கிடைக்கும் ஓரே இடம்**

# கிரி டிரேடிங் ஏஜென்ஸி



10, கபாலீஸ்வரர் சன்னதி தெரு, மயிலாப்பூர், சென்னை – 4
ஃபோன் : 4940376, 4942530 ஃபேக்ஸ் : 91+44+4953821
மும்பை : கிரி ஸ்டோர்ஸ் மோடி நிவாஸ், மாதுங்கா தபால் நிலையம் எதிரில், மும்பை – 400 019. போன் 4143140, 4141344
email : giritrading@vsnl.com website : www.giritrading.com

---

வாடிக்கையாளர்களுக்கு எமது உளங்கனிந்த நல்வாழ்த்துக்கள்



**மணம், குணம், சுவை**
நிரம்பிய அனைத்து உணவுப் பொருட்களும்
கிடைக்கும் ஒரே ஸ்தாபனம்



KS&Co

# K. SUBRAMANIAM & Co

KS&Co

*A.C. DEPARTMENT SUPER STORE*

47, SOUTH WEST BOAG ROAD T.NAGAR. ✆ 4337516 / 4337526

*தரமான அரிசி, பருப்பு வகைகள், அனைத்து டிபார்ட்மெண்ட் பொருட்கள் மட்டுமல்லாமல், Fancy பொருட்கள் மற்றும் சுத்தமான காய்கறி வகைகளும் கிடைக்கும்.*

விரைந்திடுவீர்
இச்சலுகை
நவம்பர் 30,
2000 வரை
மட்டுமே

ஒவ்வொரு முறையும் ரூ 500க்கு மேல் பொருட்கள் வாங்கும் வாடிக்கையாளர்களுக்கு 500 கிராம் பாசுமதி அரிசி (அ) 1000 கிராம் சர்க்கரை இலவசம்.

**SPECIAL OFFER**

1.11.2000 முதல் 30.11.2000 வரை ரூ. 500க்கு மேல் பொருட்கள் வாங்குபவர்களில் பத்து நபர்கள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு ரூ.500க்கான பொருட்களை இலவசமாக பெற்றுக்கொள்ளலாம். (2.12.2000 காலை 10 மணிக்கு வாடிக்கையாளர்கள் முன்னிலையிலேயே குலுக்கல் நடைபெறும்)

BRANCHES

21. NATESAN STREET, T.NAGAR, CHENNAI -17 ✆ 4345522 / 4341188
1, SINGARA GARDEN II[nd] STREET, WASHERMENPET, CHENNAI - 21 ✆ 5953894 / 5953822

**VISA & MASTER CREDIT CARDS ACCEPTED**

VISIT US @ www.tnagar.com/ksandco. E-Mail - ks and co @ tnagar. com

# சில்க் ஸ்மிதா மரணம்: பதில் தேடும் கேள்விகள்!



எல்லா பட்டாசுகளின் பாக்கிங் மீதும், ஆபத்தில்லாமல் கையாள்வது எப்படி என்று போட்டிருப்பார்கள். அதிலும் குறிப்பாக 'ஆட்டம்பாம்' போன்ற வெடிகளின் பாக்கிங்கில் "திரியைப் பற்ற வைத்துவிட்டு 15 மீட்டர் தூரம் தள்ளி வந்துவிட வேண்டும்" என்று போடப்பட்டிருக்கும். ஆனால் வெடிக்கின்றவர்கள் பாக்கிங்கில் போட்டிருக்கும் பாதுகாப்பு விதிகளை அனுசரிக்கிறார்களா என்றால் 'இல்லை' என்பதாகத்தான் இருக்கும்.

எந்தக் குறிப்பிட்ட வெடியால் தன் பார்வை பழுதுபட்டுப் போனது என்று அந்த சண்டிகர் சிறுவன் சொன்னானோ, அந்த வெடியின் திரியை முதலில் பற்ற வைக்கும்போது அது பிடித்துக் கொண்டதைக் கவனிக்காமல் சிறுவன் குனிந்து மறுபடியும் பற்ற வைக்க முயன்றிருக்கிறான்.

ஏற்கனவே பற்ற வைக்கப்பட்ட திரி, வெடிமருந்தைத் தொட்டு வெடித்திருக்கிறது. உள்ளிருந்து சிதி வந்த களிமண் துகள்கள் சிறுவனின் கண்ணைப் பதம் பார்த்து விட்டன. பையனின் தந்தை மறைத்துவிட்ட இந்த விஷயத்தை, பட்டாசு நிறுவனம் கண்டுபிடித்து தெரிவித்தது. இது தவிர நஷ்டஈடு பெற வேண்டும் என்ற நோக்கத்தில் அந்த அப்பா, பட்டாசு கடையில் போலி ரசீது பெற்றிருக்கிறார். அந்த ரசீதில் ஆயிரத்தெட்டு ஓட்டைகள். மேலும் தடயவியல் அடிப்படைப்படி பார்த்தால் எந்த வெடியால் பையன் கண்ணுக்குப் பாதிப்பு ஏற்பட்டதோ, அது வெடித்தவுடன் இருக்கும் மிச்சம் மீதிகளையும் பரிசோதனை செய்ய வேண்டும். அது எங்கு தயாரிக்கப்பட்டதோ அங்கு தயாரிக்கப்பட்ட மற்ற ஆட்டம்பாம்களையும் பரிசோதிக்க வேண்டும். இந்த அடிப்படையில் எதுவும் செய்யவில்லை.

சனல் இல்லாமல் செய்யப்படும் ஆட்டம்பாம்களுக்குத் தடையும், பையன் கண்ணுக்கு நஷ்டஈடும் கேட்பது சரியல்ல என்று எங்கள் தரப்பு வாதத்தை எடுத்து வைத்தோம். மேலும், பரிசோதனையாக நான் ஆட்டம்பாம் வெடித்துப் பார்த்ததையும், ஆபத்தில்லாமல் களிமண் துகள்கள் சிதறி விழும் போக்கு பற்றியும் முழு அறிக்கையுடன் படங்கள் உட்பட நீதிமன்றத்தில் சமர்ப்பித்தோம். நீதிமன்றம் எங்கள் தரப்பு வாதங்களை ஒப்புக்கொண்டது.

Pyrotechnics எனப்படும் பட்டாசு தொழில்





தடய அறிவியல் நிபுணர்
டாக்டர் பி. சந்திரசேகரன்

நுட்பம் பல மடங்கு வளர்ந்துவிட்ட காலத்தில் சணல் சுற்றித்தான் ஆட்டம் பாம் தயாரிக்க வேண்டும் என்று பழைய சட்டப் புத்தகத்திலிருந்து எடுத்துச் சொல்வது சரியல்ல என்பதையும் கோர்ட்டில் விளக்கினோம்.

ஒரு குற்றம் செய்பவன் டென்ஷனில் செய்வதால், ஏதாவது ஒரு சிறு தடயத்தையாவது வைத்து விட்டுப் போவான் என்று சொன்னேன் அல்லவா. இதற்கு ஒரு நல்ல உதாரணம் சொல்கிறேன்:

குமரன் சில்க்ஸ் ராமமூர்த்திக்குப் பெங்களூரில் பட்டு நூல் வியாபாரம் இருந்தது. அதில் பாகஸ்தர்கள் இருந்தார்கள். ஒரு காலகட்டத்தில் அந்த நிறுவனத்திலிருந்து விடுபட்டு சென்னையில் தமது வியாபாரத்தைக் கவனிக்கத் துவங்கினார் ராமமூர்த்தி. திடீரென்று பெங்களூரில் உள்ள தேசியமயமாக்கப்பட்ட வங்கியிலிருந்து அவருக்கு ஒரு பதிவுத் தபால் வந்தது. 'நீங்கள் இன்னாருக்கு ஆறரை கோடி கடன் கொடுக்கக் கியாரண்டி கையெழுத்துப் போட்டிருக்கிறீர்கள். கடன் வாங்கியவர் டபாய்த்து விட்டு ஓடி விட்டார். எனவே நீங்கள்தான் அந்த ஆறரை கோடி ரூபாயை வட்டியுடன் செலுத்த வேண்டும். இந்த நோட்டீஸ் கண்டவுடன் எங்களைத் தொடர்பு கொண்டு பணத்தைக் கட்டுவது தொடர்பான நடவடிக்கை எடுக்கவும்' என்று அந்தக் கடிதத்தில் சொல்லப்பட்டிருந்தது. அதைப் பார்த்தவுடன் ராமூர்த்திக்கு ஹார்ட் அட்டாக்கே வந்துவிடும் போலிருந்தது. யாருக்காகக் கியாரண்டி போட்டிருப்பதாக வங்கி சொல்கிறது என்று பார்த்தால், அந்த நபர் பெங்களூரில் பாகஸ்தராக இருந்தவர்.

பல வழக்கறிஞர்களைக் கலந்தாலோசித்த ராமமூர்த்தி, என்னையும் கலந்தாலோசித்தார். 'அது போன்ற கியாரண்டி கையெழுத்து தாம் யாருக்கும் போடவில்லை' என்று அடித்துச் சொன்னார் அவர்.

'சரி; எதற்கும் வங்கிக்கு ஒரு கடிதம் எழுதி நீங்கள் கியாரண்டி போட்ட பேப்பர்களை அனுப்பச் சொல்லுங்கள்' என்றேன். மறுவாரம், வங்கியிலிருந்து கவரிங் லெட்டருடன் கியாரண்டி போட்ட பேப்பர்களும் (நகல்கள்) வந்து சேர்ந்தன.

நான் எல்லாவற்றையும் ஆராய்ந்தேன். 'எவ்வளவு பெரிய வங்கி அது! கவரிங் லெட்டரை டைப் அடித்து அனுப்பாமல் கையால் எழுதி அனுப்பியிருக்கிறார்களே?' என்று எனக்கு ஆச்சர்யமாக இருந்தது. அதைவிட ஆச்சர்யம் கொடுத்த விஷயம் கியாரண்டி பேப்பர்களில் இருந்த எழுத்துக்களும், கவரிங் லெட்டரில் இருந்த எழுத்துக்களும் ஒருவர் எழுதியதைப் போலவே இருந்ததுதான். அதுவும் அந்த மானேஜர் எழுத்துதான்.

ஏதோ கோல்மால் நடந்திருக்கிறது என்பது புரிந்துவிட்டது. இந்தக் கையெழுத்து ஒற்றுமைகளை எடுத்துக்காட்டி 'ஏதோ போர்ஜரி' நடந்திருக்கிறது என்று வங்கி மேலிடத்துக்குக் கடிதம் எழுதினோம். பின்னர் நடந்த தீவிர விசாரணையில் வங்கி மானேஜரும், ராமமூர்த்தியோடு பாகஸ்தராக இருந்த ஒருவரும் கூட்டுச் சேர்ந்து மோசடி செய்திருக்கிறார்கள் என்பது புரிந்தது. இந்த விவகாரம் காரணமாக ராமமூர்த்தியின் உடல்நிலை மிகவும் பாதிக்கப்பட்டது. அதிலிருந்து விடுபட்டவுடன்தான் அவருக்கு நிம்மதியாகத் தூக்கம் வந்தது.

ஒரு சம்பவம் தடயவியல் வட்டாரங்களில் அடிக்கடிப் பேசப்படுவதுண்டு.

**"அமிதாப் இப்படி ஒரு கேள்வி கேட்பார்னு நினைக்கவே இல்லை?"**

**"அப்படி என்ன கேள்வி?"**

**"மனைவி, அம்மா, மாமியார், வேலைக்காரி இவங்கள்ல யாருக்கு அதிகமா பயப்படுவீங்கனு கேட்டு பரிசு கிடைக்காம பண்ணிட்டார்!"**

**— அம்பை தேவா**

லண்டன் ஸ்காட்லண்டு யார்டில் ஒரு தடய அறிவியல் நிபுணர் தாம் ஓய்வு பெற்ற பின்பு ஸ்காட்லாந்து யார்டு போலீஸுக்கு ஒரு சவால் விட்டார். "நான் எந்தவித தடயமுமில்லாமல் perfect ஆக ஒரு குற்றத்தைச் செய்து முடிக்கிறேன்" என்றார் அவர். ஸ்காட்லாந்து யார்டு தலைவரும் ஒப்புக் கொண்டார்.

ஒரு குறிப்பிட்ட நாளில், ஒரு வீட்டுக்குள் சென்றார், அந்த நிபுணர். தரையில் ஷூ தடம் பதிந்து விடப் போகிறது என்று ஷூக்களுக்கு மேல் துணியுறை அணிந்து கொண்டார். கைகளில் கிளவுஸ். பீரோவைத் திறந்தார். தேவையானதை எடுத்துக்கொண்டார். மிகவும் நுட்பமாகச் சிந்தித்து செயல்பட்டுக் கொண்டிருந்ததால், வியர்த்துப் போனது. பிரிட்ஜைத் திறந்து பீர் பாட்டில் ஒன்றை எடுத்து பல்லினால், மூடியைக் கடித்து எறிந்துவிட்டு, கட, கடவென்று பீரைக் குடித்து முடித்தார். பீர் பாட்டிலில் படிந்திருந்த கைரேகைகளை ஞாபகமாகத்

துடைத்தார். பீர் பாட்டிலின் மூடியில் இருந்த உமிழ் நீரையும் துடைத்தார். பாட்டிலைச் சாப்பாட்டு மேஜையில் வைத்தார். எந்தத் தடயமுமில்லை என்பதை ஒரு முறைக்கு இருமுறை சரி பார்த்துவிட்டு வெளியே வந்தார். ஸ்காட்லாந்துயார்டுக்குப் போன் செய்து, "நான் 'அந்த' வீட்டில் பொருட்களை எடுத்துக் கொண்டு வந்துவிட்டேன். நீங்கள் போய் தடயம் ஏதாவது இருக்கிறதா என்று பார்த்துக் கொள்ளுங்கள்' என்று சொல்லி விட்டார்.

போலீஸ் வீட்டைச் சல்லடையாகச் சலித்துப் பார்த்தது. சம்பவம் நடந்து இரண்டு மூன்று நாட்கள் ஆயிற்று. குஷியாக விசிலடித்துக் கொண்டே அந்த நிபுணர் ஒரு பீர் கடைக்குள் நுழைந்து பீருக்கு ஆர்டர் செய்தார். பாட்டில் வந்தவுடன் பல்லால் மூடியைக் கடித்து பாட்டிலைத் திறந்தார். மூடியைக் கீழே துப்பி விட்டார். அவரைத் தொடர்ந்து கொண்டிருந்த ரகசிய போலீஸ்காரர் மூடியை எடுத்து, கைக்குட்டையில்



சுற்றி வைத்துக் கொண்டார்.

அந்தப் பெண்மணி வீட்டில் கண்டெடுத்த மூடியில் இருந்த பல் பதிவும் பீர் கடையில் நிபுணர் கடித்துத் துப்பிய மூடியில் இருந்த பல் பதிவும் ஒன்றாக இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. அவர் மாட்டிக்கொண்டார்! சவாலில் தோற்றுப் போனார்!

தடய அறிவியல் நிபுணர்களுக்கு உண்மையிலேயே சவால் விடுபவை தூக்கு மாட்டிக் கொண்டு தற்கொலை செய்து கொண்டவர்கள் தொடர்பான விசாரணை தான். அதிலும் இறந்து போனவர் ஒரு பிரபல நடிகையாக இருந்தால் கேட்கவே வேண்டாம். வதந்திகள் ஊர்வலம் போகும்.

நடிகை சில்க் ஸ்மிதா மரணத்தின்போதும் இப்படித்தான் ஆயிரத்தெட்டு வதந்திகள். சில்க் ஸ்மிதா இறந்தவுடன் அவரது வீட்டுக்குச் சென்ற போலீஸ் கைரேகை நிபுணர்களை அழைத்துச் செல்லவில்லை. தமது பெட்ரூமில் புடைவையினால் மின்விசிறியில் அவர் தூக்குப் போட்டுக் கொண்டதாகக் கூறப்பட்டது. போலீஸ் வருவதற்குள் உடல் இறக்கப்பட்டதால் அவர் எந்த நிலையில் தூக்கில் தொங்கினார் என்று போலீஸுக்குத் தெரியவில்லை. வீட்டில் இருந்தவர்களின் வாய்மொழியே எடுத்துக் கொள்ளப்பட்டது.

போலீஸ் விசாரணை நோக்கில் 'தற்கொலை' என்று கேஸ் முடிக்கப்பட்டாலும் ஒரு தடய அறிவியல் விஞ்ஞானியின் பார்வையில் பதில் தேடும் கேள்விகள் இந்த விவகாரத்தில் நிறைய உண்டு என்பது என் கருத்து.

ஸ்மிதா ஏறி நின்று தூக்குப் போட்டுக் கொண்ட டீபாயில் அவர் காலடி பதிந்திருந்ததா என்று போலீஸ் பார்த்திருக்க வேண்டும். ஏனென்றால் ஒருவரைக் கொன்று அவரைத் தூக்கில் மாட்டிவிட்டு கீழே டீபாயில் ஏறி நின்றது போன்று செட் அப் செய்திருந்தால் அதில் இறந்தவரின் பாதம் பதிந்திருக்காது. கொலை செய்யப்பட்டு மாட்டப்பட்டிருந்தால் வேறு நபர்களின் கை காலடி அடையாளங்கள் தரை, டீபாய் போன்றவற்றுள் பதிந்திருக்கும்.

ஸ்மிதாவின் கழுத்துப் பகுதியில் காணப்பட்ட 'சுருக்குக் கயிறு' தழும்புகளை ஆராய்ந்து அது கொலையா; தற்கொலையா என்று உறுதியாகச் சொல்லியிருக்கலாம்.

அதேபோல் ஸ்மிதா தூக்குப் போட்டுக் கொண்டதாகக் கூறப்படும் புடைவையில் உமிழ்நீர் படிந்திருக்கிறதா என்று பார்ப்பது மிக அவசியம். உமிழ்நீர் படிந்திருந்தால் தற்கொலை என்று முடிவு செய்யலாம்.

தூக்குப் போட்டுக் கொள்ள புடைவையைப் பயன்படுத்தினால், உயிர் போகிற சமயம், கை, கால்கள் உதறினால் எடை கூடும். அந்த எடை, புடைவை நூல் இழையில் விரிசல்களை ஏற்படுத்தும் சிறு ஓட்டைகளும் விழும். ஆனால் கொலை செய்து தூக்கில் மாட்டி விட்டால் புடைவையில் இது போன்ற தடயங்கள் ஏதுமிருக்காது.

இப்படித்தான் நடிகை ஷோபா தூக்குப் போட்டுக் கொண்டு இறந்ததாகச் சொன்ன வழக்கிலும் தடய அறிவியல் நிபுணர்கள், சம்பவம் நடந்த இடத்துக்கு உடனடியாகச் சென்று பார்க்கவில்லை. ஆறு மாதங்கள் கழித்து ஷோபாவின் புடைவையை அனுப்பி 'இது ஷோபாவின் எடையைத் தாங்கக் கூடிய வகையில் இருக்கிறதா?' என்று கேட்டார்கள்.

ஷோபாவின் எடையைக் கணக்கில் கொண்டு டம்மியாக ஓர் உருவம் செய்து அதே புடைவையால் தூக்குப் போட்டுப் பார்த்தோம்.

(தொடரும்)

# ஞாபகத்தில் ஒரு மரம்

சூரிய பகவான் தனது வேலையைத் தொடங்கிவிட்ட நேரம். மூங்கில் இலை மீது தூங்கிய பனித்துளிகள் பூமியை நனைத்துக் கொண்டிருக்க, அந்த அடர்ந்த மரங்களுக் கிடையில் காற்று வாங்க மூச்சு விடும் ஓட்டப் பந்தய வீரன் போல் அவரது செருப்பு... சப்தம் போட்டுக் கொண்டிருந்தது.

அந்தக் காலைப் பொழுதில் கையில் கொடுவாளுடனும், தோளில் அலகுடனும், மூங்கில் புதர்களுக்கு இடையில் நடந்து கொண்டிருந்த ஜெகநாதனுக்கு வயது அறுபதைத் தொட்டிருந்தது. நல்ல கம்பீரமான உடல், அகன்ற மார்பு, யானையின் தும்பிக் கைக்கு நிகரான புஜம். இப்படி பலமான உடலைப் பெற்றிருந்த அவர், தாம் தேடி வந்த இடம் வந்ததும் அப்படியே அண்ணாந்து பார்த்தார். அங்கே மூங்கிலின் வளர்ச்சி அபாரமாய் இருந்தது!

அலகையும், கொடுவாளையும் கீழே வைத்தவர், வெற்றுடம்பில் கிடந்த துண்டை எடுத்து... தலைப்பாகை கட்டிக் கொண்டு, வேட்டியைத் தார்பாச்சாகக் கட்டினார். விறு... விறு... என்று வேலை செய்ய ஆரம்பித்தார்.

மூங்கில் முட்களுக்கிடையே... சளைக்ககாமல் வேலை செய்தவர், சிறிது நேரத்திலேயே... நான்கு கவைக்கு மேல், மூங்கில் போத்துக்களை வெட்டி அடுக்கியிருந்தார்.

அந்தச் சமயத்தில், நாற்பது வயது மதிக்கத்தக்க... அலமேலு... சாப்பாடு கொண்டு வந்தாள்.

''என்ன... சின்னபுள்ள உன்னோட வீட்டுக்காரனை... காணும்...?''

"எங்கண்ணை... அவருக்கு வேலை ஒழியுது? கரும்புக் காட்டுல... வேலை சரியா இருக்கு! இங்கே வந்தாலும் நாலு கவை முன்ன எடுத்து அடுக்கலாம். நான் சொன்னால் இந்தக் குடும்பத்துல... யார் கேக்குறாங்க...!''

"அவன் எதுக்கு சின்னபுள்ள...! வெட்டுறது.... ஒருத்தர், அடுக்குறது ஒருத்தரா...? அதெல்லாம் வேணாம். நானே இன்னைக்குள்ள... முடிச்சிடுவேன்.''

"வேண்டாம்ண்ணே... அப்படி... அவசரமா வேலை செஞ்சி... நாளைக்கேவா... வேலி போடப் போறோம். இன்னைக்கு அஞ்சி கவ... நாளைக்கு... அஞ்சி கவ.. வெட்டினாப்... போதும்...''

''சின்ன புள்ள... நீ ஒண்ணும் பேச வேணாம். நான் மதியச் சாப்பாட்டுக்குள்ள... பத்துக் கவையும் வெட்டிடுவேன்.''

"ஏன்தான் இப்படி பத்து ரூவா... பணத்துக்கு... மாடா... உழைக்கிறீங்களோ... தெரியலை...!''

''ஒத்த ரூவா... சம்பளமா இருந்தாலும், வேலை ஒழுங்கா இருக்கணும். அப்பத்தான் மனசுக்கு நிம்மதி தெரியும்!''

''உழைச்ச... கட்ட கம்மாவா இருக்கும்! நீங்க எதனாச்சும் பண்ணுங்க... அதுக்கு முன்னால சாப்பிட்டு... என்னை விடுங்க...'' என்றவள் பழைய சாதத்தையும், ஊறுகாயையும் எடுத்து வைத்ததும், ஓடையில் வாய் கொப்பளித்தவர் வந்தமர்ந்து முதல் கை சாதத்தை ; ்ள்ளி வாயினுள் போட்டார்.

''ஏண்ணே...! பழைய சோறுதான் வேணும்னுட்டு வந்தீங்களே...! உங்க மருமகளுங்க... கடுசோறுதான் தரேங்கறாங்க. அதுக்கு என்ன செய்றீங்க...'' என்று அவள் சொல்லி முடித்ததுமே...! வாயில் சோற்றை வைத்திருந்தவரின் கண்களில் இருந்து பொல... பொலவென்று... கண்ணீர் கொட்டியது.

''இப்ப... என்னண்ணே... கேட்டுட்டேன். இப்படி அழுவுறீங்க...'' என்று அலமேலு

## அமிர்த. சிவநேசன்

கேட்டதும், ஒரு பிடி சோற்றைக் கையில் அள்ளியவர் "இந்த அன்னத்தை... தின்னு... ரெண்டு நாளாகுது... சின்ன புள்ள..." என்று சொன்னபோது... அலமேலுவுக்கே... அழுகை வந்தது.

"தாயில்லாத புள்ளை போல... படாத கஷ்டப்பட்டு... தாய்க்கு தாயா... வளர்த்ததுக்கா... இந்தத் தண்டனை!" என்றவன் தன் முந்தானையை எடுத்து, கண்களைத் துடைத்தாள்.

அனாதையா... நிப்பீங்களா...?"

"இல்ல... சின்னபுள்ள... அவ... அவசரமே... படுல...! நான்தான் அவசரப்பட்டு... துறந்திட்டேன்.

"என்ன... சொல்றீங்கண்ணே...?"

"ஆமாம் சின்னபுள்ள... அவள் செத்துப் போன தீபாவளி



"இல்ல... சின்ன புள்ளே... தப்பு என்னோடதுதான். என்னோட செல்லப் பாங்கி இருந்திருந்தால் இப்படி ஆவுமா...?" என்றவர் உயரே வானத்தை நோக்கி..." செல்லம்... செல்லம்... நீ எங்கே இருக்கேன்னு... சொல்லு... நீ... என்னை மதிச்சி வாழ்ந்தது உண்மைன்னா... என்னையும் உன்னோட கூட்டிக்க... தாயி..." என்று வேகமாகக் கதறினார்.

"ஏண்ணே... அந்த மவராசி... அவசரப்பட்டு...போகலைன்னா... நீங்க இப்படி... அன்னைக்கு... லேட்டா... வீட்டுக்கு வந்த... எனக்குத்தான் புத்தி கெட்டுப் போச்சி..." என்றவர் அழுதுகொண்டே விவரித்தார்.

"ஏன்யா... இப்படி குடும்பத்து மானத்தை போக்குற...! நம்ம வைராவி லேயே... இப்படி யாரும் அடுத்தவ... கால்ல... விழுந்து கெடக்கல... நான் அதையெல்லாம் என்னைக்காவது கேட்டிருக்கேனா...? இன்னைக்கு... தீபாவளிதானே... இன்னைக்

## கண்டுகொள்வாரா கமல்!

**'ஹே** ராம்' படம் எடுத்ததைத் தமிழ் ரசிகர்கள் மட்டுமில்லை கமல் கூட மறந்துவிட்டிருக்கக் கூடும். ஆனால் சென்னையில் உள்ள காந்திஜி கல்வி மையத்தைச் சேர்ந்த அண்ணாமலை கண்டிப்பாக மறக்க மாட்டார்.

ஹே ராம் படம் எடுத்தபோது, காந்திஜி பற்றிய பல்வேறு தகவல்களைத் திரட்டிக் கொண்டிருந்த கமலுக்கு, காந்திஜி சம்பந்தப்பட்ட அரிய புத்தகங்கள் மற்றும் காந்திஜியின் மொத்த வாழ்க்கையையும் எடுத்துச் சொல்லும்படியாய் முழுக்க முழுக்க புகைப்படங்கள் அடங்கிய ஆல்பம் ஒன்றையும் எடுத்துக் கொடுத்தார் அண்ணாமலை. படம் எடுத்து, வெளியிடப்பட்டு விட்டது. ஆனால் காந்திஜி கல்வி மையத்திலிருந்து எடுத்துச் செல்லப் பட்ட புத்தகங்கள் மட்டும் இன்னும் திரும்பி வரவில்லை.

மையத்தின் பொறுப்பாளரான அண்ணாமலை, கமல் அலுவலகத் துக்குப் பலதடவை டெலிபோன் செய்து சலித்துப் போய்விட்டார். ஒருவழியாக, கமலின் உதவியாளர் ஒருநாள் அண்ணாமலையைத் தேடிவந்து ஆறு புத்தகங்களைத் திருப்பிக் கொடுத்தார். மீதி இரண்டு புத்தகங்களையும், புகைப்பட ஆல்பத்தையும் கேட்ட போது சரியான பதில் கிடைக்கவில்லை.

'கமல் சாருக்கு ஒரு கடிதம் எழுதிக் கொடுங்கள். நானே அதை எடுத்துக் கொண்டுபோய், அவரிடம் சேர்த்துவிடுகிறேன்' என்று அவர் சொன்னதன் பேரில், அண்ணாமலை ஒரு கடிதம் எழுதிக் கொடுத்திருக்கிறார். ஆனாலும் சில புத்தகங்களும், ஆல்பமும் இன்றுவரை திருப்பித்தரப்படவில்லை.

''எங்கள் நூலகத்திலிருந்து, புத்தகங்களை மட்டுமே எடுத்துச் செல்ல அனுமதி உண்டு. புகைப்பட ஆல்பத்தை வெளியே கொடுக்கவே கூடாது. யாருக் காவது, எந்த புகைப்படத்தின் பிரதியாவது தேவைப்பட் டால், அதை நாங்களே பிரதியெடுத்துக் கொடுப்பதுதான் வழக்கம். ஆனால் காந்திஜியைப் பற்றி கமல் படம் எடுக்கிறார். எனவே அந்தந்தக் காலகட்டத்தைச் சித்திரிப் பதற்குப் பல புகைப்படங்கள் தேவைப்படுகின்றன. எனவே உங்கள் ஆல்பத்தைக் கொடுங்கள். எங்கள் அலு வலகத்திலேயே பிரதி எடுக்க வசதி இருக்கிறது. எடுத்த வுடன், பத்திரமாகத் திருப்பிக் கொடுத்து விடுகிறோம்' என்று அவர் அளித்த உறுதிமொழியின் அடிப்படையில் தான், நான் ஆல்பத்தை எடுத்துப் போக அனுமதித்தேன். இப்போது விஷயம் சிக்கலாகிவிட்டது. நாளை புத்தக சரிபார்ப்பின்போது, அந்த ஆல்பம் மற்றும் புத்தகங்கள் பற்றிய கேள்வி எழுந்தால் எங்களிடம் பதில் இல்லை'' என்று ஆதங்கத்துடன் குறிப்பிடுகிறார் அண்ணாமலை.

கமல் காதில் விழுமா?

– நமது நிருபர்

காவது... நேரத்துல... இந்தப் புள்ளை யோளுகளுக்கு எண்ணெய் தேச்சிக் குளிப்பாட்டலாம்ல? எத்தனை வேலையதான் ஒரு பொம்பள... மெனக்கட்டு... செய்யறது...!''

''ஏண்டி! என்ன ஒண்ணும் தெரியாதவன்னு... நெனச்சியா...? உங்கப்பன் அந்தப் பொட்டங்காட்டு... பயலுக்கு மட்டும் பசுமாடு... வாங்கிக் கொடுக்கிறான். அந்த வீட்டுக்கு என்னடி ஆச்சு?''

''என்னையா... இது? எதையோ... மறைக்க என்னோட தங்கச்சியை இழுக்குற...! அவதான் ஒண்ணுமில்லாத குடும்பத்துல... வாக்கப்பட்டுட்டான்னு... நீதானே... எங்கப்பாவை... அவனுக்கு மாடு வாங்கிக் கொடுக்கச் சொன்னே...?''

''அதெல்லாம் தெரியாதுடி.... இப்போ... எனக்கும் ஒரு பசுமாடு வேணும்.''

''ம்ம்... ஏதாவது நடக்குற காரியமா பேசு...! ஏலேய் அந்த நல்லெண்ணெயை எடுத்து வந்து தேச்சிவிடச் சொல்லுங் கடா...!''

''ஏய், அது... எனக்குத் தெரியும்டி... மூதல்ல... நீ... வீட்டை விட்டு... வெளியே... போ...! இல்ல... உதைச்சே...கொன்னுடுவேன்.''

''அப்படியாவது... அடிச்சி கொன்னுட்டு... அவளோடவே... சந்தோஷமா இருந்துடேன்.''

''ஏண்டி... நான் அடிக்க மாட் டேன்குற... துணிச்சல்லதானே... இப்படிப் பேசுற...!'' என்ற ஜெகநாதன் ஓங்கி ஓர் அறை விட்டார்.

''நான் இனிமே... இந்த வீட்ல... உன்னைப் பார்க்கக் கூடாது. இனிமே நானும் என்னோட பிள்ளைகளும் உன் கையால... சாப்பிட மாட்டோம். நீயாப் போறியா...? இல்ல ஒதச்சி அனுப் பட்டுமா...?''

''நான் என்னோட புள்ளையோள விட்டுப் போக மாட்டேன். என்னைக் கொன்னாலும் போக மாட்டேன்!''

''அப்போ... இந்தா... கயிறு... எங்கே யாவது போய் தாண்டுகிட்டுத் தொங்கு...!''

வேண்டாம்யா... என்னோட புள் ளைங்க... அனாதையா ஆயிடும்...!''

"அதை நான் பார்த்துக்கிறேண்டி... இனி நீ உயிரோட இருந்தாலும் எம்புள்ளையோள பார்க்க விட மாட்டேன். நீ ரோஷமுள்ள... பத்தினியா... இருந்தின்னா... நான் டீக் கடைக்குப் போய்ட்டு வரும்போது... இங்கே இருக்கக் கூடாது...

நடந்ததை முழுவதும் அவர் சொல்லி முடித்தபோது... அலமேலுவுக்குத் துக்கம் தொண்டையை... அடைத்தது.

"அதிலேருந்து நான் அவளை நெனச்சதே இல்ல... ஆனால் என்னோட சின்ன மருமவ கேட்ட கேள்வியிலதான் அவ ஞாபகமே... வந்தது. நான் செஞ்ச தப்புக்கு இன்னும் அனுபவிக்கணும். நல்லா... அனுபவிக் கணும்."

"என்னன்னே... இது...! நம்ம மருமவ தானே திட்டினான்னு... விட்டுட்டுப் போவீங்களா...?"

" எப்படி திட்டறதுன்னு இல்லையா சின்னபுள்ள...! முந்தா நேத்து பத்து மணிக் குப் போய் என்னோட பேரனிடம், தாத்தா வந்திருக்கேன்னு சொல்லுடான்னேன். ஆனால் உள்ளே படம் பார்த்திட்டு இருந்த என்னோட சின்ன மருமவள் வெளியே வரவே இல்ல... உடனே நான் உள்ள போயி... 'ஏன் தாயி... பசிக்குது. சோத்த போட்டீன்னா, நான் என் ஜோலியைப் பார்ப்பேன்ல...' - அதுதான் நான் சொன் னேன். அதுக்கு... அவ... என்ன கேட்டா தெரியுமா?"

"நான் உனக்குப் பொண்டாட்டியா? இல்ல உன் மவனுக்குப் பொண்டாட்டியா...? மீதம் இருக்குற... சாதத்தை நான் யாருக்குக் கொடுக்குறது..." அப்படின்னு... பேசுறா...?

"உங்க சின்ன மருமவளா அப்படிப் பேசினா?"

"அவமேல தப்பே இல்ல சின்னபுள்ள...! அவளுக்கு அவ புருஷன்தான் முக்கியம். எனக்குன்னு... யார் இருக்காங்க...! இது என்னோட மவனுகளுக்குத் தெரியக் கூடாது...''என்றவர் கலக்கமாக உட் கார்ந்திருந்தார்.

"சின்னபுள்ள... நீ... கௌம்பு... நான் முள்ளு வெட்டிட்டு போவணும்."

"எங்கண்ணே... போகணும்?"

"நான் பண்ணுன... தப்புக்கெல்லாம் பரிகாரம் வேணாமா...?" என்றவர் வேலை செய்யத் தொடங்கியதும் அலமேலு அம்மாள் வீட்டுக்குப் புறப்பட்டாள்.

சூரியன் தன் வேலையை முடித்து கதவைச் சாத்திக் கொண்ட பிறகும் ஜெக நாதனைக் காணாததால், அலுமேலுவின் புருஷன் ஓடையோரத்துக்குச் சென்று பார்த்தார்.

அங்கே பத்துக்கவை முள் கம்பீரமாய் அடுக்கி இருந்தது. ஆனால் அவரை எங்குமே காணாததால் வீட்டிற்கு வந்து மனைவியிடம் சொன்னார். உடனே அவளுக்கு நெஞ்சம் பதைபதைக்கத் தொடங்கியது.

"சின்ன புள்ள... நான் செல்லத்தைப்... பாக்கணும்; செல்லத்தைப் பாத்து மன்னிப்பு கேக்கணும்..." என்று ஜெகநாதன் சொன்னது அலமேலுவின் காதுகளில் ஒலித்தது.



வலிமை என்பது அசைக்க முடியாத மன உறுதியில் இருந்து வருகிறது. மனத்தின் தூய்மை அதிகம் இருந்தால், நமது வலிமை அதிகமாக இருக்கும்.

— காந்தியடிகள்

தகவல்: வயலூர் இராமசாமி

"ஏங்க... நீங்க... வீட்டுக்குப் பின்னால இருக்குற.. மாந்தோப்புக்குப் போய்ப் பார்த்துட்டு வாங்களேன்" என்று அலமேலு சொன்னதும் மாந்தோப்புக்குச் சென்றார் ஜெம்புலிங்கம். இருபது வருடத்திற்கு முன்பு செல்லப்பாங்கி... தூக்கு மாட்டிக் கொண்ட... அதே மாமரத்தை அண்ணாந்து பார்ப்பதற் குள் அவர் இதயம் நின்று இயங்கியது.

இருட்டில் கால்கள் தொங்கி ஊசலாடு வது போன்ற பயங்கர பிரமை...

பின்னால் விசும்பல் சப்தம் கேட்டது... ஜெகநாதன்! இருபது வருஷத்துக்கு முன் அவர் அழவில்லை என்பது ஜம்புலிங் கத்துக்குத் தெளிவாக ஞாபகமிருந்தது.

# பொன்னியின் செல்வன்

முப்பத்து ஒன்பதாம் அத்தியாயம்

## காரிருள் சூழ்ந்தது!

ஆதித்த கரிகாலனுடைய பயங்கரமான வெறி கொண்ட சிரிப்பு யாழ் களஞ்சியத்தில் ஒளிந்திருந்த வந்தியத்தேவனுடைய காதில் விழுந்து அவனுக்கு ரோமாஞ்சனத்தை உண்டாக்கியது. விரைவில் ஏதோ விபரீதம் நிகழப் போகிறது என்று அவனுடைய உள்ளுணர்ச்சி கூறியது. நிழல் வடிவங்கொண்ட யம தர்மராஜன் கையில் பாசக் கயிறுடன் அந்த அறையில் பிரசந்நமாயிருந்தான். பாசக் கயிற்றை வீசுவதற்குச் சமயம் நோக்கிக்கொண்டிருந்தான். ஆனால் யார் மீது எறியப் போகிறான்? யாருடைய உயிரைக் கொண்டு போகப் போகிறான்? கரிகாலன் உயிரையா? அல்லது நந்தினி தேவியின் உயிரையா? ஒருவேளை அவர்கள் இருவரையுமே மரணம் நெருங்கிக்கொண்டிருக்கிறதா? சகோதரன் சகோதரியைக் கொல்லப் போகிறானா? சகோதரி சகோதரனைக் கொல்லப் போகிறாளா? அல்லது இருவரும் ஒருவரையொருவர் கொன்று கொண்டு சாகப் போகிறார்களா? – இம்மாதிரி ஏதும் நடவாதபடி தடுப்பதற்குத்தான் இளையபிராட்டி தன்னை விரைந்து போகும்படி அனுப்பி வைத்தாள். தன்னால் இயன்றதைச் செய்தாகி விட்டது. இருவரிடமும் அவர்களுக்குள்ள உறவைப் பற்றிச் சொல்லியாகி விட்டது. இருவருடைய உள்ளமும் இளகும்படியும் செய்தாகி விட்டது. ஆனாலும், பலன் ஏற்படுமா? வெறி கொண்ட கரிகாலரையோ,

அமரர் கல்கி

பிரமை பிடித்த நந்தினியையோ, கொடூரச் செயல் எதுவும் செய்யாமல் தடுக்க முடியுமா? இந்தச் சமயத்தில் தான் நடுவில் குறுக்கிடுவதால் ஏதேனும் நன்மை விளையுமா? ஒருவேளை இருவருக்கும் மத்தியில் தன்னுடைய உயிரைப் பலி கொடுப்பதினால், அவர்களுடைய குரோதம் தணியுமா? - இவ்வாறெல்லாம் எண்ணி வந்தியத்தேவனுடைய உள்ளக் கடல் கொந்தளித்துக் கொண்டிருந்தது. இன்னும் சிறிது பொறுத்துப் பார்க்கலாம், - தான் அவசரப்பட்டுக் குறுக்கிடுவதினால் காரியம் கெட்டுப் போக வேண்டாம் என்று பல்லைக் கடித்துக் கொண்டு நின்றான்.

கரிகாலருடைய வெறி கொண்ட சிரிப்பு அடங்கிய பிறகு, அவர்களுடைய சம்பாஷணை மேலும் தொடர்ந்தது.

"ஐயா! என் வாழ்நாளில் தங்களுக்கு மகிழ்ச்சி தரும்படியான காரியம் எதுவும் நான் செய்ததில்லை. சாகும் சமயத்திலாவது தாங்கள் சிரித்து மகிழுவதற்குக் காரணமானது பற்றிச் சந்தோஷம்" என்றாள் நந்தினி.

"ஆம், நந்தினி! இன்றைக்கு எனக்கு மிகச் சந்தோஷமான தினந்தான். இத்தனை வருஷமாக நீ என்னைப் படுத்தி வைத்த பாட்டுக்கெல்லாம் இன்றைக்கு முடிவு ஏற்படப் போகிறது. இந்தத் தடவை நான் காஞ்சியிலிருந்து புறப்பட்டபோது ஒருவாறு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டுதான் வந்தேன். உன்னை நேரில் பார்த்த பிறகு ஒருவேளை என் மனம் சலித்து விடுமோ என்று பயந்துகொண்டிருந்தேன். அதற்கிடமில்லாமல், நீயே வாளை என் கையில் கொடுத்துவிட்டாய்!" என்று கூறிக் கரிகாலன் மீண்டும் சிரித்தான்.

"கோமகனே! எனக்கும் இன்று சுதினந் தான். தங்கள் கையினால் வெட்டுண்டு இறப்பதைப் போன்ற இனிமையான மரணம் எனக்குக் கிட்டப் போவதில்லை. ஒரு காலத்தில் தாங்கள் என் கழுத்தில் பூமாலை சூட்டப் போகிறீர்கள் என்று





ஆசைக் கனவு கண்டு கொண்டிருந்தேன். அது நிறை வேற முடியாமற் போயிற்று. தங்கள் கையிலுள்ள வாளை என் கழுத்தில் சூட்டிக் கொள்ளும் பேறாவது எனக்குக் கிடைக்கட்டும். ஐயா! நேரம் ஆகிறது. ஏன் தாமதிக்கிறீர்கள்?" என்றாள் நந்தினி.

"பல வருஷம் தாமதித்தாகி விட்டது. இன்னும் சில நிமிஷம் தாமதிப்பதினால் நஷ்டம் ஒன்றுமில்லை. நந்தினி! சற்று என்னைப் பார்! கடைசி முறையாக என்னைப் பார்த்து என் கேள்விக்கு மறுமொழி சொல்! பூமாலை சூட்ட வேண்டிய கையினால் நான் ஏன் உனக்கு வாள் மாலை சூட்ட வேண்டும்? நீ ஒரு காலத்தில் ஆசைக்கனவு கண்டது உண்மையாக இருந்தால், இப்போது ஏன் அதை நிறைவேற்றிக் கொள்ளக் கூடாது? அதற்குத் தடையாக நிற்பவர்கள் யார் என்று சொல்லு! உன்னைக் கொல்லுவதற்குப் பதிலாக அவர்களைக் கொன்று விட்டு மறு காரியம் பார்க்கிறேன்!" என்றான் கரிகாலன்.

"வேண்டாம், ஐயா! வேண்டாம்! உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு. என் காரணமாக, இனி வேறு யாரும் சாக வேண்டாம்! யாரும் தடையாக நிற்கவும் இல்லை. என்னுடைய தலைவிதிதான் தடையாக இருக்கிறது!"

"அந்தத் தடையை ஒரு நொடியில் நான் தவிடுபொடி செய்துவிடுகிறேன். தலைவிதியின் பேரில் பாரத்தைப் போடாதே! பிரம்மா எழுதிய எழுத்தை நான் மாற்றி எழுதுகிறேன், பார்...!"

நந்தினி குறுக்கிட்டு, "பிரம்மா எழுதிய எழுத்தை மாற்றி எழுதலாம். ஆனால் ஒருவருடைய பிறப்பை மாற்றி அமைக்க முடியுமா?" என்று கேட்டாள்.

"எதைப் பற்றிக் கேட்கிறாய், நந்தினி! நமது சிறு பிராயத்தில் உன்னைப் பட்டர் குலத்துப் பெண் என்றும், அதனால் உன்னுடன் சிநேகம் செய்யக் கூடாதென்றும் என் குடும்பத்தினர் சொன்னார்களே, அதைப் பற்றியா? இல்லை! நீ பட்டர் குலத்தில் வளர்ந்தவளேயன்றி அந்தக் குலத்தில் பிறந்தவள் அல்ல என்பதை நீயும் நானும் முன்பே அறிந்திருந்தோம்."

"அதைப் பற்றி இப்போது சொல்லவில்லை, ஐயா! தங்கள் அருமை நண்பர், வாணர் குலத்து வீரர் – கொண்டு வந்த செய்தியைப் பற்றியே சொல்லுகிறேன். பழையாறை இளையபிராட்டி அவசரமாகச் சொல்லியனுப்பிய செய்தியைப் பற்றியே கூறுகிறேன். நான் தங்கள் சகோதரி என்பதை இதற்குள்ளாகவே மறந்து விட்டீர்களா?"

"நந்தினி! அன்றைக்கு நான் உன்னிடம் அதைப்

பற்றிச் சொன்னபோது, நீ அதை நம்பவில்லை. உன்னையும் என்னையும் பிரித்து வைப்பதற்குச் செய்யும் இன்னொரு சூழ்ச்சி என்றாய். பிறகு நானும் யோசித்து அதே முடிவுக்கு வந்தேன். அதை நிச்சயம் செய்து கொள்ள வேண்டுமானால்..."

"வேண்டாம்! வேண்டாம்! எனக்கு அதைப் பற்றிச் சந்தேகமே இல்லை. கோமகனே! தங்களுக்கும் எனக்கும் இரத்த சம்பந்தம் ஏதுவுமில்லை..."

"பின், என்ன தடை, நந்தினி?"

"நான் தங்களுக்குப் பாட்டனார் முறையிலுள்ள பழுவேட்டரையரை மணந்தவள். தங்களுக்குப் பாட்டி முறையில் உள்ளவள். இது போதாதா?"

"நந்தினி! அந்தக் கதையைச் சொல்லி என்னை மறுபடியும் ஏமாற்றப் பார்க்க வேண்டாம். உலகத்தின் முன்னிலையில் நீ பழுவேட்டரையரின் இளையராணியாக இருக்கலாம். ஆனால் உண்மையில் நீ அவரை மணந்துகொள்ளவில்லை. ஏதோ காரணார்த்தமாகவே அவருடைய அரண்மனையில் வந்திருக்கிறாய். முன்னொரு தடவை, தஞ்சையில் நான் கேட்டபோது, இவ்வாறுதான் கூறினாய். அப்போது நான் நமது ஆசைக் கனவை உனக்கு நினைவூட்டினேன். அதை நிறைவேற்றுவதற்கு நீ பயங்கரமான நிபந்தனைகளை விதித்தாய்! பழுவேட்டரையரைக் கொன்று, என் தந்தையையும், சகோதரியையும் சிறையிலடைத்துவிட்டு, உன்னைச் சோழ சிங்காதனத்தில் ஏற்றி வைக்க வேண்டும் என்றாய். வெறி கொண்ட ராட்சஸி நீ என்று தீர்மானித்துக் கொண்டு நான் காஞ்சிக்குப் போனேன். அப்புறம் நீ என்னை விட்டு விட்டாயா? இல்லை! ஓயாமல் ஒழியாமல் கனவிலும் நினைவிலும் வந்து என்னை வதைத்துக் கொண்டிருந்தாய். சில சமயம் அழுது புலம்பி என்னைத் துன்புறுத்தினாய்; சில சமயம் மோகனப் புன் சிரிப்புச் சிரித்து என் உயிரை வதைத்தாய்; சில சமயம் பிச்சியைப் போல் சிரித்து என்னையும் பித்தனாக்கினாய்...!"

"கோமகனே! தங்களுடைய மனப் பிரமைக்கு என் பேரில் ஏன் குற்றம் சுமத்துகிறீர்கள்? தாங்கள் எனக்குச் செய்த அநீதிக்கும் கொடுமைக்கும் பலனை அனுபவித்தீர்கள். அதற்கு நான் என்ன செய்வேன்? நான் மட்டும் கஷ்டப்படவில்லையென்று எண்ணுகிறீர்களா? பழுவேட்டரையரின் மாளிகையின் சுகபோகங்களில் ஆழ்ந்து குதூகலமாயிருந்தேன் என்று நம்புகிறீர்களா?" என நந்தினி கேட்ட குரலில் மீண்டும் பழையபடி ஆத்திரமும் கொடூரமும் பொங்கித் ததும்பின.

இதைக் கேட்டு வந்தியத்தேவன் பீதி கொண்டான். அவனுடைய உடம்பு படபடத்தது.


திதத கரிகாலரின் ஸ்வரமும் ஏறத் தொடங்கியது.

"நீயும் கஷ்டப்பட்டதாகவா சொல்கிறாய்? அப்படியானால், இப்போது ஏன் நாம் ஏதேதோ பேசிக் கொண்டு வீண் பொழுது போக்க வேண்டும்? என்னுடன் புறப்பட்டு வருவதற்கு உன்னுடைய சம்மதத்தைத் தெரியப்படுத்து. உடனே புறப்பட்டுச் செல்வோம். உனக்காக நான் இந்தப் பெரிய சோழ இராஜ்யத்தைத் தியாகம் செய்துவிட்டு வரச் சித்தமாயிருக்கிறேன். பிறந்த நாட்டையும் தாய் தந்தையரையும் உற்றார் உறவினரையும் துறந்துவிட்டு வருகிறேன். கப்பல் ஏறிக் கடல் கடந்து செல்வோம். கடல்களுக்கு அப்பால் எத்தனை எத்தனையோ அற்புதமான தீவ தீவாந்தரங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்றை அடைவோம். உன்னைக் காட்டிலும் இந்த இராஜ்யம் எனக்குப் பெரியதன்று."

"கோமகனே! தாங்கள் இராஜ்யத்தைத் துறந்தாலும் துறப்பீர்கள்! ஆனால் இந்தக் கீழ்க்குல மகள் புராதனமான சோழ சிங்காதனத்தில் ஏறுவதற்குச் சம்மதிக்க மாட்டீர்கள் இல்லையா?" என்று கூறிவிட்டு நந்தினி நகைத்த நகைப்பில் தீப்பொறி பறந்தது.

"பெண்ணே! இதை வேறு விதமாகப்

பார்! உனக்கு என்னைக் காட்டிலும் சோழ சிங்காதனம் உயர்வானதா? என்னிடம் நீ அந்த நாளிலிருந்து காட்டிய பிரியம் எல்லாம் சிங்காதனம் ஏறி மணிமகுடம் சூடும் ஆசையினால் நடித்த நடிப்புத் தானா?' என்றான் கரிகாலன்.

"ஆகா! அப்படியே வைத்துக் கொள்ளுங்கள். எனக்கு அரண்மனை வாழ்வும் அரச போகமும் அரியாசனமும்தான் வேண்டும். இவற்றுக்காகவே, பழுவேட்டரையரை நான் மணந்தேன். இவற்றுக்காகவே வீர பாண்டியரைக் காப்பாற்றுவதற்கு முயன்றேன்..."

"அடி பாதகி! அவன் பெயரை எதற்காக இப்போது சொல்லுகிறாய்?" என்று கர்ஜனை செய்தான் கரிகாலன். நந்தினி மறுமொழி கூறுவதற்கு முன்னால் அவன் தொடர்ந்து மேலும் கூறினான்:-

"ஆகா! எனக்குத் தெரிகிறது. உன்னுடைய சூழ்ச்சியெல்லாம் எனக்கு இப்போது நன்றாய்த் தெரிகிறது. வீர பாண்டியனுடைய பெயரைச் சொன்னால் எனக்கு ஆத்திரம் வரும். நான் உன்னை உண்மையாகவே கொல்ல வருவேன். உடனே இங்கு நீ காலால் இட்டதைத் தலையால் செய்யக் காத்திருக்கும் வாலிப சிங்கங்களில் ஒருவன் வந்து என்னைக் கொன்று விடுவான் என்பது உன் அந்தரங்க நோக்கம். அடி சண்டாளி! அந்த வந்தியத்தேவன் எங்கே இருக்கிறான்? எங்கே அவனை மறைத்து வைத்திருக்கிறாய், சொல்! இங்கேதான் அவன் ஒளிந்து கொண்டிருக்க வேண்டும். நீ என்னோடு வர மறுப்பதற்குக் காரணமும் இப்போது நன்றாய்த் தெரிகிறது. ஆமாம்; அவன்தான் காரணம்! அவனோடு நீ ஓடிப் போக எண்ணியிருப்பதுதான் காரணம். பழுவேட்டரையரை நீ இவ்விடம் விட்டு அனுப்பியதற்கும் அவன்தான் காரணம். நீங்கள் இரண்டு பேரும் சேர்ந்து பேசிக் கொண்டுதான் இப்படியெல்லாம் சூழ்ச்சி செய்திருக்கிறீர்கள்... ஆகா! எப்படி நான் ஏமாந்து போனேன்? எங்கே அந்தப் பாதகன் வந்தியத்தேவன்? எங்கே உன்னுடைய புதிய காதலன்...?"


வ்வாறு ஆதித்த கரிகாலர் வெறிக் கூச்சல் போட்டுக்கொண்டே கத்தியைச் சுழற்றிக்கொண்டு அங்குமிங்கும் அந்த அறையில் ஓடத் தொடங்கினார். ஒரு சமயம் யாழ்க் களஞ்சியத்தை நெருங்கி வந்தார். அப்போது நந்தினி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்று அவர் காலடியில் விழுந்து "கோமகனே! இதைக் கேளுங்கள்! உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு. நான் சொல்வதைக் கேட்டு விட்டுப் பிறகு எது வேணுமானாலும் செய்யுங்கள். வாணர்குல வீரரைப் பற்றித் தாங்கள் கூறுவது அபாண்டம். பூமாதேவி பொறுக்க மாட்டாள். அவருக்கு ஏதேனும் தாங்கள் தீங்கு செய்தால், என் அருமைத் தோழி மணிமேகலை உயிரையே விட்டு விடுவாள்! தங்களுக்கு மகத்தான பாவம் சம்பவிக்கும். வேண்டாம்! இதோ என் நெஞ்சைப் பிளந்து பாருங்கள். வீர பாண்டியருடைய வாளினாலேயே என் நெஞ்சைக் கிறிப் பாருங்கள். அதற்குள்ளே தங்களுடைய திருவுருவத்தைத் தவிர வேறு எதுவும் இராது. இது சத்தியம்! சத்தியம்! சத்தியம்!" என்று கூறி விட்டு நந்தினி விம்மினாள்.

ஆதித்த கரிகாலனின் வெறி மீண்டும் சிறிது தணிந்ததுபோல் காணப்பட்டது.

"அப்படியானால், என்னுடன் வருவதற்கு நீ ஏன் மறுக்கிறாய்? அதையாவது சொல்லிவிடு! ஏன் என் கையினால் உன்னை வெட்டிக் கொல்லும்படி தூண்டுகிறாய்? உண்மையைச் சொல்லி விடு!" என்று அலறினான் கரிகாலன்.

"ஆகட்டும்; இதோ சொல்லுகிறேன். என்னுடைய நெஞ்சில் தங்களைத் தவிர வேறு யாருக்கும் இடம் கிடையாது. இது சத்தியமான போதிலும், நான் தங்களுடன் வர முடியாது. தங்களை மணந்து கொள்ளவும் இயலாது. அதற்குத் தடையாயுள்ள ஒரு பெரிய காரணம் இருக்கிறது. அதைச் சொல்லுவதற்கே எனக்குப் பயமாயிருக்கிறது. ஆம், கோமகனே! உண்மையில் அதைச் சொல்லுவதற்காகவே நான் இங்கே வந்தேன்; தங்களையும் வரச்



செய்தேன். அதைச் சொல்லி விட்டு என்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொள்வதற்காக வந்தேன். இந்தத் துர்ப் பாக்கியசாலியை மறந்துவிட்டுத் தங்கள் குலத்துக்கும் பதவிக்கும் உகந்த பெண்ணை மணந்து வாழும்படி கெஞ்சிக் கேட்டுக் கொள்வதற்காக வந்தேன். ஆனாலும் அதைச் சொல்லத் தயங்கினேன். அதைச் சொல்லலாம் என்று நினைக்கும்போதே பயமாயிருக்கிறது. தங்களுடைய கோபத்தைக் கொழுந்து விட்டெரியச் செய்வோமோ, அதனால் இன்னும் என்ன தீங்கு நேரிடுமோ என்று அச்சமாயிருக்கிறது. தாங்கள் அமைதியுடனிருப்பதாக வாக்குக் கொடுத்தால்..."

"சொல், நந்தினி, சொல்! எவ்வளவு கசப்பான விஷயமாயிருந்தாலும் கேட்டுப் பொறுத்துக் கொள்வேன். சற்று முன், உன்னை மறந்துவிட்டு வேறு பெண்ணை மணந்து சந்தோஷமாயிருக்கும்படி புத்திமதி கூறினாய்! அதற்கே நான் கோபித்துக் கொள்ளவில்லையே? வேறு என்ன கூறினால்தான் கோபித்துக் கொள்ளப் போகிறேன்? ஆனால் மறுபடியும் ஏதாவது கற்பனை செய்யாதே..!"

"கோமகனே! என் வாழ்க்கையே ஒரு கற்பனை. என் பிறப்பே ஒரு புனை கதை. என் வாழ்க்கையைச் சிறிது காலம் நீடிப்பதற்காகவும், நான் கொண்ட கருமத்தை முடிப்பதற்காகவும்

நான் பலமுறை கற்பனைக் கதை புனைய வேண்டியதாயிருந்தது. இனி அதற்கு அவசியம் ஒன்றும் இல்லை. இன்றுடன் என் பொய் வாழ்க்கையை முடித்துக் கொள்ளப் போகிறேன். தங்களுடைய மனத்துன்பத்தை அதிகமாக்கக் கூடாது என்பதற்காகவே சில உண்மைகளை நான் அறிந்த பிறகும் தங்களுக்குச் சொல்ல வில்லை. தாங்கள் என்னை வெறுத்து விட வேண்டும் என்பதற்காகவே பல கற்பனை களைப் புனைந்தேன். பல பயங்கரமான காரியங்களைச் செய்யும்படி கூறினேன். என் உள்ளத்தில் ஓயாத போராட்டம் நடந்து கொண்டிருந்தது. என் கடமையும், நான் எடுத்துக் கொண்ட சபதமும், தங்கள் பேரில் கொண்ட காதலும் ஓயாமல் போராடிக் கொண்டிருந்தன. இவற்றினால் நான் அடைந்த துயரத்தைச் சொல்லி முடி யாது. கடைசியாக, இன்று அந்தப் போராட்டமெல்லாம் முடியும் தருணம் நெருங்கியிருக்கிறது. என்னைப் பற்றிய உண்மையைச் சொல்லி விடுகிறேன். அதைக் கேட்ட பிறகு என்னைத் தங்கள் கையினாலேயே கொன்று விடுங்கள்! ஆனால் வேறு யாருக்கும் தாங்கள் இங்கு செய்ய வேண்டாம்! வீண் பாவத்துக்கும் பழிக்கும் ஆளாக வேண்டாம்...!"

"பாவம்! பழி! இனிப் புதிதாக நான் அடையக்கூடிய பாவம் - பழி என்ன இருக்கிறது? ஆயினும், சொல், நந்தினி! என்னுடன் நீ வருவதற்கு, - நம் இளம் பிராயத்து ஆசைக் கனவு நிறைவேறு வதற்கு, - தடையாயிருக்கும் உண்மையான காரணம் என்னவென்று சொல்! அது எவ்வளவு பயங்கரமான உண்மையாக இருந்தாலும் சொல்! அதோ அந்தத் திரைச்சீலைக்குப் பின்னால் யாரோ ஒளிந் திருக்கிறார்கள் என்று நான் எண்ணிக் கொண்டிருந்த வரையில், ஒளிந்திருப்பது யார் என்று தெரியாதிருந்தவரையில், என் மனம் அமைதி இழந்திருந்தது. உன்னுடன் பேசிக்கொண்டிருந்தபோது, என் உள்ளம் அதைப் பற்றியே எண்ணமிட்டுக் கொண் டிருந்தது. ஒளிந்திருந்தவள் மணிமேகலை என்று தெரிந்தபிறகு என் மனக் குழப்ப மும் நீங்கியது. உண்மை தெரியாதிருக்கும் வரையிலேதான் பயம், கோபம், குழப்பம் எல்லாம்! எவ்வளவு கசப்பாயிருந்தாலும் உண்மை தெரிந்து போய்விட்டால் மனம் அமைதி அடைந்துவிடும் அல்லவா?"

"கோமகனே! நான் சொல்லப் போகும் செய்தியினால் தங்கள் மனம் உண்மை யிலேயே அமைதி அடையட்டும். அது தான் என் பிரார்த்தனை. ஆனால் அந்தச் செய்தி நான் தங்களுடன் வருவதோ, தங்களை மணப்பதோ முடியாத காரியம் என்பதையும் நிரூபிக்கும். என் வாழ்க் கையின் முடிவு, என் துன்பங்களுக்கு விமோசனம், - மரணம் ஒன்றுதான் என்ப தையும் தெரியப்படுத்தும். வாணர் குலத்து வீரர் என்னுடைய அன்னையைப் பற்றிய செய்தி கொண்டு வந்தார். அது உண்மை என்று நான் அறிவேன். ஈழ நாட்டில் வெறி கொண்டு அலைந்து திரிந்து கொண் டிருந்த மாதரசியைப் பற்றி நான் அறி வேன். அவள் என் அன்னை என்று அறி வேன். இது மற்றும் பலருக்கும் தெரிந் திருந்தது. ஏனெனில் அந்தப் பெண் ணரசிக்கும் எனக்கும் உருவத் தோற்றத்தில் அமைந்திருந்த ஒற்றுமையைப் பலரும் காணக் கூடியதாயிருந்தது. என்னை என் தாயார் என்று சிலர் சந்தேகிக்கும்படி யிருந்தது. ஆனால் என் அன்னையை அத் தகைய வெறியளாக்கிய காரணம் இன்னதென்பதையும் சில காலத்துக்கு முன்பு நான் அறிந்துகொண்டேன். அது என்னைத் தவிர வேறு யாருக்காவது தெரியுமா என்பதை நான் அறியேன். யாரி டமும் இதுவரையில் நான் சொன்ன தில்லை. இப்போது தான் தங்களிடம் முதன்முதலாகச் சொல்லப் போகிறேன். ஐயா! என் தந்தை யார் என்பதைத் தங் களுக்குச் சொல்லப் போகிறேன். கருணை கூர்ந்து எனக்குச் சற்று முன் கொடுத்த வாக்குறுதியை நினைவு படுத்திக் கொள் ளுங்கள். ஆத்திரத்துக்கும் குரோதத்துக்கும் இடங் கொடாதீர்கள்..."



வ்விதம் பலமான பூர்வ பீடிகை போட்டுக் கொண்டு நந்தினி ஆதித்த கரிகாலரை மிக நெருங்கி

அவர் காதண்டை மிக மெல்லிய நடுங்கிய குரலில் "என்னைப் பெற்ற தந்தை......... தான்!" என்று கூறினாள். கூறி விட்டு விம்மி விம்மி அழத் தொடங்கினாள்.

ஆதித்த கரிகாலன் ஆயிரம் தேள் கொட்டியவனைப் போல் ஒருகணம் துடி துடித்துத் துள்ளினான்.

"இல்லை, இல்லை, இல்லை! ஒரு நாளும் இல்லை! நீ சொல்லுவது பொய், பொய், பெரும் பொய்!" என்று உரக்கக் கத்தினான்.

மறுகணமே அவனுடைய ஆவேசம் அடங்கியது. வேதனை மிகுந்த குரலில், "ஆம் நந்தினி, ஆம், நீ கூறியது உண்மையாகவே இருக்க வேண்டும். இப்போது எல்லாம் எனக்குத் தெரிகிறது. உன் மனத்திலே நிகழ்ந்திருக்கக் கூடிய போராட்டத்தைப் பற்றிய உண்மையும் தெரிகிறது. நீ எவ்வளவு துன்பப்பட்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது. உன் குழப்பத்துக்கும் தயக்கத்துக்கும் உன் பயங்கரமான வேண்டுகோளுக்கும் காரணம் தெரிகிறது. அன்றைக்கு நீ என்னுடைய காலில் விழுந்து மன்றாடியபோது நான் உன் வேண்டுகோளை மறுத்தது எவ்வளவு பெரிய கொடுமை என்று தெரிகிறது! நந்தினி! உலகில் வேறு எத்தனையோ தீங்குகளுக்குப் பிராயச்சித்தம் உண்டு. ஆனால் நான் செய்ததற்குப் பிராயச்சித்தம் கிடையாது. நம் இருவருக்கும் நடுவில் உள்ள தடை நீங்க வழியே கிடையாது! ஐயோ! இந்தப் பெரும் பாரத்தை இத்தனை நாள் எப்படி உன் மனத்தில் வைத்துத் தாங்கிக் கொண்டிருந்தாய்? எப்படி இந்தப் பாதகன் இப் பூமியில் உயிர் வாழ்வதைச் சகித்துக் கொண்டிருந்தாய்? நல்லது; நம் இருவருடைய வாழ்க்கைக்கும் பரிகாரம் ஒன்றுதான்; விமோசனம் ஒன்றுதான். இதோ, நந்தினி! என் பிராயச்சித்தம்...!"

யாழ் களஞ்சியத்திலேயிருந்து வந்தியத்தேவன் மேற்கூறிய சம்பாஷணைகளையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தான். இடையிடையே கரிகாலரின் வெறி மூர்த்தண்யமாகிக்கொண்டிருந்தபோது அவன் அவர்களுக்கிடையே போக எண்ணினான். பிறகு அதனால் என்ன விபரீதம் நேரிடுமோ என்று தயங்கினான். அவர்களுடைய உணர்ச்சி மயமான பேச்சு அவனை ஒருபுறத்தில் செயலற்றவனாகச் செய்துகொண்டிருந்தது. நந்தினி தன்னுடைய தந்தை இன்னார் என்று கூறியது மட்டும் அவன் காதில் நன்றாக விழவில்லை. ஆனால் அவள் என்ன சொல்லியிருக்கக்கூடும் என்று அவன் மனத்தில் ஓர் ஊகம் உண்டாயிற்று. அது அவனைத் 'திடுக்கிடச் செய்தது' என்றாலும், வேறு எந்தவிதமாகக் கூறினாலும் அது வெறும் சம்பிரதாயமாகவே இருக்கும். அம்மாதிரி ஒரு பெரும் அதிர்ச்சியை அவனுடைய அதிர்ச்சிகள் நிறைந்த வாழ்க்கையில் அவன் அநுபவித்ததேயில்லை.

கடைசியாக, ஆதித்த கரிகாலர் அடங்கிய மெல்லிய தழுதழுத்த குரலில், நந்தினி கூறியதை ஒப்புக் கொள்ளும் முறையில், வார்த்தை சொல்லிக் கொண்டிருக்கும்போது, அவனுடைய ஆர்வமும் கட்டுக் காவலைக் கடந்தது. அவர் உரத்துச் சத்தமிட்டுக் கொண்டிருந்த வரையில் அவன் அவ்வளவாகப் பயப்படவில்லை; இப்போதுதான் அதிகமாக அஞ்சினான், என்ன செய்யப் போகிறாரோ என்ற பெருங் கவலையினால், யாழ்க் களஞ்சியத்திலிருந்து சிறிது தலையை நீட்டிப் பார்த்தான். பார்வைக்கு இலக்கான இடத்தில் நந்தினியும் கரிகாலரும் இல்லை. ஆனால் வேறொரு காட்சியைக் கண்டான். சுவரில் பதித்திருந்த நிலைக் கண்ணாடியில் அந்தக் காட்சி தெரிந்தது. வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவு துவாரத்தின் வழியாக ஒரு கோரமான முகம் தெரிந்தது. அது மந்திரவாதி ரவிதாஸனுடைய முகந்தான்! அடுத்த கணத்தில் வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவு மெதுவாகத் திறப்பதை வந்தியத்

தேவன் கண்டான். திறந்த கதவின் வழியாக முதலில் ஒரு புலியின் தலையும் பிறகு அதன் உடலும் வெளிவருவதையும் பார்த்தான். உடனே, அவனுக்கு உடம்பில் உயிர் வந்தது; உள்ளத்தில் ஊக்கம் பிறந்தது; கால் கைகள் செயல் திறன் பெற்றன. யாழ் களஞ்சியத்தின் மறைவிலிருந்து தாவி வெளியில் பாய்ந்து செல்ல முயன்றான்.

அச்சமயம் பின்னாலிருந்து அவனுடைய கழுத்தில் வஜ்ராயுதத்தையொத்த ஒரு கை சுற்றி வளைத்துக்கொண்டது. அண்ணாந்து நோக்கினான். காளா முகக் கோலங் கொண்ட ஓர் ஆஜானுபாகுவான உருவம் கண் முன்னே தெரிந்தது. ஆகா! இவன் யார்? இங்கு எப்படி வந்தான்! இது என்ன இரும்புப் பிடி? கழுத்து நெரிகிறதே! மூச்சுத் திணறுகிறதே! விழி பிதுங்குகிறதே! இன்னும் சில கண நேரம் போனால், உயிரே போய்விடுமே...! வந்தியத்தேவன் ஒரு பெரு முயற்சி செய்து அந்த இரும்புக் கையின் பிடியைத் திமிறித் தளர்த்திக் கொண்டு வெளியில் பாய்ந்தான். பாய்ந்த வேகத்தில் தரையில் விழுந்தான். தலையிலே ஒரு பெரிய பாறாங்கல்லைப் போட்டது போல் இருந்தது. ஒருகணம் அவன் கண்களின் முன் கோடி சூரியர்கள் கோடானு கோடி கிரணங்களைப் பரப்பிக் கொண்டு பிரகாசித்தார்கள். அடுத்த கணத்தில் அவ்வளவு சூரியர்களும் மறைந்தார்கள். நாலாபுறமும் இருண்டு வந்தது. வந்தியத்தேவன் அக்கணமே நினைவை இழந்தான்.

யாழ்க்களஞ்சியத்திலிருந்து, அதன் வாசலில் கிடந்த வந்தியத்தேவனுடைய உடலை மிதித்துத் தாண்டிக் கொண்டு, ஒரு கோர பயங்கரமான காளாமுக உருவம் வெளிப்பட்டது.

யாழ்க் களஞ்சியத்தின் அருகில் தடால் என்ற சத்தத்தைக் கேட்டு நந்தினி திரும்பிப் பார்த்தாள். காளாமுக உருவம் கையில் கத்தியை உருவிக் கொண்டு தன்னை நோக்கி வருவதைக் கண்டாள். விழிகள் பிதுங்கும்படியான வியப்புடன் அந்த உருவத்தை நோக்கினாள். அவள் வயிற்றிலிருந்த குடல்கள் மேலே ஏறி மார்பையும் தொண்டையையும் அடைத்துக்கொண்டதாகத் தோன்றியது. கண்களைத் துடைத்துக் கொண்டு, எதிரே பார்த்தாள். கரிகாலன் கீழே விழுந்து கிடக்கக் கண்டாள். அவன் உடலில் வீர பாண்டியனுடைய வாள் பாய்ந்திருந்ததையும் கண்டாள்.

அப்போது அவளுடைய தொண்டையிலிருந்து விம்மலும் சிரிப்பும் கலந்த ஒரு பயங்கரமான தொனி எழுந்தது. அது அந்த அறையிலிருந்த கட்டில் முதலிய அசேதனப் பொருள்களைக் கூட நடுங்கும்படி செய்தது.

"அடி பாதகி! சண்டாளி! உன் பழியை நிறைவேற்றி விட்டாயா?" என்று கூறிக் கொண்டே காளாமுக உருவம் அவளை மேலும் நெருங்கி வந்தது.

அதே சமயத்தில் வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவின் வழியாக உள்ளே நுழைந்த புலி உருவத்தின் மறைவில் ரவிதாஸனும் பிரவேசித்தான். காளாமுகனைப் பார்த்தவுடனே புலியைத் தூக்கி வீசி எறிந்தான். அந்த அறைக்கு இலேசாக வெளிச்சம் தந்து கொண்டிருந்த விளக்கை அந்தச் செத்த புலியின் உடல் தாக்கியது.

விளக்கு அறுந்து விழுந்தது.

அது அணைவதற்கு முன்னால் ஒரு கண நேரம் மணிமேகலையின் பயப்பிராந்தி கொண்ட முகத்தைக் காட்டியது.

'கிறீச்' சென்று கூவிக்கொண்டு மணிமேகலை அங்கிருந்து ஓடினாள்.

அந்தக் காரிருளில் சோகந்ததும்பிய விம்மல் குரலும் வெறி கொண்ட சிரிப்பின் ஒலியும் மரணத்தறுவாயில் கேட்கும் முனகல் ஓசையும் மனிதர்கள் விரைந்து அங்குமிங்கும் ஓடும் காலடிச் சத்தமும் கலந்து கேட்டன.

(தொடரும்)

டாக்டர் க.வே. அபிராமி

'மூலிகைமணி' டாக்டர் க.வேங்கடேசன்





# மாயமான

அசைவ உணவு தயாரிக்கிறபோது, அதில் கட்டாயமாக மஞ்சளைச் சேர்க்க வேண்டும். நாள்பட்ட மாமிசம், என்றால் அதிலிருந்து ஒரு கெட்ட வாடை வரும். அதில் மஞ்சள் சேர்த்தால், அந்த வாடையைப் போக்கிவிடும். அதுவும் மழைக் காலத்தில் இது மிக அவசியம்.

சந்தனக் கடத்தல் வீரப்பன்கூட, ராஜ்குமார், நக்கீரன் கோபால் போன்றவர்களுக்கு மான் கறி, உடும்பு கறி சமைத்துக் கொடுத்ததாகத் தகவல்கள் வருகின்றன. காட்டில் விலங்குகளை அடித்து, அதன் மாமிசத்தில் உப்பும், மஞ்சளும் கலந்து நன்கு காய வைத்து, பத்திரப்படுத்தி விட்டால், வெகு நாட்களானாலும் கெடாது. இப்படிப் பதப்படுத்தி வைக்கப்பட்ட மாமிசத்தைத் தேவைப்பட்டபோது சமைத்துச் சாப்பிட முடியும்.

பொதுவாக நாற்பது வயதாகி விட்டாலே ரத்த அழுத்தம் ஒரு பிரச்னையாகி விடும். இதற்கு, மஞ்சளை மையமாக வைத்து நான் ஒரு டிரீட்மெண்ட் அளித்து வருகிறேன். சுமார் நூறு பேருக்கு, நானாகவே பரீட்சார்த்த முறையில், இந்த மஞ்சள் அடிப்படையிலான மருந்தைக் கொடுத்து வருகிறேன். இதன் பலன் நம்பிக்கையூட்டும் விதமாய் இருக்கிறது என்பது மகிழ்ச்சியான செய்தி.

இந்த டிரீட்மெண்ட்டை ஆரம்பிக்க எனக்குத் தூண்டுகோலாக இருந்தவர் மதுரையைச் சேர்ந்த ஒரு முதியவர். அவருக்கு ரத்த அழுத்தம் மட்டும் நார்மலைவிட, எப்போதும் அதிகமாகவே இருக்கும். இதனால் தலைபாரம், கழுத்து வலி என்று தொடங்கி பலவித கஷ்டங்கள். "எந்த மருந்து சாப்பிட்டாலும் கொஞ்சம் பலன் கிடைக்கிறது. ஆனால் சாப்பிடும் மருந்தினால் ஏதாவது பக்க விளைவுகள் ஏற்பட்டு விடுகின்றன! பக்க விளைவுகள் ஏதும் இல்லாமல் மருந்து ஏதாவது கொடுங்களேன்" என்று என்னிடம் வந்தார் அந்த முதியவர்.

ரத்த அழுத்தம் என்பது, கொழுப்பு அல்லாத வேறு சில பொருட்கள் அதிகம் இருந்தாலும் வரக்கூடிய சாத்தியம் உண்டு. எனவே, அந்த அடிப்படையில் இவருக்கு சிகிச்சையளித்துப் பார்க்கலாமே என்று எனக்குத் தோன்றியது. அதன்படி அவருக்கு மஞ்சளையும், அதன் உடன்பிறவாச் சகோதரனான மிளகையும் பொடி செய்து, கலந்து தினமும் உணவில் சேர்த்துக் கொள்ளும்படிச் சொன்னேன். சாம்பார், ரசம் என்று எதிலும் அந்தப் பொடியில் அதிகபட்சமாய் முப்பது சிட்டிகை சேர்த்துக் கொள்ளச் சொன்னேன். ஒன்றும் இல்லாவிட்டால், முற்பகல் வேளையில் ஒரு கிளாஸ் மோரில், அந்த மஞ்சள், மிளகுப் பொடி பத்து, இருபது சிட்டிகை சேர்த்துப் பருகும்படிச் சொன்னேன். சில மாதங்களில் மறுபடி அவர் என்னை வந்து சந்தித்தபோது, பி.பி. கணிசமாகக் குறைந்து, நார்மல் ஆகியிருந்தது.

**மஞ்சள் சாதம் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறீர்களா? உடம்புக்கு ரொம்ப நல்லது. செய்முறை ரொம்ப சிம்பிள். உதிரி, உதிரியாக இருக்கும்படி சாதத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அதில் கொஞ்சம் மஞ்சள் பொடியை நன்றாகக் கலந்து கொள்ளுங்கள். மஞ்சள் நிறம் முழுதாய் கலந்தவுடன், கடுகு, தாளித்துக் கொட்டி கலந்து விடுங்கள். மஞ்சள் சாதம் ரெடி. சுவையாக இருக்கும்; உடம்புக்கும் நல்லது. வாரம் ஒரு தடவையாவது உணவில் இதைச் சேர்த்துக் கொள்ளுங்கள்.**

இப்போது, அவர் பி.பி.க்காக சாப்பிட்டு வந்த மற்ற மருந்துகளையெல்லாம் நிறுத்திவிட்டு, தனது கிச்சன் கிளினிக்கில் தயார் செய்த மருந்தை மட்டுமே சாப்பிடுவதாகவும் சொன்னார்.

கொலஸ்டிரால் தவிர டிரை கிளிசரேட், யூரிக் ஆசிட் போன்றவை அதிகமாக இருந்தாலும் ரத்த அழுத்தம் வரலாம். அந்த சமயத்தில் மஞ்சள், மிளகு காம்பினேஷன் நல்ல பலன் தரும்.

மஞ்சள் காமாலையின்போது, மனிதனுடைய கல்லீரல் மிகுந்த பாதிப்புக்குள்ளாகிறது. அதனுள்ளே ஒருவித நச்சுத்தன்மை சேருவதுதான் இதற்குக் காரணம். இதற்கு மஞ்சள் பொடி இரண்டு சிட்டிகை எடுத்து, தண்ணீரில் போட்டு,

# வி.டு!

கொதிக்க வைத்து, குடிப்பதற்குக் கொடுத்தால், நல்ல முன்னேற்றம் இருக்கும்.

குழந்தைகளுக்கும், பெரியவர்களுக்கும் அம்மை போட்டியிருக்கிறபோது, வேப்பிலையையும், மஞ்சளையும் அரைத்து, பசை போல ஆக்கி, உடம்பில் உள்ள அம்மைப்புண்கள் மீது போடுவது நம் வீடுகளில் பழங்காலம் தொட்டே வழக்கத்தில் இருப்பதுதான்.

**சைனஸ்** தொல்லை இருக்கிறவர்களுக்கு, நீர் கோர்த்துக் கொண்டு, தலை பாரமாக இருக்கும். இந்தப் பிரச்னைக்கு விளக்கில் மஞ்சளைச் சுட்டு, வருகிற புகையை முகர்ந்தால் நல்ல பலன் கிடைக்கும் என்று சொன்னேன் விளக்கில் மஞ்சளைச் சுட்டுத்தான் புகை பிடிக்க வேண்டும் என்று இல்லை. சாம்பிராணி போடுவதுபோல, மஞ்சளைத் தூள் செய்து, தணலில் போட்டு, அந்தப் புகையை முகரலாம். எந்தப் பிரச்னையும் இல்லாவிட்டாலும்கூட, தினமும் சாயந்திர நேரத்தில், ஊதுவத்தி கொளுத்தி வைப்பது போல, இந்த மஞ்சள் பொடிப் புகை போட்டால் ரொம்ப நல்லது.

மெட்ராஸ் ஐ.. போன்ற கண் நோய்கள் வருவது, இந்தக் காலத்தில் வெகு சகஜம். ஒருவருக்கு வந்தால் போதும், சட்டென்று வீட்டிலும், அலுவலகத்திலும் மற்றவர்களுக்கு எளிதில் இந்தக் கண் நோய் பரவி விடும் அபாயம் உண்டு. அந்தச் சமயத்தில், வெள்ளைத் துணியை, கர்சிப் அளவுக்குக் கிழித்து எடுத்து, அதை மஞ்சள் தண்ணீரில் நனைத்து பிழிந்து எடுக்க வேண்டும். மீண்டும் மீண்டும் ஒருசில தடவைகள் இதேபோலச் செய்ய வேண்டும். பின் அதனை உலர்த்த வேண்டும். இந்த மஞ்சள் கர்சிப் கொண்டு, கண் நோய் பாதித்தக் கண்ணை அவ்வப்போது துடைத்து வந்தால், கண்ணுக்கும் பாதுகாப்பு. ஒரு கண்ணிலிருந்து, இன்னொரு கண்ணுக்குப் பரவாமல் தடுக்க முடியும்; மற்றவர்களுக்கும் பரவாது.

படம்: **யோகா**



எங்களிடம் ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறும் அனைவருக்கும் எங்களது வாழ்த்துக்கள்

ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜுவல்லரி





# P.R. JEWELLERY

GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES

102, USMAN ROAD, T. NAGAR, CHENNAI - 600 017. PH: 4344442, 4327764

TUESDAY HOLIDAY (10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)

**P.R. ஜுவல்லரியில் ராசிக்கல் மோதிரம் வாங்கி அணிந்துபயன்பெறுங்கள். ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 400/-**

| நட்சத்திரம் | ராசி | ராசிக்கேற்றகல் | கல்லின் எடை | வெள்ளி மோதிரம் விலை | இன்சூர் தபால் செலவு |
|---|---|---|---|---|---|
| அசுவினி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய | மேஷம் | பவழம் | 2 CARAT | 400/- | 50/- |
| கார்த்திகை 2-ம் பாதம், ரோகிணி, மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய | ரிஷபம் | வைரம் | 5 CENT | 2250/- | 200/- |
| மிருகசீரிசம் 3-ம் பாதம், திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் முடிய | மிதுனம் | மரகதபச்சை | 20 CENT | 400/- | 50/- |
| புனர்பூசம் 4ம் பாதம், பூசம், ஆயில்யம் முடிய | கடகம் | முத்து | 2 CARAT | 400/- | 50/- |
| மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய | சிம்மம் | மாணிக்கம் | 20 CENT | 400/- | 50/- |
| உத்திரம் 2ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய | கன்னி | மரகத பச்சை | 20 CENT | 400/- | 50/- |
| சித்திரை 3-ம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3ம் பாதம் முடிய | துலாம் | வைரம் | 5 CENT | 2250/- | 200/- |
| விசாகம் 4ம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய | விருச்சிகம் | பவழம் | 2 CARAT | 400/- | 50/- |
| மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய | தனுசு | புஷ்பராகம் | 1 CARAT | 400/- | 50/- |
| உத்திராடம் 2ம் பாதம், திருவோணம் அவிட்டம் 2-ம் பாதம் முடிய | மகரம் | நீலம் | 20 CENT | 400/- | 50/- |
| அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3ம் பாதம் முடிய | கும்பம் | நீலம் | 20 CENT | 400/- | 50/- |
| பூரட்டாதி 4ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய | மீனம் | புஷ்பராகம் | 1 CARAT | 400/- | 50/- |
| தனுசு, மீன ராசிக்காரர்கள் கனக புஷ்பராக மோதிரமும் அணியலாம் | | | 50 CENT | 1000/- | 100/- |
| ராகு, கோமேதகம் | | | 50 CENT | 400/- | 50/- |
| கேது, வைடூரியம் | | | 20 CENT | 400/- | 50/- |
| அனைவரும் அணியக்கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம் | | | 2 CARAT | 400/- | 50/- |

*** நவரத்தினம் மோதிரம் அணிந்தால் மிகவும் நல்லது. *** WE ACCEPT MASTER CARD/VISA CARDS

அனைவரும் அணியக்கூடியது கார்னெட் மோதிரம் ரூ. 400/- கார்னெட் மோதிரம் அணிந்தால் செல்வ வளம் பெருகும். வியாபாரம், படிப்பு, ஞாபக சக்தி அதிகரிக்கும்.

குறிப்பு : புஷ்பராகம், வைரம், நவரத்தினம், ஆகிய மோதிரங்கள் வெள்ளியிலும், தங்கத்திலும் அணியலாம்.
மீதி அனைத்து ராசிக்கல் மோதிரங்கள் வெள்ளியில் அணிய வேண்டும். வெள்ளியில் அணிந்தால் பலன் அதிகம். மேற்படி ராசிக்கல் மோதிரம் நம்பிக்கையுடன் அணிந்து முயற்சி செய்தால், கல்வி, தொழில், வேலை வாய்ப்பு, வியாபாரம், அனைத்திலும் 100 சதவீத வெற்றி கிடைக்கும்.

* எங்களிடம் நியூமராலஜி படியும் கல் மோதிரங்கள் கிடைக்கும் * திருக்கணித பஞ்சாங்கப்படி கம்ப்யூட்டர் ஜாதகம் ரூ. 50/-

***குறிப்பு: எங்கு ஜோதிடம் பார்த்தாலும் எங்களிடம் வந்து ரூ. 400/-க்கு ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறுங்கள். ஒரிஜினல் கல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.***

முகவரி தெளிவாக எழுதவும். (எமது சிறப்புப் பேட்டியை விஜய் டீ.வி.யில் திங்கள், புதன் காலை 9.00 மணிக்கும் ஜெயா டீ.வி.யில் வியாழக்கிழமை மாலை 6.30 to 7.00 மணிக்கும் காணத் தவறாதீர்கள்.

ADVT

# யெல்ட்சின் பயணம் ரத்தான ரகசியம்!

**பி**ரபல அரசியல் தலைவர்களின் வெளிநாட்டு விஜயங்களின்போது எதிர்பாராத தவறுகள், பிரச்னைகள் ஏற்படுவதுண்டு.

ஒருமுறை பாகிஸ்தான் பிரதமர் ஃபிரோஸ்கான்நூன் டெல்லியில் விமானத்திலிருந்து இறங்கத் துவங்கியதும் அவருடைய மனைவியின் கால் ஷூ கழன்று, உருண்டு, கீழே வரவேற்கக் காத்திருந்த நேருவின் காலடியில் விழுந்தது. அந்த அம்மையார் சங்கடத்துடன் நெளிந்தார். கண்ணிய புருஷரான நேரு உடனே அதைக் கையில் எடுத்து படிகளில் விடுவிடென்று ஏறி, அவருடைய காலடியில் போட்டுவிட்டு அங்கேயே பிரதமரை அணைத்து வரவேற்றார்.

**மொ**ரார்ஜி தடுப்பு ஊசி போட மறுக்கும் பிடிவாதக்காரர். அவருக்காக அந்தந்த நாடுகளில் விதிகள் திருத்தப்பட்டன; அல்லது மீறப்பட்டன.



**ர**ஷ்ய அதிபர் யெல்ட்சினுக்கு அயர்லாந்தில் விமானம் தரையிறங்கிய போது திடீரென்று இருதய வலி ஏற்பட்டது. அவருக்கு அப்பாதிப்பு இருப்பது தெரிந்தால் ரஷ்ய அரசியலில் பல எதிர்விளைவுகள் ஏற்படும். கீழே அயர்லாந்து தலைவர்கள் வரவேற்கக் காத்திருக்கிறார்கள். என்ன செய்வது? உதவியாளர் ஒரு அவசர முடிவுக்கு வந்து தலைவர் முன்னிரவு ஒரு பார்ட்டியில் அதிக மது அருந்தி விட்டதால் உடல் நலக் குறைவால் கடைசி நேரத்தில் பயணம் ரத்து செய்யப் பட்டதாகக் கூறி மன்னிப்புக் கோரினார். விமானத்துக்குள் டாக்டர் அவசர சிகிச்சையளிக்க அது அப்படியே நாடு திரும்பியது.

இவற்றை விட பெரிய தர்மசங்கடம் ஒன்றும் நிகழ்ந்ததுண்டு. கானா நாட்டுத் தலைவர் நெக்ருமா, பீகிங்கில் ஒரு அரசு விருந்துக்கு அமர்ந்தபோது தன் நாட்டில் ராணுவப் புரட்சியால் அவர் நீக்கப்பட்டுவிட்ட தகவல் வந்தது. உடன் தெரிவிப்பது முக்கியம் என்று சீனத் தலைவர்கள் முடிவு செய்தனர். விருந்து நிறுத்தப்பட்டது!

ஆதாரம் : 'சண்டே ஹெரால்ட்'

தகவல் : அ. ஷண்முககந்தரம்.




• கல்குவாரி

# மரணத்துடன் போராடும் சமாதானபுரவாசிகள்!

திருச்சியிலிருந்து தஞ்சை செல்லும் சாலையில் இருபது கிலோ மீட்டர் தொலைவில் துவாக்குடிமலையின் தெற்கே இருக்கின்றது அந்த சமாதானபுரம்.

முன்னூறு வீடுகள். ஒன்றிரண்டு ஓட்டு வீடுகள். மற்றவை அனைத்தும் குடிசை வீடுகள். இங்கு மும்மதத்தவர் என்றில்லை அனைத்து சாதி மனிதர்களும் நிஜமான நேசத்துடன் ஒன்றிணைந்து வாழ்ந்து வருகிறார்கள். உதாரணமாக, தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த ஒருவரின் வீட்டைச் சுற்றிலும் இதர சாதியைச் சார்ந்தவர்களின் வீடுகள் மிக நெருக்கமாகக் காட்சி தருகின்றன. "நாங்கள் அனைவருமே ஒருவருக்கொருவர் உள்ளன்போடு வாழ்ந்து வருகிறோம்!'' என்று பேச்சினூடே குறிப்பிட்டுச் சொல்கிறார்கள் அவர்கள்.

'உண்மையான சமத்துவபுரம் என்பது எங்களோட சமாதானபுரம்தான். இங்கு யாரிடமும் சாதி மத வேறுபாடு இல்லை. எல்லோரும் மனிதர்கள் என்கிற ஒரே வளையத்துக்குள் வாழ்ந்து வருகிறோம் நாங்கள் அனைவரும்!'' என்கிறார் சமாதானபுர கிராம நலக் கமிட்டித் தலைவர் பி.எஸ்.மணி.

ரஷ்ய அதிபர் கார்ப்பசேவ், அமெரிக்க அதிபர் ரொனால்ட் ரீகன் இருவரும் உலக சமாதான ஒப்பந்தம் செய்து கொண்ட வருடத்தில் இந்தப் பகுதியில் கல் உடைக்கும் தொழிலாளிகள் குடிசைகளைப் போட்டுக் கொண்டு குடியேறியதன் நினைவாக இதற்குச் சமாதானபுரம் என்று பெயர் வைத்துள்ளார்கள்.

இங்கு எந்தவொரு வீட்டில் நல்லது கெட்டது எதுவாக இருந்தாலும் சரி. அன்று ஒரு நாள் கல் உடைப்பு வேலைக்கு விடுமுறை தந்துவிட்டு எல்லோரும் ஒன்றாகக் குழுமி விடுகிறார்கள். சுப காரியங்கள் என்றால், சமாதானபுர வாசிகள் ஒட்டுமொத்தமாகச் சேர்ந்து உருவாக்கியுள்ள பொதுப் பணத்திலிருந்து


• எம்.பெருமாள்


• பி.எஸ்.மணி


• நாரசப்பன்

• அச்சமூட்டும் ஆழத்தில்...

நிர்ணயிக்கப்பட்ட அன்பளிப்பு எல்லோர் சார்பாகவும் குறிப்பிட்ட வீட்டார்க்கு வழங்கப்பட்டு வருகின்றது. அந்த அன்பளிப்பைக்கொண்டு செல்லும் போது அனைவரும் திரண்டு வந்து கலந்து கொள்வார்களாம். இறந்து போனவருக்குக் கோடித் துணி எடுத்து சீர் முறை செய்து அவரவர் மதச் சடங்குப்படி இறுதி காரியங்கள் செய்யப்பட்டு வருகின்றன.

அவரவர் வசிப்பது சின்னச் சின்ன வீடுகளில். சுப, அசுப காரியங்களுக்காக வெளியூரிலிருந்து வரும் உறவினர்கள் தங்குவதற்கென கிராம நலக் கமிட்டி மூலமாக பொது மன்றம் ஒன்றைக் கட்டி வைத்துள்ளார்கள்.


• தொழிலாளர்கள்

திடீரென யாருக்கும் உடல் நலக் குறைவு வந்துவிட்டால் போதும். கண்டு கொள்ளாமல் யாரும் சென்று விடுவதில்லை. ஒரு ஆட்டோ பிடித்தோ அல்லது டவுன் பஸ் ஏறியோ சம்பந்தப்பட்ட நபரை அழைத்துச் சென்று மருத்துவரிடம் காண்பித்து கொண்டு வந்து விடுகிறார்கள்!

இத்தனை வாஞ்சையுடனும், ஒளிவு மறைவற்ற அன்புடனும் இணைந்து வாழ்ந்து வரும் சமாதானபுர வாசிகளை, அவர்கள் வேலை பார்த்து வரும் மிக மிக அதிக ஆழம் கொண்ட கல்குவாரிகள், மரணத்துடன் போராட வைத்திருப்பதுதான் மிகப் பெரிய கொடுமையாக இருக்கின்றது.

துவாக்குடிமலைப் பகுதியில் மட்டும் சுமார் அறுபத்தி ஐந்து கல் குவாரிகள் இருக்கின்றன. அவற்றுள் நாம் சமாதானபுரம் பகுதியில் இருக்கும் கல் குவாரிகள் சிலவற்றைச் சென்று பார்த்தோம்.

மதியம் ஒரு மணியிலிருந்து மூன்று மணி வரைக்கும் கல் குவாரிகளின் உள்ளே பாறைகளை வெடி வைத்துத் தகர்க்கிறார்கள். யுத்த களத்தில் கேட்கும் வெடியோசையைப் போல நான்கு கிலோ மீட்டர் சுற்றளவுக்கு அந்த வெடிச் சத்தம்கேட்டுக் கொண்டேயிருக்கின்றது. மிகச் சரியாக இடைப்பட்ட அந்த இரண்டு மணி நேரத்தில் அந்தப் பகுதிகளில் யாரும் வெளியே நடமாடுவதில்லை. பாறைகளிலிருந்து வெடித்துச் சிதறும் கற்களும், தூசியும் பறந்து வந்து விழுந்த வண்ணமாய் இருக்குமாம். அந்த நேரம் அந்தப்பகுதி முழுவதும் அறிவிக்கப்படாத ஊரடங்கு உத்தரவுதான். நாம் அங்கு சென்று மாட்டிக் கொண்டதும் அந்த நேரத்தில்தான்.


• குடிசை வீடுகள்

கல் குவாரியில் வெடி வைத்துத் தகர்க்கும் வேலையில் ஈடுபடும் டி.பெருமாள் என்பவரின் இடது கை சுண்டு விரல் காணவில்லை. இரண்டு உள்ளங்கை முழுவதும் ரேகைகள் அழிந்து போய், கிழிந்து போன சதைப் பகுதிகளை இணைத்துத் தைத்துள்ள தையல் மேடுகளே காட்சி தருகின்றன. தன் ஒரே தங்கையின் கணவர் குவாரி விபத்தில் மரணமடைந்தது இன்னமும் மறக்க முடிய



• பொது இடம்

...வில்லை என்கிறார் அவர். இப்பொழுது அந்த தங்கை ஒரு மரத்தடியில் கல் உடைத்துக் கொண்டிருக்கிறாள். ஒருவயதுக் குழந்தையொன்று தாயார் கல் உடைக்கும் சப்தத்தையே தாலாட்டாகக் கேட்டுக் கொண்டு அந்த மரக்கிளைத் தொட்டிலில் கண்ணயர்ந்து தூங்குகின்றது.

வெடி வைத்துத் தகர்க்கும்போது சிதறுகின்ற வடிவமற்ற பெருங்கற்களை (சோலிங் எனப்படும் - குவாரி பாஷையில் சக்கை) லாரியில் ஏற்றி மேலே கொண்டு வந்து விடுகிறார்கள். அதன் பின்னரே அவற்றை ஒன்றரை ஜல்லி, ஒரு ஜல்லி என்கிற கணக்கில் உடைத்துத் தருகிறார்கள் இவர்கள்.

இரண்டு வயதுக் குழந்தையை வீட்டில் பாட்டியிடம் விட்டுவிட்டு வந்திருக்கும் முபாரக் ஆயிஷா இருவரும் கல் உடைக்கும் தொழிலாளிகள். "ஒரு லாரி கல் உடைச்சா இருநூறு ரூபாங்க கூலி. நாங்க ரெண்டுபேரும் சேர்ந்து வாரத்துக்கு இரண்டு லாரி கல் உடைப்போம்ங்க. அவ்வளவுதாங்க உடைக்கவும் முடியும். ரெண்டு பேர்க்கும் சேர்த்து நானூறு ரூவா கெடைக்கும். வேறென்னங்க செய்றது!" என்கிறார் முபாரக்.

நரசப்பனுக்கு வயது நாற்பத்தியேழு. அவரது குடும்பத்தைச் சேர்ந்த எட்டு பேர்களுக்கும் கல் உடைக்கும் வேலைதான். இது எங்களுக்குப் பழகிப்போன பாரம்பரியத் தொழில் என்று சொன்னவுடன் சட்டையைக் கழற்றி முதுகைக் காண்பிக்கிறார். பெருக்கல் குறி வடிவத்தில் முதுகில் மிகப் பெரிய தையல் போடப்பட்டிருக்கின்றது. ஒரு சரிவில் வேலை பார்த்த போது கால் இடறி விழுந்ததில் முதுகு பிளந்து போய் விட்டது. நல்ல வேளை. தலை தப்பியது" என்கிறார் அவர்.

''நினைவு தெரிந்த நாளிலிருந்து கல் உடைத்து சம்பாதித்தே காலந்தள்ளி வரும் பெருமாளுக்கு வயது அறுபத்தி ஐந்து. நாலு பெண்கள், ஒரு பையன். எல்லோர்க்கும் திருமணமாகி ஒட்டு மொத்தக் குடும்பமும் வேலை பார்த்து வருவது கல் குவாரிகளில்தான். "கரணம் தப்பினால் மரணம் என்பதை இங்கே கண்ணெதிரே கண்டு வருகிறோம்" என்கிறார் அவர்.

கல் குவாரிகளில் வெடி வைக்கும்போது கை, கால்களை ஊனப்படுத்திவிடும் விபத்துகள் மட்டுமல்ல, தொழிலாளர்கள் வேலை பார்க்கும் சமயத்தில் விபத்தினால் நேரும் மரணங்களைக் கூட வெளியே சொல்வதில்லை என்கின்றனர் சமாதானபுர வாசிகள்.

"நாங்க வேலை பாக்குற குவாரிகளை வந்து பாருங்க. மேலே நின்னு பாத்தாலே தலை சுத்தும். அத்தனைப் பள்ளம்ங்க. தெனமும் உசுரைக் கையில புடிச்சிகிட்டுத்தான் குவாரிக்கு உள்ளே போய்ட்டு மேலே வர்றோம்!"

சில குவாரிகளைச் சென்று பார்த்தோம்.

"இப்ப நானூறு அடிக்குப் பள்ளமா இருக்கற இந்த எடம் முந்தி எப்படி தெரியுங்களா இருந்திச்சு? நம்ப தரை மட்டத்துக்கும் மேல நூத்தைம்பதடி உயர மலையா இருந்த எடம்ங்க இது!"

மலைப் பகுதிகளில் போக்குவரத்து வசதிக்காகப் போடப்பட்டிருக்கும் கொண்டை ஊசி வளைவுகளைப் போல ஒரு பாதை வளைந்து நெளிந்து செல்கின்றது. குவாரியின் உள் பரப்பு சம மட்டத்திலிருந்து இருநூறு அடி உயரப் பாதையில் முழு லோடுடன் லாரி ஒன்று பிரேக் டவுனாகி நின்று கொண்டிருக்கின்றது.

முதன் முதலாகப் பார்ப்பவர்களுக்குப் அச்சமூட்டுவனவாக பிரமாண்டமாக வாய் பிளந்து நிற்கின்றன ஏனைய கல் குவாரிகள். பெரும்பான்மையான குவாரிகள் முன்னூறு அடிகளுக்குக் கீழேயும் வெகு ஆழமாய்ப் போய் விட்டதாகக் கூறுகிறார்கள் குவாரியில் வேலை பார்ப்பவர்கள்.

குவாரிகள் சட்டப்படி பூமி மட்டத்திற்குக் கீழே அதிகபட்சமாக ஐம்பதடி ஆழம் வரைக்கும்தான் வெடி வைத்து தகர்த்து வேலை பார்க்கலாமாம். அதற்கும் கீழே வெடி வைத்துத் தகர்த்து கல் எடுக்கக் கூடாதாம். இந்த சட்டம் சமாதானபுரத்தில் நடைமுறையில் செயலிழந்து போனது வேதனைக்குரியது.

இங்கு வெடி வைத்துத் தகர்த்து கல் உடைத்துக் கொள்ள வேண்டி கனிம வளத் துறை மூலமாக கடந்த மூன்றாண்டுகளுக்கும் மேலாக யாருக்குமே உரிமம் தரப்படாமல் இருந்தும் தொடர்ந்து வெடி வைத்து தகர்த்து கல் உடைத்துக் கொண்டிருப்பது எப்படி என்பதுதான் தெரியவில்லை என்கின்றனர் அவர்கள்.

எவ்வித பாதுகாப்புமின்றி முன்னூறு, நானூறு அடி ஆழம் சென்று வேலை பார்ப்பது ஆபத்தானது இல்லையா? ''வேறென்ன செய்வது. மாற்று வேலையும், வேறு வழியு மற்றுப் போய், உயிரையே பணயம் வைத்து மரணத்துடன் போராடிக் கொண்டிருக்கிறோம்" என்கிறார்கள் சமாதானபுரவாசிகள்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



100% திருப்தி

நியாயமான விலையில்
அற்புதமான வீட்டு மனை

# கிருஷ்ணா நகர்

(அரசு அங்கீகாரம் பெற்ற மனைகள் DTP/LPDM-16-74)

## மேடவாக்கம்

சென்னை-601302 (வேளச்சேரி அருகில்)

### சிறப்பு அம்சங்கள்

- மாநகருக்கு மிக அருகில்
- கவர்னர் மாளிகையிலிருந்து 20 நிமிட பயணம்
- அடையாறு, திருவான்மியூர், வேளச்சேரி,கிண்டி மற்றும் தாம்பரத்திற்கு ரயில் மற்றும் பஸ் வசதி
- நன்கு திட்டமிட்ட மனைப்பிரிவு, சுற்றிலும் வேலி
- சுற்றிலும் நல்ல வீடுகள்
- 12' ஆழத்தில் சுவையான நீர்
- அருகாமையிலேயே நல்ல பள்ளிகள், கல்லூரிகள், மருத்துவமனைகள், கடைகள் போன்ற அனைத்து வசதிகள்
- சுத்தமான பத்திரம், நம்பகமான நிறுவனம்
- 5 வருட மனை பாதுகாப்பு சேவை

**FREE SITE VISITS DAILY : 7 am ,11 am & 3 pm**
**Ph : 4357721/31 Tel-fax.4353183 . Cell : 98400-44018**
**E-mail: blbestmail@vsnl.net**




## BLB Estates (P) Ltd.

S-3,"Ramana Flats" 27, Rathna Nagar, Off Anna Salai,
(Behind Apollo Cancer Hospital), Teynampet, Chennai - 18.

நாணயத்தில் முதலீடு

# அலை உறங்கும் கடல்

ஒரு ரூபாய் நாணயம் அளவுக்கு விரிந்திருந்தன, காளியின் விழிகள். அலங்கார நேர்த்தியில், எரிதழ லொன்று எழுந்து அமர்ந்திருப்பது போலிருந்தது அவள் தோற்றம். சிலையின் மேனி தவிர வீற்றிருந்த பீட மெங்கணும் சிதறியிருந்த குங்குமம், நெய் விளக் கொளியில் சிறு குன்றுகளாகக் காட்சியளித்தது. கருவறையின் இருள் கவிந்த மௌனத்தை, பூசாரியின் மந்திர உச்சாரணம் மேலும் மிகைப் படுத்திக் காட்டிற்று.

வழக்கம் போல் கண்களை மூடி பக்தியில் லயிக்காமல், நீலுப்பாட்டி, நம்பு மாரியின் விழிகளை மிகத் தீவிரமாக உற்று நோக்கு வதைக் கண்டாள் உமா.

அபூர்வமாக அவள் உதடுகள் நடுங்கு வதையும் வலக்கரம் ஒரு பிடிமானம் நாடி கவரைத் தேடுவதையும் கண்ட வள், சற்றே கலவரமுற்று, 'பாட்டி?' என்றாள் மெதுவாக.

''குறுக்க பேசாதே!''



பா. ராகவன்

என்று ஆணையிட்டாள் நீலுப்பாட்டி. இப்போதும் அவள் பார்வை காளியின் விழிகளின் மீதே நிலைத்திருந்தது. தனக்குப் புலப்படாததொரு வரி வடிவமோ, தன் செவிக்கு எட்டாததொரு அசரீரியோ அவளுக்கு நம்பு மாரியம்மனிடமிருந்து வந்து கொண்டிருக்கிறதா என்ன?

சித்தம் கலங்கியவள் என்று ஒதுக்க முடியாத அளவு செயல் நேர்த்தியும் சொல்வீச்சும் கொண்டவள் நீலுப்பாட்டி. மனுஷியாகத்தான் காட்சிக்குத் தென்படுகிறாளெனினும் பொதுவான மானுட புத்திக்கு அகப்படாததொரு சூட்சும உலகிலும் அவள் வாழ்ந்து கொண்டிருக்கிறாளென்று தோன்றியது உமாவுக்கு.

அப்புசாமி ஒரு போதும் பாட்டியையோ அவளது கனவுகளையோ பொருட்படுத்தியதில்லை.

"செய்யறதுக்கு ஒண்ணும் வேலையில்லாம தின்னுட்டுத் தின்னுட்டுத் தானே தூங்கறா. கனவுலயாவது கொஞ்சம் 'ஆக்டிவா' இருந்தாச் சரிதான்" என்பார்



சிரித்துக் கொண்டே.

அப்படியும் ஒதுக்கி விடுவதற்கில்லை என்றுதான் உமா நினைத்தாள்.

பாட்டியின் கனவுகள் பற்றிய அச்சங் கலந்த வியப்பே இன்னும் தீராதிருக்க, நம்பு மாரியம்மன் இன்று தன் சந்நிதிக்குத் தன்னைப் பேசக் கூப்பிட்டிருப்பதாகவும் அவசியம் போயே தீர வேண்டுமென்றும் அவள் கூறியபோது உமாவுக்கு முதலில் பயந்தான் ஏற்பட்டது.

"நீ ஏன் பாட்டி சாதாரணமானவளா இருக்க மாட்டேங்கறே?" என்று கேட்டாள்.

"என்னைக் கேட்டா?" என்று அலட்சியமாகப் பதில் சொன்னவள், "நீங்கள்ளாம் நம்பறேளா, இல்லியாங்கறதைப் பத்தி எனக் கொண்ணும் அக்கறை கிடையாது. எனக்குக் கடவுளோட நேரடி 'காண்டாக்டு' உண்டு. நாங்க பேசிப்போம். சண்டை போட்டுப் போம். விளையாடிண்டே கதை பேசுவோம். என்னென்னவோ நடக்கும். யுகத்துக்கு ஒருத்தருக்கு இந்த பாக்கியம் கிடைக்கும். கலியுகத்துக்கு நான்தான்!"என்று தீர்மானமாகச் சொன்னாள் நீலுப்பாட்டி.

முப்பது வயதில் கணவரை இழக்காதிருந்திருந்தால் பாட்டி இப்படி ஆகியிருக்க மாட்டாள் என்று எப்போதும் தோன்றும் உமாவுக்கு. அவளையொரு நல்ல மனநல மருத்துவரிடம் அழைத்துச் செல்லலாமா என்றும் நினைப்பாள்.

ஆனால், ஓர் ஆவேசம் வந்தாற்போல எப்போதாவது அவள் உடுக்கையடிக்காமலே சில பிரகடனங்களை முன்வைத்து, அவை நடந்தும் விடுகிறபோது வணங்கத்தான் தோன்றுமே தவிர வைத்தியம் பற்றிய சிந்தனை இருந்த இடம் தெரியாமலாகி விடும்.

"குட்டி, உனக்கு நம்பிக்கை இல்லேன்னா எனக்குப் பரவாயில்லை. நேத்து ராத்திரி ஒரு கனா. அது முடியற நேரத்துல தான் இவ வந்தா...."

"யாரு?" என்றாள் உமா.

"இவதான். நம்பு மாரியம்மன். வாடி நீலு; உன்கிட்ட ஒரு சமாசாரம் சொல்லணும்னுட்டுப் போயிட்டா. ஏதுடா புதுசா இருக்கேன்னு எனக்கே ஆச்சர்யந்தான். ஏன்னு கேளு! உஜ்ஜயினியம்மன் வந்து என்கிட்ட பேசியிருக்கா. கோயில்ல சேதுமாதவர் சன்னதி இருக்கு பாரு? அந்த சுவாமியோட தாயார் வந்து பேசியிருக்கா. ஆகாசம் முட்டும் உசரமா உட்கார்ந்திருக்கே நந்தி; அதுவந்து பலவாட்டி பேசியிருக்கு. ஆனா இந்தப் பொம்மனாட்டி இதுவரைக்கும் வந்ததில்லே. நேத்துதான் ஃபர்ஸ்ட் டைம்! என்ன சமாசாரம்னு இப்பவே சொல்லுன்னேன். சொல்றதுக்கில்லே; உன் பேத்தியை எழுப்பி, இந்தக் கல்யாணம் வேண்டாம்னு மட்டும் இப்ப சொல்லிடு. மிச்சத்தை நாளைக்குக் காலம்பற வந்தா சொல்றேன்னா..."

ஒரு கணம் என்ன பேசுவதென்று புரியவில்லை உமாவுக்கு.

"நீ ஏன் பாட்டி இப்ப வாழறே? போயிடேன்? ஒரு நூறு வருஷத்துக்கு முன்னாடியோ, பின்னாடியோ மாறிண்டுடேன்? நீ பைத்தியமில்லேன்னாலும் இருக்கறவாளையெல்லாம் பைத்தியமா அடிச்சுடுவே போலிருக்கே?" என்றாள் உமா.

கோபமும் வெறுப்பும் பயமும் கலவரமுமான கதம்ப உணர்வின் தகிப்பில் அவள் முகம் சிவந்து துடித்தது.

கையிலிருந்து மிட்டாய் பறிக்கப்பட்டதொரு குழந்தையின் முகம் போலாகிவிட்டது நீலுப்பாட்டியின் முகம்.

"என் கண்ணோல்யோ? இந்தப் பாட்டியை நீயானா பொருட்படுத்தித்தான் பாரேன்! உனக்குக் கெடுதலைப் பண்ணணும்னு நினைப்பேனா நான்?"

"இப்ப நீ என்ன சொல்ல வரே பாட்டி? நீதான் கடவுள்ங்கறியா?"

"சேச்சே!" என்று பதறி மறுத்தவள், "நான் அதுக்கு ஒரு....ஒரு..... என்ன சொல்றதுன்னு புரியலை. அந்த சக்தியை உணர்ந்தவள்னு வெச்சுக்கோ. நான் உணர்ந்ததால என்னை அது பயன்படுத்திக்கறதுன்னு வேணா சொல்லலாம்...."

சொற்களுக்கு அவள் திணறுவதை ஆர்வமுடன் கவனித்தாள் உமா. ஆனால் மேலும் மேலும் சீண்டிப் பார்க்கும் மனநிலையில் அவள் இல்லை. தவிரவும் விஷயம் தன் சம்பந்தப்பட்டது. நம்புமாரியம்மன்

---

**"உன் மனைவி இப்பதான் சமைக்க கத்துக்கறதா சொன்னியே, இன்னிக்குக் காலையில என்ன சாப்பிட்டே?"**

**"ரெண்டு கிளாஸ் உப்புமா குடிச்சேன்."**

**— வடுவூர் சிவ. முரளி**



தன் சந்நிதிக்குக் கூப்பிட்டுப் பாட்டியிடம் சொல்லக்கூடிய செய்திதான் என்னவாயிருக்கும்?

இந்தக் காதல் வெற்றியடையும். அல்லது தோல்வி காணும். இரண்டில் ஒன்று. கேவலம் ஒரு மனிதக் காதலுக்குக் கடவுள் இத்தனை பதறித் தவித்துக் கொண்டிருக்குமா என்ன? பாட்டிக்குக் கிறுக்குதான் முற்றிப் போய் விட்டது என்று இப்போது தோன்றியது.

ஆனாலும் அவளை மறுக்காமல் மறுநாள் காலை குதிரை வண்டி பிடித்து, நம்பு மாரியம்மன் ஆலயத்துக்கு உடன் வரவே செய்தாள்.

தன் சம்பாஷணைகளை முடித்துக் கொண்டதும் பாட்டி, "போகலாம்" என்று உமாவிடம் சொன்னாள். பூசாரி அளித்த பொங்கல் பிரசாதத்தை அழகாக உருட்டி, வாசலிலிருந்த பூக்காரி ஒருத்தியிடம் கொடுத்துவிட்டு "அந்த மரத்தடில உக்காரலாமா?" என்று கேட்டாள்.



வெயில் ஏறத் தொடங்கியிருந்த நேரம். பிரம்மாண்டமாகப் பரவிக் கவிந்திருந்த அரசமர நிழலில் அவர்கள் சென்று அமர்ந்தார்கள். பழுத்த இலைகள் அசைந்தாடி உதிரும் ஓசை, காசு குலுங்கும் சப்தம் போலக் கேட்டது.

"பாரு! நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிடறேன். உன் சிநேகிதன் இருக்கான் பாரு? அவம்பேரென்ன?"

உமா அவன் பேரைச் சொன்னாள்.

"அவனுக்கு இப்ப நேரம் சரியில்லை. இப்ப சரியில்லைன்னா, இப்பலேருந்து சரியில்லைன்னு அர்த்தம்."

"சனி தசையா?" என்று உமா கேட்டாள்.

"இல்லே. இது வேற விஷயம். ஒரு சின்ன சமிக்ஞை தான் எனக்குக் கிடைச்சது. இந்த கார்ப்பரேஷன்காரா போர் பம்பு போட ஓட்டை போடுவா தெரியுமா, டுர்ர்ருனு?"

"ம்?"

"அதை மனசுல நெனச்சுக்கோ. பூமிக்கடியில, பாறையாவே இருக்கற ஒரு பிரதேசத்துல இவன் தன் காலாலேயே பிராண்டிண்டு, உள்ள, உள்ள, உள்ள போயிண்டே இருக்கறாப்பல ஒரு காட்சி வந்துது. அவ்ளோதான். மீட்கவே முடியாத ஆழம். ரெண்டு செகண்டு கூட இல்லை. கண்ணுக்கே தெரியாதத் தூரத்துக்குப் போயிட்டான். இதனோட நேரடி அர்த்தம் என்னன்னு என்னைக் கேட்காதே; தெரியாது. ஆனா நீ கல்யாணம் பண்ணிண்டேன்னா, அவனோட சேர்ந்து நீயும் போக வேண்டியதுதான்" என்றாள் நீலுப்பாட்டி.

மௌனத்தில் கரைந்த கணங்களில் ஒரு வெறுமை சூழ, எழுந்தோடிப் போய் விட வேணும் போலானது உமாவுக்கு.

"நான் சொல்றது புரியறதா?" என்று பாட்டி மீண்டும் கேட்டாள்.

"விடு பாட்டி. வேற ஏதாவது பேசு."

"வேறென்னத்தைப் பேசச் சொல்றே? முழுக்கவும் சொல்லிடறேன். அப்புறம் உன்பாடு. இந்தக் கடங்காரி இருக்காளே, நம்புமாரி, இவ சொல்றா, அவன் கால் இப்பத்தான் ரெண்டடி ஆழம் குடைய ஆரம்பிச்சிருக்கு. அதுக்குள்ள பிடிச்சி இழுக்க முடியுமா பாருன்னு."

உமா தன் கட்டுப் பாட்டை மீறி இலேசாக முறுவலித்தாள்.

"அப்படின்னா?"

"அப்படின்னா, அப்படித்தான். அவன் யாரு, எப்படிப் பட்டவன்னெல்லாம் எனக்கென்ன தெரியும்? நீதான் சொல்றே, நல்லவன்னு. நான் நம்பினேனா, இல்லியா? ஆனா மனுஷ மூளைக்கு எட்டாத ஒரு சூட்சமப் பட்சி சொல்றது, அவன் நல்லவனா தொடர்ந்து இருக்க முடியாது. அல்லது, நல்லபடியா தொடர்ந்து வாழ முடியாதுன்னு. ஒண்ணு, நீ இதைப் புரிஞ்சுக்கணும். முடியலையா? என்னை நம்பி ஏத்துக்கணும். கிழவி கிடக்கறா, பழம்பெருச்சாளி. இவ என்ன சொல்றது, நாம என்ன கேக்கறதுன்னு தோணித்துன்னா, சரி. நான் என்ன பண்ண முடியும்?

தன் முக்காடை இழுத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டாள் நீலுப்பாட்டி.

நீண்டநேரம், பிறகு உரையாடல் நிகழவில்லை அவர்களினிடையே. நாயொன்று இடையே புகுந்து நகர்ந்தபோது, அதை



**"மழை பெய்த ஒரு மாலையில் நான் எழுதிய கவிதை இது! எப்படிடா இருக்கு?"**

**"இனி உலகில் மழையே பெய்யாம லிருந்தா நல்லதுன்னு யோசிக்க வைக்குது!"**

**— உ. ராஜாஜி**

விரட்டி விட்டு, அதன் தொடர்ச்சியே போல, நீலுப்பாட்டி தான் மீண்டும் ஆரம்பித்தாள்.

"எனக்குத் தெரியும்! இதையெல்லாம் நம்பிண்டு இருக்க வேண்டாம்னு உன் மனசு சொல்றது இல்லியா?" உமா பேசாதிருந்தாள்.

"சரி, ஒண்ணு செய். காளி சொல்றா, அவனைப் பிடிச்சு இழுத்து விட முடியுமா பாருன்னு..."

"அத்தனை அக்கறை இருந்தா, அவளே பிடிச்சி இழுக்க வேண்டியது தானே?"

"கடவுளைப் பழிக்காதே உமா. உன் வாயால தெய்வத்தை நிந்திக்காதே. நம்பிக்கை ஒரு விளக்கு மாதிரி. அது வெளிச்சம் தரும். பார்த்து நடக்கறது நம்மோட பொறுப்பு."

"சரி, விட்டுடு."

"என்னமோ சொல்ல வந்தேனே... ஆமா! அவனை நன்னா தெரியுமா உனக்கு?"

"என்ன கேட்கறே பாட்டி நீ?"

"நன்னா காதல்ல மாட்டிண்டுட்டே. அது புரிஞ்சு போச்சு. ஆனா, அவன் யாரு, எப்படிப்பட்டவன்னு தெரியுமான்னு கேட்கறேன்."

"எனக்குத் தெரிஞ்சி நல்லவன்தான்" என்று இலேசான அலுப்புடன் சொன்னாள்.

"பகவானே!" என்று தன்னிரகத்துக்கு ஆட்பட்டு சற்று நேரம் தனக்குள்ளாகப் பரிதவித்து அடங்கிய நீலுப்பாட்டி, "சரி, முடிஞ்சா இப்பவே கல்யாணம் பண்ணிண்டுடு. இப்பவேன்னா, இப்பவே! ஒரு வாரத்துக்குள்ள பண்ணிண்டு, எங்கியாவது கூடலே இல்லாத பிரதேசத்துக்குக் கூட்டிண்டு ஓடிப் போயிடு. இது முடியும்!" என்றாள் தீவிரமாக.

இனி இவ்விஷயத்தில் தன்னால் உணர்ச்சி வசப்படக் கூட முடியாது என்று உமா நினைத்தாள்.

மிகப் பெரியதொரு கண்டம் தப்பி, அருள்தாஸ் வந்து விட்டான். அவன் வந்து விட்டான் என்பதே அவனை அடைந்து விட்டாற்போலத்தான் இருந்தது அவளுக்கு. கைகோத்துத் திரிவதில் மட்டுமே லயித்து நிற்கிற மனம், திருமணமென்னும் அடுத்த தளத்துக்கு இன்னும் இடம் பெயரவில்லையென்பதைப் பாட்டிக்கு எப்படி உணர்த்துவது என்பது அவளுக்கு விளங்கவில்லை.

வாழ்வின் ஒவ்வொரு பக்கத்திலும் தனக்கொரு புதிய செய்தி ஒளிந்திருப்பதாகவே அவள் கருதினாள். எதையும் தள்ளிவிட்டு இறுதிப் பக்கத்தை நோக்கிப் பாய வேண்டிய அவசியமேதும் தற்சமயம் இல்லை என்று தோன்றியது.

தவிரவும் காதலென்பதுதான் என்ன? சொற்களில் கட்டியெடுத்துவந்து காட்ட முடியாத, சுதி கூட்டப்பட்ட மனத்தின் ஒரு மீட்டலல்லவா அது? தன்னில் அது நிகழ்ந்து விட்டது. தேகமெங்கும் பரவிச் சிந்தையில் இடைவிடாது ஒலிக்கிறது, அந்த ஒரு மீட்டலின் சுநாதம். சாகிற வரைக்கும் ஓயப் போவதில்லை அது.

ஆனால் பாட்டி ஏன் கல்யாணத்தைப் பற்றி மட்டுமே சிந்திக்கிறாள்? நிறுவனங்களின் சேவகர்களாக மட்டுமே வாழப் பழகி விட்ட சமூகம்.

பாட்டி, உன்னை நான் மிகவும் மதிக்கிறேன். தொன்மங்களின் புதிர்க் குவியல்களில் சிக்கி, மேலெல்லாம் நீ பூசிவரும் புதையுண்ட நம்பிக்கைகளின் சேறுடன் சேர்த்தே உன்னை ஆலிங்கனம் செய்து கொள்கிறேன். ஆனபோதிலும் உன் பூச்சுகளை நான் சுமக்கத் தயாரில்லை.

கிழவியின் பரிதவிப்பை உள்வாங்கிச் சிந்திப்பதான பாவனையை வெளிக்காட்டும் விதமாக, அவள் ஓர் இணக்கமான புன்னகை செய்தாள்.

"நாழியாச்சு, உங்கப்பன் தேடுவான். வா, போலாம்!" என்றாள் நீலுப்பாட்டி.

எழுந்து கொண்டார்கள்.

(தொடரும்)

# தொழிலதிபர் டைரி!

டி.ஐ குரூப் நிறுவனங்களை நிறுவிய அதிபர் ஏஎம்எம் அருணாசலத்தின் வாழ்க்கை வரலாற்றை எஸ். முத்தையா எழுதியிருக்கிறார். பாரி அன்ட்கோ, சிம்ப்சன் அன்ட் கோ போன்ற நூற்றாண்டுகள் கடந்த நிறுவனங்களின் சரித்திரங்களை நூல் வடிவில் தந்திருப்பவர் எஸ். முத்தையா. இந்த நூலைச் சமீபத்தில் சென்னைத் தொழிலதிபர்கள் கலந்து கொண்ட கூட்டம் ஒன்றில், சிம்ப்சன் அதிபர் ஏ.சிவசைலம் வெளியிட, அருணாசலத்தின் சகோதரி அன்னபூரணி முதல் பிரதியைப் பெற்றுக் கொண்டார். நூலிலிருந்து :-




குடும்பம் 1931ல் துவங்கிய இந்தோ-யூனியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியில் அருணாசலம் சேர்ந்தார். டி.வி. சுந்தரம் அய்யங்காரின் மருமகன் ஏ.என்.எஸ். ராகவன்தான் கம்பெனியின் செயலர். அவர் ஒரு சார்ட்டர்டு அக்கவுண்டன்ட். இவரோடு பணியாற்றும்போது அக்கவுண்டன்ஸி, ரெக்கார்டு கீப்பிங், தவிர இன்ஷ்யூரன்ஸ் வணிகம் பற்றியும், அருணாசலம் தெரிந்து கொண்டார். அப்போது பர்மாவுக்குப் போகச் சொன்னார்கள் குடும்பத்தினர். அவருக்கு வயது பதினேழுதான்! பர்மாவில் தமிழில் கணக்கு எழுதவும் கணக்கு வைத்துக் கொள்ளவும் வேண்டும். எண்கள்கூடத் தமிழில்தான். முதலாளியின் மகன் என்பதற்காக கம்பெனி ஏஜண்டுகள் எந்தச் சலுகையும் காண்பிக்கவில்லை. மற்ற ஊழியர்கள்கூடத்தான் அவரும் வேலை பார்த்து, சாப்பிட்டு, தூங்க வேண்டியிருந்தது. தெற்கு பர்மாவில் மௌல்மீன் என்ற அந்த இடத்தில்தான் கம்பெனி இருந்தது.

ஏஜெண்டு மெய்யப்பச் செட்டியார் சென்னைக்குத் தற்காலிகமாக வந்துவிடவே முக்கியப் பொறுப்புக்கள் எல்லாம் அருணாசலத்தின் மீது விழுந்தன. வங்கித் தொழிலையும் அங்கே அவர்கள்

''தலைவர் ரொம்ப எளிமை!''

''அப்படியா?''

''மேடைல பொன்னாடை அணிவிக்கறப்ப, இந்த பொன்னாடையை கைத்தறி ஆடையாகப் பாவித்து போர்த்துகிறோம்னு சொல்லச் சொல்றார்!''

– அம்பை தேவா

செய்து வந்ததால், பத்தொன்பது வயதுக்குள்ளேயே வியாபார நெளிவு சுளிவுகளைத் தெரிந்து கொண்டுவிட்டார் அருணாசலம்.

இரண்டு ஏற்றுமதி அபிவிருத்தி தூதுக் குழுக்களின் தலைவராக அருணாசலம் ஆஸ்திரேலியாவுக்கும், நியூஸிலாந்துக்கும் போய் வந்தார்.

ஆஸ்திரேலியாவிலிருந்து நியூசிலாந்து போய்ச் சேர்ந்ததும் அங்கே இருந்த கஸ்டம்ஸ் அதிகாரிகள், இவர்களுடைய பெட்டிகளைத் திறந்து பார்ப்பதில் அக்கறையே காண்பிக்கவில்லை. மாறாக, இவர்கள் அணிந்திருந்த ஷூக்களைக் கழற்றித் தரும்படிச் சொன்னார்கள். உள்ளே ஏதானும் ஷூவைத்திருந்தால் அவற்றையும் எடுக்கச் சொன்னார்கள். அவற்றைக் குடைந்து குடைந்து பரிசோதித்துவிட்டு, திருப்தி அடைந்த பிறகே திருப்பிக் கொடுத்தார்கள்! அவர்களுடைய ஷூக்களில் ஒட்டிக் கொண்டிருக்கும் மண்ணாலும், தூசியாலும் நோய் வந்து பாதிக்கப்பட்டுவிடுமோ என்ற கவலை அவர்களுக்கு! அதற்குப் பிறகு, ஷூபாலிஷ் செய்பவர்களைக் கொண்டு வந்து எல்லாருடைய ஷூக்களையும் பாலிஷ் செய்து கொடுத்து, சுத்தமாகப் பளபளவென்று பண்ணிய பிறகே போட்டுக் கொள்ளக் கொடுத்தார்களாம். ''எங்கள் ஷூக்கள் இலவசமாக பாலிஷ் செய்யப்பட்டன!'' என்று சிரித்தபடியே நினைவுகூர்ந்திருக்கிறார் அருணாச்சலம்.

விடுதலைக்குப் பிறகு, தெற்கே பெரிய தொழிற்சாலைகள் அதிகம் உருவாகவில்லை. டிஐ சைக்கிள் முதலில் தொடங்கப்பட்டது. டிடிகே. ஒவ்வொரு துறைமுக நகரிலும் ஒரு கார் தயாரிப்பாளர் இருக்க வேண்டும் என்று விரும்பினார். தில்லியில் ஆட்டோமொபைல் வியாபாரியாக இருந்த அசோக் சரணை அழைத்து, சென்னையில் ஆஸ்டின் கார்களை அசெம்பிள் செய்து விற்கும்படி கேட்டுக் கொண்டார். சரண் சென்னை வந்தார். அருணாசலத்தின் மூத்த சகோதரர் முருகப்பாவின் உதவி அவருக்குக் கிடைத்தது. மொத்தமாக அயல்நாட்டு இறக்குமதிச் சரக்கையே நம்பி இருக்காமல், மெல்ல மெல்ல இந்தியத் தயாரிப்புக்களை உபயோகிக்கும்படி டிடிகே வற்புறுத்தினார். கார்களைவிட லாரிகளும் ட்ரக்குகளும் அரசின் பார்வையில் எளிதாக அனுமதி பெற உதவும் என்று நினைத்த சரண், பிரிட்டிஷ் தயாரிப்பாளர்களான லேலண்டு நிறுவனத்துடன் கூட்டு வைத்துக் கொண்டார். ஆனால் ஏராளமான மூலதனம் தேவைப்பட்டது. சரண் தில்லிக்குப் பறந்தார். டிடிகேயைச் சந்தித்து, அரசு உதவ முடியுமா என்று கேட்டார். ராஜாஜி அப்போது இங்கே முதலமைச்சர். அவர் பரிந்துரை செய்தால் மத்திய அரசு நிச்சயம் உதவ முடியும். அவரிடம் உடனே பேசுங்கள் என்றார் டிடிகே. தில்லியிலிருந்து விமானத்தில் சென்னை புறப்பட்டார் சரண்.

அப்போதெல்லாம் டகோடா விமானங்கள் தில்லி, கல்கத்தா, சென்னை, பம்பாய் என்று நான்கு இடங்களிலிருந்து கிளம்பி, பயணிகளையும், தபால்களையும் சுமந்து கொண்டு, நாக்பூர் வந்தடையும். பிறகு அந்தந்த பிராந்தியங்களுக்குச் செல்ல வேண்டிய பயணிகளையும், தபால்களையும் ஏற்றிக் கொண்டு திரும்பிவிடும். எல்லாத் தொழிலதிபர்களும் அவரவர் பணியை முடித்துக் கொண்டு இரவு ஒன்பது மணிக்கு இந்த விமானங்களைப் பிடித்துவிடுவார்கள்.

சரண் ஏறிய டகோடா விமானம் நாக்பூரிலிருந்து புறப்பட்ட சில நிமிடங்களில் கீழே விழுந்து நொறுங்கியது! தங்கள் குடும்பச் சொத்துக்கள் முழுவதையும் இந்தக் கூட்டுத் தொழில் முயற்சியில் முடக்கியிருந்தனர் சரண் குடும்பத்தினர். மிஸஸ் சரண், டிடிகேயைச் சந்தித்தார்.

லேலண்டு நிறுவனத்துடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தை வீணாக்கிவிட டிடிகேவுக்கு மனம் ஒப்பவில்லை. சென்னையில் தமது நண்பரான சர் ராமசாமி முதலியாரிடம் சொல்லி பிரிட்டிஷ் லேலண்டு சேர்மனிடம் பேசி, அவர்களுடைய முதலீட்டை 49 சதவிகிதமாக்கி, எப்படியாவது தொழிற்சாலையைத் தொடங்கச் சொன்னார். அப்படி பிறந்ததுதான் அசோக் லேலண்டு. அது உருவாவதற்கு மறைமுக உதவி முருகப்பா குழுமத்திலிருந்து கிடைத்தது என்பது பலருக்குத் தெரியாது.

அண்ணாதுரை பதவி ஏற்ற பிறகு, ஆர். வேங்கடராமன், சி. சுப்பிரமணியம்

போலவே தொழில் துறையில் தமிழ்நாடு சிறப்பான இடம் பிடிக்க வேண்டும் என்று விரும்பினார். TIIC-ஐ உருவாக்கி, சர் ராமசாமி முதலியாரை அதன் தலைவராக இருக்கும்படி கேட்டுக் கொண்டார். அவரும் ஏற்றுக் கொண்டார். ஆனால் எல்லா போர்டு மீட்டிங்குகளிலும் கலந்து கொள்ள முடியாத அளவுக்கு அவரது உடல்நிலை மோசமாயிற்று. அவருடைய வீட்டிலேயே கூட்டங்கள் நடைபெற ஆரம்பித்தன.

இதற்குள் அண்ணா நோய்வாய்ப்பட்டுக் காலமானார். முதல்வராக இருந்த மு. கருணாநிதி, தொழிலமைச்சராக செ. மாதவனை நியமித்தார். துரதிர்ஷ்டவசமாக, சர் ராமசாமி முதலியார் தமிழ்நாட்டுக்கும், தொழில் துறைக்கும் எத்தனை சேவை செய்திருக்கிறார் என்று மாதவனுக்குத் தெரிந்திருக்கவில்லை. ராமசாமி முதலியார் போர்டு மீட்டிங்குகள் நடத்துகிற விதத்தை அவர் ஏற்கவில்லை. அருணாசலம் சேர்மன் பதவியை ஏற்கட்டும் என்று கருத்துத் தெரிவித்துவிட்டார் மாதவன். 'நானே இந்தப் பதவியைவிட்டு விலகக் காத்திருக்கிறேன். நல்லதாகப் போயிற்று' என்று சொன்னார் ராமசாமி முதலியார் துளியும் வருத்தம் இல்லாமல். ஆனால் தாம் பதவி ஏற்பதை, ராமசாமி முதலியாரிடம் கேட்ட பிறகே தெரிவிக்க முடியும் என்றார் அருணாசலம். அவர் வற்புறுத்தவே, TIICயின் சேர்மன் பொறுப்பை ஏற்றார் அருணாசலம்.

ஆனால் தொழிலமைச்சர் மாதவனின் கருத்துக்களோடு அவரால் ஒத்துப்போக முடியவில்லை. சில சமயங்களில் அமைச்சரின் யோசனைகள் சாத்தியமில்லாதவையாகவே தோன்றும். ஆனால் அமைச்சர் என்ற முறையில் அவர் தன் கருத்தை வலியுறுத்துவார். அப்போது தொழில்துறை செயலராக இருந்தவர் வி. கார்த்திகேயன். அவர் மூலமாகவும் சில யோசனைகளைச் சொல்லிச் செயல்படுத்தச் சொல்லுவார். இவை பிடிக்காமல், எப்போது ராஜினாமா செய்யலாம் என்று காத்துக் கொண்டிருந்தார் அருணாசலம்.



**த**மிழ்நாட்டு அரசியலும் - தொழில் துறையும் சார்ந்த இவை போன்ற ஏராளமான தகவல்களை ருசிகரமாகச் சேர்த்து நூலை உருவாக்கி இருக்கிறார் முத்தையா. முழு நூலையும் ஒரே மூச்சில் படிக்கத் தோன்றுகிறது. ஏஎம்எம் அருணாசலமே விவரிக்கும் ஒரு சம்பவமும் இந்நூலில் இடம் பெற்றுள்ளது:

"**இ**ங்கிலாந்துக்கு வரும்படி எம்சிடிஎம் சிதம்பரம் செட்டியார் என்னை அழைத்திருந்தார். இங்கிலாந்து போவதில் வெகு ஆர்வமாக இருந்தேன். சகோதரர் முருகப்பாவிடம் தெரிவித்துவிட்டு, ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினேன். அப்பா பெங்களூரில் இருந்தார். நேரே பெங்களூர் போய் பிரயாணம் பற்றிய எனது ஏற்பாடுகளைச் சொன்னேன். அவருக்கு அதில் ஆர்வமே இருக்கவில்லை. கடைசியாக என் வற்புறுத்தலுக்காக, சரி என்று சொன்னார்.

"அன்று இரவு ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தேன். நடு இரவில், என் அருகே அழுகை ஒலிகேட்டு, விழித்துக் கொண்டேன். அப்பா என் கட்டிலருகே நின்றுகொண்டு, என் கையைப் பிடித்தபடி, தேம்பித் தேம்பி அழுதார். உடைந்து போன குரலில், 'தம்பீ நீ இந்தப் பயணம் போகாதே!' என்று கண்ணீர் வடியத் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டார். கடைசியில் நான் சரி என்று சொன்ன பிறகே என் அறையைவிட்டுப் போனார். இளம் வயது. இங்கிலாந்துக்குப் போக முடியாது போனதில் கோபம் வந்தது. மறுநாள் காலை, அப்பாவிடம் போய் நேரில் விடைபெற்றுக் கொள்ளாமலே ஊருக்குக் கிளம்பி விட்டேன்.

"சென்னை வந்ததும் விமான டிக்கட்டை கான்சல் செய்துவிட்டு, லண்டனில் இருந்த எம்சிடிஎம்முக்குத் தந்தி கொடுத்தேன். வந்ததும் சகோதரர் முருகப்பா, அப்பா போன் பண்ணியதாகவும், நான் ஏமாற்றம் அடைந்திருந்தாலும், பயணம் செல்லவில்லை என்பதில் தாம் சந்தோஷம் அடைந்ததாகவும் சொன்னதை என்னிடம் தெரிவித்தார்.

"ஆனால் அடுத்த சில நாட்களிலேயே நான் கேள்விப்பட்ட செய்தி பேரதிர்ச்சி தந்தது. நான் பயணம் செய்திருக்க வேண்டிய விமானம் சவுதி அரேபியாவுக்கும் கெய்ரோவுக்கும் இடையே விழுந்து நொறுங்கி விட்டிருந்தது!"

**— சாருகேசி**

"ஏம்பா காதல்ங்கறது எதுலேருந்து ஆரம்பமாறது?"

-ப்ரீதி அப்பா தந்த காபியை உறிஞ்சிக் கொண்டே கேட்டாள்.

கேதாரி 'கடகட'வெனச் சிரித்தார். அடுப்பில் கத்தரிக்காய் பிட்லை கொதித்துக் கொண்டிருந்தது. இன்னும் தேங்காய் துருவி அரைத்து விடவேண்டியதுதான் பாக்கி.

"இந்த கத்தரிக்காய் இருக்கேம்மா, அரைச்சு விடாம வெறும் வெந்த பருப்பும், புளிக் கரைசலும், சாம்பார் பொடியும் சேர்த்துப் பண்ணினா சாம்பார். தேங்கா, மிளகாவத்தல், தனியா அரைச்சு விட்டால் பிட்லை. காய் நிறைய இருந்து, இதே மாதிரி அரைச்சு விட்டா ரசவாங்கி. வெறுமே புளிகுத்தி தேங்காய், சீரகம், மிளகு அரைச்சுவிட்டா மிளகூட்டல்..."

ப்ரீதி அப்பாவை முறைத்தாள்.

"நான் காதலைப்பத்தி கேட்டா, நீங்க கத்தரிக்காயைப் பற்றி சொல்றீங்க... அன்னைக்கு அப்படித்தான், எங்க ஆபீஸ் சீனிவாசராகவனை கோயில்ல பார்த்துட்டு அவர் சௌக்யமான்னு கேட்டதுக்கு 'ஆஹான்னு' ஒரு வார்த்தைல பதில் சொல்லாம, நரசிம்மராவ் சௌக்யத்தைப் பத்தியும், சீதாராம் கேசரியின் -க்ஷேம நலனைப் பத்தியும் விலாவாரியா சொல்ல ஆரம்பிச்சிட்டீங்க... வரவர உங்களுக்கு வயசாயிட்டு வாது நல்லாவே தெரியுது..."

கேதாரி மிக்ஸியில் குழம்புக்கு அரைத்துக் கொண்டே அதே சுருதியில் மகளிடம் பேசினார்.

"ப்ரீதி... நீ காதலைப் பத்தி கேட்டே...

3



வாஸ்த்தவம், நான் கத்தரிக்காயைப் பத்தி சொன்னேன். ரெண்டுக்கும் ஒரு லிங்க் இருக்கு. நீ புரிஞ்சிக்கலைனா கேதாரியோட பொண்ணே இல்லை.

"................"

ப்ரீதி தனது பெரிய கண்களை இன்னமும் அகலமாக விரித்து அப்பாவைப் பார்த்தாள்.

கேதாரி தனது கிருஷ்ணபரமாத்மா புன்னகையை சித்தியபடியே தாளித்து கொட்டினார். ஓரக்கண்ணால் மகளின் முக பாவத்தையும் அளந்து கொண்டார்.

"ரசவாங்கியோ, சாம்பாரோ, பொரிச்ச கூட்டோ, பிட்லையோ... எல்லாத்துக்கும் இதே கத்தரிக்காயைத்தான் போடறோம். ருசிதான் பேதமாறது. அது மாதிரி காதலோ, லவ்வோ, ப்ரியமோ, அன்போ எல்லாத்துக்கும் ஆதாரம் மனசுதான். அவங்கவங்க கேரக்டருக்குத் தகுந்த மாதிரி அது விசுவரூபமெடுக்கிறது. உங்க அம்மாவை நான் காதலிச்சுதான் கல்யாணம் பண்ணிண்டேன். அப்போ அவளுக்குப் பதினைஞ்சு வயசு, எனக்கு இருபது. மாடில குடியிருந்த பாச்சுலர் நான். வீட்டுச் சொந்தக்காரியோட பொண்ணு அவ. இப்படி எப்பவாவது பார்க்கறதுதான், ஒண்ணு ரெண்டு வார்த்தை பேசிக்கிறதுதான். உத்யோக விஷயமா நான் மாத்தலாகி வேற ஊருக்குப் போறப்போ கதவு ஓரமா நின்னுண்டு கண்கலங்க என்னை ஒரு பார்வை பார்த்தா பாரு, அந்தப் பார்வையை மனசுக்குள்ளேயே பத்திரப்படுத்தி வைச்சு, நாலு வருஷம் கழிச்சு அம்மா, அப்பாவோட வந்து முறைப்படி பெண் கேட்டேன். இது எந்த ரகக் காதல்னு தெரியுமா:..? மழைக் காலம் வரும்னு அந்தக் காலத்துல வெய்யில் காலத்திலேயே பெரிய கத்தரிக்காயை வாங்கி வத்தல் போட்டு வெச்சுப்பா. கொட்ற மழைல குழம்புக் கருவடாத்தோட அந்த வத்தலைப் போட்டு ஒரு குழம்பு பண்ணுவா பாரு தேவாம்ருதமா இருக்கும்..."

ப்ரீதி இதைக் கேட்டு விழிகளை இடுக்கிக் கொண்டு சிரித்தாள். "அப்பா சமையலை விட்டு, கொஞ்சம் இந்தப் பக்கம் வரேளா? எங்க ஆபீஸ் சீனிவாசராகவன் கூட ஸ்டெனோ அலமேலுவை லவ் பண்ணித்தான் கல்யாணம் பண்ணிண்டாராம். ஆனா இப்போ அந்தம்மா மிஸஸ் சீனிவாசராகவனாகி அவர் வீட்டுல சமையல்கட்டுல... இவர் பழைய ஸ்டெனோ அலமேலுவைப்பத்தி கொறஞ்சது நாறு தடவையாவது

# அனுராதா ரமணன்





"தலைவர் 'கையெழுத்து இயக்கம்' நடத்தினாரே... பலன் இருந்துச்சா?"
"நல்ல பலன்... நிறைய பேரு விதம் விதமா கையெழுத்து போடக் கத்துக் கிட்டாங்க!"
- தஞ்சை ராகவ் மகேஷ்

சொல்லிக் கொண்டே இருக்கார்."

கேதாரி மகளுக்குச் சிறிய டிபன் கேரியரில் சாப்பாட்டை எடுத்து வைத்துக் கொண்டே பதிலளித்தார். "சிலபேர் ரெண்டு கத்தரிக் காயை நறுக்கி அஞ்சாறு வெங்காயத்தை நறுக்கிப் போட்டு கறிபண்ணுவா. வெங்காய வாசனைதான் தூக்கியடிக்கும். கத்தரிக் காயைத் தேடணும். உங்க ஸ்ரீநிவாஸராகவன் காதலும் அப்படித்தான். காதல் கொஞ்சமா கத்தரிக்கா மாதிரி இருக்கு. அதிகாரங்கற வெங்காயம் கத்தரிக்காயைக் காணாம போக் கடித்து." டிபன் பாக்ஸை மூடி பையில் வைத்தவர் தன் மகளைப் பார்த்து குறும் பாய்ச் சிரித்தார்.

"இங்கே எப்படி? காதல்ங்கற கத்தரிக்காய் கமகமன்னு பிட்லையாகப் போறதா, இல்லை பத்தியமா பொறிச்ச கூட்டாகப் போறதா?"

ப்ரீதி அப்பாவின் கேள்வியில் ஒளிந் திருந்த விஷமத்தைப் புரிந்து கொண்டாலும், உடனே பதிலளிக்காது நகத்தில் பூசிய சாயத்தை உற்றுப்பார்த்துக் கொண் டிருந்தாள்.

கேதாரி ஒரு தட்டில் மல்லிகைப்பூவாய் இட்லியையும் சட்னியையும் கொண்டு வைத்துக் கொண்டு மகளின் வாயில் ஊட்டியபடியே அப்போதுதான் அவளைப் புதுசாய்ப் பார்ப்பது போல் உச்சந்தலையி லிருந்து உள்ளங்கால் வரை பார்வையை ஓடவிட்டார்.

தாயில்லாப் பெண்ணை ஒரு தகப்பன் வளர்ப்பது கொஞ்சம் கஷ்டம்தான். ப்ரீதி யைப் பெற்றவள், அவளுக்கு எட்டு வயதாக இருக்கும் போதே இறந்து விட்டாள். கேதாரி யின் பெற்றோரும் மற்றவரும் அவரை மறுமணம் செய்து கொள்ளச் சொல்லி எத்தனையோ வற்புறுத்தியும், மகளின் நல னைக் கருதி அவர் மறுத்துவிட்டார். ஓரள வுக்கு வசதி இருந்தும் கூட சமையலுக்கு என்று தனியாக ஆள் போடவில்லை. ஓய்வு பெறும் வயதை எட்டுவதற்கு முன்பே மகளுக்காகத் தனது நாற்பத்தைந்து வயதி லேயே ஓய்வு பெற்று விட்டார்.

இந்தக் கேதாரியைப் பற்றி ஒரு சில வார்த்தை கூறியே ஆக வேண்டும். ப்ரீதிக்குத் தாயாகவும், தகப்பனாகவும் மட்டுமின்றி சிறந்த நண்பனாகவும் இருப்பவர். என்றோ ஒரு நாள் ப்ரீதி ஏதோ ஒரு ஐந்து நட்சத்திர ஓட்டலில் சாப்பிட்ட மலாய் கோஃப்தா நன்றாக இருக்கிறது என்று சொல்லப்போக, இவர் அந்த ஓட்டலின் தலைமை சமையல் காரரிடமே போய் அது பற்றித் தெரிந்து கொண்டு சமைத்துப் போட்டு மகளை அசத்தியிருக்கிறார். சமையல்தான் என் றில்லை, கர்நாடக சங்கீதத்தில் இந்தப்பக்கம் மூத்த தலைமுறை வித்வான்களிடம் நெருக்க மாய் அமர்ந்து பேசக் கூடியவர். அதே சமயம் இன்றைய சங்கர் மஹாதேவனிடம் 'ஜமாய்ச்சுட்டே போ'- இப்படிச் சொல்லக் கூடியவர். பரதமும் தெரியும். பாப் இசையும் தெரியும். இன்றைய சினிமாவில் எந்த ஹீரோயினுக்கு மார்க்கெட் அதிகமென்று இவரைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். கம்ப்யூட்டரின் சகல மொழிகளையும் தெரிந்து வைத்திருப்பவர்.

முதன் முதலில் ப்ரீதியின் பதினைந்து வயதில் எதிர்வீட்டுப் பையன் காதல் கடுதாசு என்று தப்புத்தப்பாய் எதையோ கிறுக்கிக் கொடுக்க, அதைப் படித்துவிட்டு இவள் 'ஓ' வென்று அழ, இவர் மகளைப் பக்கத்தில் உட் காரவைத்துக் கொண்டு, விடலைப் பருவத் தின் சேஷ்டைகள் இப்படித்தான் இருக்கு மென்று எடுத்துக் சொல்லி தேற்றியிருக் கிறார். அப்போதே ப்ரீதி கேட்டாள்-

"நீங்க, அம்மாவை லவ் பண்றச்சே பதினைந்து வயசுதானே, அது மாத்திரம் வயசுக்கோளாறு இல்லையா?"

"கண்டிப்பா அதுவும் ஒரு வயசுக் கோளாறுதான். ஆனா இந்த எதிர்வீட்டுப் பையன் மாதிரி ஒரு சமயத்துல நாலஞ்சு பொண்ணுங்களை ஸைட்டு அடிக்கலை

நான். கடுதாசு எழுதறது, கண் மறைவாய்ப் போய்ப் பேசறது. இதெல்லாம் தெரியாது. பார்க்கணும்னு ஆசையா இருக்கும். அப்படிப் பார்க்கறப்போ கூச்சமா இருக்கும். நகர்ந்து போன உடனே அடடா நல்ல சந்தர்ப்பத்தைத் தவற விட்டுட்டமேன்னு மனசு கிடந்து அடிச்சுக்கும்.

ஒரு தகப்பன் மகளுடன் பேசுவது இப்படித்தான் இருக்க வேண்டும் என்கிற வரைமுறைகளையெல்லாம் கடந்தது கேதாரி-ப்ரீதியின் பாசம். இப்பொழுது கூட அவருக்கு நம்பமுடியாத வியப்பாக இருக்கிறது. தன்னிடம் சகலத்தையும் கொட்டி அலசுகிற இந்தப் பெண் இப்பொழுது மட்டும் எதையோ மனசுக்குள் வைத்துக் கொண்டு பேசுகிறாள். அந்தத் தவிப்பு புரிகிறது. அதே நேரத்தில் கேதாரி, தகப்பன் என்கிற வேஷத்தைக் கலைத்துவிட்டு ஸ்நேகிதன் என்கிற அரிதாரத்தைப் பூசிக் கொண்டு ப்ரீதியிடம் தமாஷாய்க் கேட்கிறார், காதல் கத்தரிக்கா ரெடியாம்மா?"

ப்ரீதி லஜ்ஜையுடன் தந்தையைப் பார்த்துவிட்டு தலை கவிழ்ந்தாள். ''வெறும் கத்தரிக்காய் போதுமா, சாம்பாரோ பொறியலோ, மத்த சாமான்லாம் வேண்டாமா?"

கேதாரியின் முகத்தில் மறுபடியும் கிருஷ்ண பரமாத்மா வந்து போனார்.

"ஓ! இப்போ உன் மனசு காதல்ங்கற கத்தரிக்காயை வாங்கி வச்சிருக்கு. எதிர்ப் பக்கம் என்ன இருக்கும்னு தெரியலை, அதானே."

"கரெக்டுப்பா..."

கேதாரி பரவசமானார்.

"இந்த ராஜகுமாரி விரும்பற அந்த ராஜகுமாரன் யாரோ?"

''அவர்தாம்ப்பா மிஸ்டர் அஜய். எனக்கு அவரை பிடிச்சிருக்கு. அவரைக் கல்யாணம் பண்ணிண்டா சந்தோஷமா இருக்கலாம்னு தோணறது. அவருக்கும் நான் இல்லாம ஒரு வேலையும் ஓடமாட்டேங்கறது. ஆபீஸே எங்க ரெண்டு பேர்க்குள்ளேயும் ஒரு 'இது' இருக்குன்னு கிசுகிசுக்கறது. ஆனால் நெஜமாவே அப்படி ஏதாவது இருக்கா.. அதை எப்படி தெரிஞ்சுக்கறதுன்னு தான் தெரியலை."

கேதாரி உற்சாகமானார். ''பொம்மனாட்டிகள் மனசுல இருக்கறதைத் தெரிஞ்சுக்கறதுதான் கஷ்டம். ஆம்பிளைகள் அப்பாவிகள். எதையும் மறைச்சு வைக்கத் தெரியாது. சின்னதா ஒரு சிரிப்பு, சிநேகமா ஒரு பார்வை, ஒரு ஸ்பூன் அக்கறை, ஒரு ஸ்பூன் பரிவு, 'ஆஹா உங்களை மாதிரி உண்டான்'னு ஒரு ஸ்பூன் பாராட்டு போதும். மனுஷன் தலை குப்புற விழுந்துடுவான்..."

"இத்தனைக்கப்புறமும், அவர் மனசுல நான் எதிர்பார்க்கிற 'அது' இல்லைன்னா..."

"லீவ் இட், டேக் இட் ஈஸி. உன்னை மனைவியா அடைய எவனுக்குக் கொடுத்து வச்சிருக்கோ?"

இதற்கு மட்டும் ப்ரீதி பதில் சொல்லவில்லை. மெல்லியதாய்ப் பெருமூச்சு விட்டாள். அந்தப் பெருமூச்சே, கேதாரியை தகித்தது.

(தொடரும்)

# சினிமாவில் கால்பந்தாட்ட வீரர்!



• படத்தில்

இந்தியாவின் முன்னணி கால்பந்தாட்ட வீரர் விஜயன். கேரளாவைச் சேர்ந்தவர். கேரள காவல் துறையில் இவர் சர்க்கிள் இன்ஸ்பெக்டராக வேலை பார்க்கிறார். இந்த விஜயனுக்கு சினிமாவில் நடிக்க வாய்ப்பு அளித்திருக்கிறார் பிரபல மலையாள டைரக்டரான ஜெயராஜ். படத்தின் பெயர் : சாந்தம். (நவரச சப்ஜெக்ட்களில் இயக்குனர் ஜெயராஜ் படம் எடுத்து வருகிறார். முதல் படம் : கருணை. இப்போது சாந்தம்).

''எனக்கு நடிப்பு தெரியாது. ஆளை விடுங்க'' என சினிமா வாய்ப்பை ஏற்க மறுத்த விஜயனிடம் ''நடிப்பதற்கு முன் அனுபவம் தேவை இல்லை. நான் சொல்லுவதை செய்து காட்டினால் போதும்'' என்று சொல்லி நம்பிக்கையூட்டினாராம் ஜெயராஜ்.

நெருங்கிய நண்பன் ஒருவனை பலவீனமான மனோ நிலையில் கொன்றுவிட்டு, அதற்காக குற்ற உணர்வில் துன்பப்படும் இளைஞனின் கதைதானாம் சாந்தம்.

படத்தில் விஜயனின் அம்மாவாக நடிப்பவர், 'பாண்டிட் குயினி'ல் கலக்கிய சீமா பிஸ்வாஸ்.

- எம்



# அவசரமா குழந்தை வேணுமா?

குழந்தை பிறக்கலைன்னு அரச மரத்தைச் சுத்தி வந்த காலமெல்லாம் இப்போ கான் வித் தி விண்ட்! அவசரமா குழந்தை வேணுமா... நேரா ஒரு இன்ஃபர்டிலிடி கிளினிக்குக்குப் போக வேண்டியது. கொஞ்சம் இன்வெஸ்டிகேஷன், அப்புறம் ஆர்டிஃபிஷியல் இன்ஸெமினேஷன்... பத்தாவது மாசத்துல பாப்பாவைக் கையில தூக்கலாம்னு எந்த டாக்டரும் காரன்டியெல்லாம் தர்றதில்லே. இந்த மெதட்ல இருக்கற பல டேஞ்சர்ஸ் பத்தி அவங்க வார்னிங்கும் குடுக்கறதில்லே.

'ஏன் சுமி! மெடிகல் ஸ்டூடன்டா இருந்துக்கிட்டு இப்படி உன் சகாக்களையே விட்டுக் குடுக்கலாமான்'னு நீங்க கேட்கறது புரியுது. பட் தி ட்ரூத் மஸ்ட் கம் அவுட்.

செயற்கையான மெதட்ல கருத்தரிக்க வைச்சா கருக்குழாய் – அதான் ஃபாலோபியன் டியூப்ல போய் கரு வளர வாய்ப்பு இருக்கு. ஒரு கருவுக்கு மேல இரண்டு அல்லது மூணு கூட உருவாகலாம்.

சமீபத்துல ஒரு கேஸ் – இந்த மாதிரி மெதட்ல கன்சீவ் ஆகி கருப்பைலயும் ஃபாலோபியன் டியூப்லயும் ஒரே நேரத்துல கரு வளர ஆரம்பிச்சுடுச்சு. எக்டாபிக் ப்ரெக்னென்ஸி – அதான் டியூப்ல கரு வளர்றது உயிருக்கே ஆபத்து. போதாதகுறைக்குக் கருப்பையில வளர்ந்த கருவும் ஆரோக்கியமா இல்லே. அதனால, உருவாக்கின உயிரை டாக்டர்களே அழிக்கறதுன்னு முடிவு பண்ணி ட்ரீட்மென்ட் ஆரம்பிச்சாங்க. ட்ரீட்மென்ட்னால பலன் ஏற்படலைன்னதும் ஆபரேஷன் பண்ணி கருவை எடுத்துடறதுன்னு முடிவு செஞ்சாங்க. அதுவும் ஃபர்ஸ்டு லாபரோஸ்கோப் மூலமா சின்ன ஆபரேஷன்னு ஆரம்பிச்சு கடைசி நிமிஷத்துல சர்ஜரியா அது மாறிப் போச்சு... அங்கதான் பெரிய பங்லிங்... பேஷன்டுக்கு ரத்தம் கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு, நெருக்கடியான டைம்ல பார்த்தா, தியேட்டர்ல யாருக்குமே அவங்க பிளட் க்ரூப் என்னன்னு தெரியலை...! பல்ஸ் வேற இறங்கிப் போச்சு. ஏழு நிமிஷம்தான் உயிர் தங்கும்ன்ற நிலைமைல ரத்தத்தை சாம்பிள் எடுத்து, க்ரூப் கண்டுபிடிச்சு, அப்புறம் அதே க்ரூப் ரத்தம் ஏத்தி...

பேஷன்ட் பிழைச்சுட்டாங்க. ஆனா மெடிகல் எதிக்ஸ்?.... அதுக்கு சமாதிதான்.

இந்த மாதிரி அலட்சியம் மன்னிக்க முடியாததுன்றது ஒரு ஆஸ்பெக்ட்.

ஆராய்ச்சி ரீதியா ஆரம்பிக்கற செயற்கைக் கருத்தரிப்பு மாதிரி முயற்சிகளை அன்றாட மருத்துவத்துக்கு டிரான்ஸ்ஃபர் பண்றது சரியில்லைன்றது இன்னொரு ஆஸ்பெக்ட். இது கூடாதுன்னு ரொம்பக் காலமா ஒரு க்ரூப் கரடியா கத்திக்கிட்டிருக்கு. ஆனா உயிரை லபாரடரிலே உருவாக்கிறதுல கிடைக்கற சாகச உணர்வு இருக்கு பாருங்க, அது எல்லா மாரல், எதிகல் கேள்விகளையும் குழிதோண்டிப் புதைச்சுடுது.

இந்த மாதிரி கஷ்டம் யாருக்குமே வரக் கூடாதுப்பா! ஆனா என் ஃப்ரெண்டுக்கு வந்துடுச்சு.

இந்த இன்ஸிடன்ட்டைப் பார்த்த பிறகு சமீபத்துல படிச்ச ஒரு 'நச்' வாக்கியம் ஞாபகத்துக்கு வந்தது. ('நச்சு' வாக்கியமில்லே!):

என்னதான் சிருஷ்டியின் ரகசியத்தை அறிந்து கொண்டாலும், கூட, மரணத்தின்

மௌனத்தை அவனால் (அதாவது மனிதனால்) அறிய முடியாமல் திண்டாடுகின்றான். எதையும் வெல்வேன் என்ற மனித ஆணவத்திற்கு ஒரு சறுக்குக் கல்லாய் மரணத்தை மறைத்து வைத்திருக்கிறான் இறைவன்.

சி.எஸ். முருகேசன் எழுதியிருக்கற 'சித்தர்கள் கண்ட இறைமை'ன்ற புக்ல இதைப் படிச்சேன்.

இப்போ கண்டுபிடிச்சிருக்கற டி.என்.ஏ. ரகசியங்கள் இந்த ஸ்டேட்மென்டுக்குச் சவால் விடற மாதிரி இருக்கு. ஆனால் யார் கண்டாங்க? போகற உயிரைப் பிடிச்சு நிறுத்தற கலையை, அல்லது விஞ்ஞானத்தை, மனுஷன் பர்ஃபெக்ட் ஆக்கற வரைக்கும் மனித இனமே இருக்குமோ இருக்காதோ!

**எ**ன்ன சுமி இந்த வாரம் ரொம்ப பிலஸாஃபிகல் மூட்ல இருக்கேன்னு கேட்கறீங்களா?

சென்னை மாநகரத்துல மழையே பெய்யலை. வரப் போற தண்ணி கஷ்டத்தை நினைச்சுக்கிட்டா வி சானல் அடிமைங்க கூட தத்துவம் பேச ஆரம்பிச்சுடுவாங்க!

ஜோக்ஸ் அபார்ட், சி.எஸ். முருகேசனோட 'சித்தர்கள் கண்ட இறைமை', 'சித்தர்களின் பேருலகம்' (வெளியீடு குறிஞ்சி, சென்னை -49) – இரண்டு புக்குமே சித்தர் இலக்கியத்துக்கு நல்ல அறிமுகமா இருக்கும். சீரியஸ் ரீடர்ஸுக்கும் என்னை மாதிரி அப்பப்போ வாழ்க்கைக்கு அர்த்தம் தேடற நல்ல பழக்கம் உள்ளவங்களுக்கும் அப்பீல் ஆகும். டுவென்டி பைஃவ், டுவென்டி ரூபீஸ்னு - விலையும் ரொம்ப சகாயம்.

பட் டோன்ட் வொரி, இதையெல்லாம் படிச்சுட்டு நானும் மூச்சைப் பிடிச்சுக்கிட்டு உட்கார்ந்துட மாட்டேன். சுமி சூப்பர்மார்க்கெட் வில் கன்டின்யூ!







**டெ**லிவிஷன் வந்ததால ரீடிங் ஹாபிட் ரொம்ப குறைஞ்சுட்டு வருதுன்னு ஒரு கவலை பரவலா இருக்கு. ஆனா ரிவர்ஸ் டைரக்ஷன்ல ஒரு முயற்சி – சன் டீவியில 'இந்த நாள் இனிய நாள்' ப்ரோக்ராம்ல வலம்புரி ஜான் சொன்ன விஷயங்களையெல்லாம் தொகுத்து புத்தகமாக்கியிருக்காங்க, ஆலாத் பதிப்பகத்துக்காரங்க (சென்னை – 80). ஏற்கெனவே மூணு தொகுதி வந்திருக்கு – இது நாலாவது. கீரை, கடுக்காய்னு சாதாரணமா நினைக்கற விஷயத்தையும் குழந்தைங்களோட இன்டலிஜன்ஸை வளர்க்கறது எப்படி?ன்றது மாதிரியான பிராக்டிகல் அட்வைஸையும், பகவான் இராமகிருஷ்ணருக்கு ஒரு போற்றியையும்... பக்கத்துல பக்கத்துல வைச்சுப் பார்க்கிற போது நம்ம சூப்பர் மார்க்கெட் மாதிரி கொஞ்சம் கதம்பமா தெரியுது.

கல்கியில தொடர் வந்தா வானதியில அதை புக்கா போட்டுடறாங்க. அதே பாட்டர்ன் தான் 'இந்த நாள்' தொகுப்பு முயற்சியும். எனிஹௌ... டீ.வியினால வாசிப்பு குறைஞ்சுடுச்சுன்ற தியரிக்கு இது சவால்தான்.

**இ**ந்த வார ஜோக்குக்குப் பதிலா விஜயராகவனோட 'பர்ஸ்' கவிதைக்கு சி.தெ. இளமுருகன் அனுப்பியிருக்கற ரியாக்ஷனைப் படியுங்க :

'இதோ சொல்கிறேன் கேட்டுக் கொள் –
பர்ஸுக்குத் தமிழில் காசுறை
இப்போது நீ சொல்;
அரிசிக்கும் சாதத்துக்கும்
ஆங்கிலச் சொல் என்ன?'

- சுமி

**என்னாச்சு எழில்மிகு சென்னை? என்பது பற்றி மாநகராட்சி கமிஷனர் ராதாகிருஷ்ணன் சொல்கிறார் :**

கடந்த நான்கு ஆண்டுகளில் அடுக்கடுக்காக செய்து முடிக்கப்பட்டுள்ள மேம்பாட்டுப் பணிகள் குறித்துச் சொல்ல வேண்டியது எனது கடமை. குடிசை உள்ளிட்ட குடியிருப்புப் பகுதிகளில் தங்கும் நீர், நகரின் நீர்வழிகளில் ஏற்படும் தேக்கம் ஆகியவற்றால் கொசு உற்பத்தியாகிறது என்பது உண்மை. கொசு ஒழிப்பிற்காக மேற்கொள்ளப்பட்டுவரும் வழக்கமான முயற்சிகளை மேலும் தீவிரப்படுத்த கடந்த ஆண்டு ரூபாய் ஐம்பத்தி ஆறு கோடி செலவில் மேலும் ஐந்து புதிய ஊர்திப் புகை பரப்பு இயந்திரங்களை அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்துள்ளோம். மேலும் மலேரியா மற்றும் யானைக்கால் வியாதிகளைத் துல்லியமாகக் கண்டறிய கியூ பி.சி. என்ற நவீன இரத்த பரிசோதனைக் கருவியை ரூபாய் 4.60 லட்சம் செலவில் வாங்கியிருக்கிறோம். கொசு மற்றும் மலேரியா ஒழிப்புத்துறைக்கு மட்டும் வரும் ஆண்டிற்கு ரூபாய் ஒரு கோடி ஒதுக்கியிருக்கிறோம்.

குப்பைகளை அகற்றுவதில், மாநகராட்சி பாரபட்சமாக நடந்து கொள்கிறது என்பதை ஏற்றுக் கொள்ள முடியாது. காரணம் இந்தியாவிலேயே முதல் முறையாக ஒரு தனியார் நிறுவனத்தை நியமித்து மிகக் குறைந்த செலவில் குப்பை அகற்றும் பணி நடைபெறுகிறது. ஓனிக்ஸ் நிறுவனம் ரூபாய் முப்பத்தெட்டு கோடியை சுயமாக முதலீடு செய்து, நவீன லாரிகள், குப்பைத் தொட்டிகள், மென்ரக வாகனங்கள் என தேவையான அடிப்படை வசதிகளை ஏற்படுத்திக் கொண்டு செயல்படுகிறார்கள். கடந்த இரண்டு ஆண்டுகளுக்கு முன்புவரை நாளொன்றுக்கு ஆயிரத்துத் தொள்ளாயிரம் டன் குப்பை அகற்றிய நிலைமாறி இன்று மூவாயிரத்து நூறு டன் எடுத்து வருகிறோம்.

சாலைகளைப் பொறுத்தவரை கடந்த நான்கு நிதியாண்டுகளில் நூற்று இருபத்து ஏழு கோடி செலவில் ஆறாயிரத்து ஐந்நூற்றி எண்பத்து மூன்று உட்புறச் சாலைகளும், ரூபாய் நாற்பத்து ஒன்பது கோடி செலவில் ஒன்பதாயிரத்து நாற்பத்தி மூன்று பேருந்து சாலைகளும் செப்பனிடப்பட்டுள்ளன. இது தவிர மேம்பாட்டுப் பணிகளுக்காக வெட்டப்படும் சாலைகளைச் சீரமைக்க ரூபாய் எழுபத்து ஐந்து கோடி ஒதுக்கப்பட்டு டெண்டர் விடும் பணி துவங்கிவிட்டது.

பெருகிவரும் போக்குவரத்து நெரிசலை கருத்தில் கொண்டு நூற்றுப் பதினைந்து கோடி ரூபாய் மதிப்பீட்டில் திட்டமிடப்பட்ட பத்து மேம்பாலங்களில், ஏழு பாலங்கள் திட்டமிட்ட காலத்திற்கு முன்பே திறக்கப்பட்டுவிட்டன. திட்ட மதிப்பீட்டுத் தொகையைவிட குறைவான செலவில் இந்தப் பாலங்கள் கட்டி முடிக்கப்பட்டுள்ளன. பெரம்பூர் பகுதியில் இளகிய மண் வாகு காரணமாக அந்த மேம்பாலம் தாமதப்பட்டது. பணிகள் முடுக்கிவிடப்பட்டுள்ளன.

தெருவிளக்குகளில் சென்னை மாநகராட்சி ஒரு முன் மாதிரி

## "தொகிஞ்சம்"

என்றே சொல்ல வேண்டும். மாநகராட்சிப் பகுதிகளில் கடந்த 1996-ல் இருந்த தெருவிளக்குகளின் எண்ணிக்கை எண்பத்தாறாயிரத்து எழுநூற்றி நாற்பது. தற்போது இது ஒரு லட்சத்து நாலாயிரம் விளக்குகளாக உயர்த்தப்பட்டுள்ளதோடு, குழல் விளக்குகளாக இருந்த அனைத்து தெரு விளக்குகளும் சோடியம் ஆவி விளக்குகளாக மாற்றப்பட்டுள்ளது. இதற்குச் செலவிடப்பட்டத் தொகை மட்டும் ரூபாய் முப்பத்து இரண்டு கோடி. பழுதுபடும் தெரு விளக்குகளைப் போர்க்கால அடிப்படையில், சரி செய்ய இருநூற்றி எண்பது மின் பணியாளர்களை புதிதாகப் பணியில் அமர்த்தியுள்ளோம்.



புதிய வரி வருமானத்திற்கு கேபிள் டீவி நடத்துபவர்களிடமிருந்து உள்ளாட்சி அமைப்புகள் வரி வசூலித்துக்

# பொறுங்க!''

கொள்ளலாம் என்று தமிழக அரசு அனுமதியைப் பயன்படுத்திக் கொள்ளவும் சென்னை மாநகராட்சி முயற்சி மேற்கொண்டு வருகிறது.

- இவை தவிர எழில்மிகு சென்னை இலட்சியத்திற்காகக் கடந்த நான்கு ஆண்டுகளில் பல பணிகள் செய்யப்பட்டுள்ளதைப் பொது மக்கள் பாராட்டுகிறார்கள்.

ரூபாய் ஐம்பத்து எட்டு கோடியில் நூற்றி ஏழு கிலோ மீட்டர் வடிகால் வழிகள் தூர் வாரி முடிக்கப்படும் தருவாயில் உள்ளன.

தரமான கல்விக்காக அதிக கவனம் எடுத்துக் கொண்டு செயல்பட்டிருக்கிறோம்.

புதிய கணினி முறை கல்வித் திட்டம் செயல்படுத்தப்பட்டு வருகிறது. மாநகராட்சி பள்ளிகளுக்கு இன்டர்நெட் பாடத் திட்டம் செயல்படுத்தப்பட இருக்கிறது.

மாநகரவாசிகளின் ஆரோக்கியமான வாழ்வு கருதி ஐந்நூறு சிறப்பு மருத்துவ முகாம்கள் நடத்தப்பட்டு இருபத்து இரண்டாயிரம் பேருக்குப் பால்வினை நோய் இருப்பது கண்டறியப்பட்டு, இலவச சிகிச்சை அளிக்கப்பட்டது.

பசுமையான அழகான சென்னையை உருவாக்குவதற்கு வரும் நிதியாண்டிற்கு மட்டும் ரூபாய் இரண்டு கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இதைக் கொண்டு அழகிய மின் விளக்குகள், நீரூற்றுகள், இருக்கைகள், நடைபாதைகள் அமைக்க உள்ளோம். ஒரு லட்சத்து, முப்பதாயிரம் மரக்கன்றுகளை வனத்துறை மூலம் நடவு செய்ய உள்ளோம். கடந்த நான்கு ஆண்டுகளில் மட்டும் மூன்று கோடி செலவில் மாநகரப் பூங்காக்கள் மேம்படுத்தப்பட்டுள்ளன.

மாமன்றம் செயல்படத் தொடங்கிய 1996-97 நிதியாண்டில் மூலதனப்பணிகளின் செலவு ரூபாய் எழுபத்து மூனு கோடியாக இருந்தது இது நடப்பு நிதியாண்டில் நூற்று ஐம்பத்து மூன்று கோடியாக உயர்ந்திருக்கிறது.

இதைக் கொண்டே மாநகராட்சியின் தீவிர செயல்பாடுகளை அளவிட முடியும்.

எழில்மிகு சென்னையை உருவாக்குவது ஆட்சியர்கள், அதிகாரிகள் கையில் மட்டுமல்ல. அதற்கான ஒத்துழைப்பு பொதுமக்களிடமிருந்து பெற வேண்டியிருக்கிறது. இந்த மூன்று தரப்பினரும் உறுதியோடு இருந்தால் பல ஆண்டுகள், தேவையில்லை; சில ஆண்டுகளில் எழில்மிகு சென்னையை எட்டிவிடலாம்.

— தாஸ்

படம் : வெங்கடேஷ்

களவும் கற்று மற : பிரபுதேவா-ரோஜா



பெய்யாத மழையிலிருந்தும்
காயாத வெயிலிலிருந்தும்
காப்பாற்ற கரம் நீட்டும் காரிகையே!
குடை வள்ளல் அன்றோ நீ!

ரிஷி: மீனா-சரத்குமார்



சிரிக்காதே! சேராத ஸ்வரங்களல்ல;
ஜோரான புது ராகம் உன்தன்
பெயரில்
அட எப்படித் தெரிந்தது...
என் சொந்த ஊர்
குன்னக்குடியென்று!

லூட்டி: சத்யராஜ் - மும்தாஜ்



நீர்மோர், பானகம்
நன்னாரி, இளநீர்
எல்லாமே மறக்கலாச்சு;
அழகி நீ எதிரே
ஆயுளுக்கு
நின்றாலும்
குளிர்பான மோகம்
மட்டும்
தொடரலாச்சு!

லிட்டில் ஜான் : பென்ட்லி-ஜோதிகா

கட்டிவராது!
கண்டம் கடந்துவந்து
தமிழ்ப் பெண் தேடினால்
குட்டை பனியனுடன்
குறுக்கே வருகிறாள்!

– கோலிவுட் கவி

தாடி வளர்ப்பவனெல்லாம்
தேவதாஸல்ல...
ஓடி உழைத்த காசில்
ஒரு துளி மிச்சம்
ஷேவிங் செய்யாதிருந்தால்!



கண்டேன் சீதையை :
விக்ரம்-சௌந்தர்யா

## முதியோர் ஓய்வு இல்லம்



தெய்வீகமான சூழ்நிலை, அன்பான உபசரிப்பு, தரமான உணவு மருத்துவ வசதியுடன் கூடிய பிராமணர்களுக்கான முதியோர் இல்லத்திற்கு ஓய்வூதியம் பெறுபவர்கள், வெளிநாட்டு இந்தியர்களின் பெற்றோர்கள், விதவைகள் வரவேற்கப் படுகிறார்கள். தனி ரூம்கள் தேவைப் படுவோருக்கு வசதிகள் உண்டு. டொனேஷன் தேவையில்லை.

வைதீகமான முறையில் நடத்தப்படும் இந்த இல்லத்தில் 12 பேர்களுக்கு மட்டுமே இட வசதி உள்ளது. வேலைக்குச் செல்லும் பிராமண பெண்களும் வரவேற்கப் படுகிறார்கள். மேலும் விவரங்களுக்கு தயவு செய்து நேரில் தொடர்பு கொள்ளவும்.

திருமதி. சந்திரா
ஸ்ரீ அஹோபிலம்
5, 25வது குறுக்குத் தெரு,
(ராஜ ராஜேஸ்வரி கோவில் அருகில்)
தில்லை கங்கா நகர், நங்கநல்லூர்,
சென்னை - 61. செல்போன்: 98410 28245

ஓம்

**LUCKY GANESHA / அதிர்ஷ்ட பிள்ளையார்**



எல்லா பிள்ளையாரும் அதிர்ஷ்ட பிள்ளையார்தான். 'லக்கி கணேசா' என்று அழைக்கப்படும் இந்த அதிர்ஷ்ட பிள்ளையார் கையினால் 'காஸ்டிங் கிளாஸ்' என்ற உயர்தர கண்ணாடியினால் வடிவமைக்கப்பட்டது. இந்த பிள்ளையார் கைக்கு வந்த பதினைந்து நாட்களில் 'வாழ்க்கையில் நிறைந்த அதிர்ஷ்டத்தையும், குடும்பத்தில் சந்தோஷத்தையும்' கொடுக்கிறது.

இதன் சிறப்பம்சம், முதன் முதலில் நாங்கள் வடிவமைத்த பிள்ளையார் காஞ்சிமடத்தின் மஹா மஹா பெரியவாளின் பரிபூரண ஆசி பெற்றது. ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் அதிர்ஷ்ட பிள்ளையாருக்காக விசேஷ பூஜை நடத்தப்படுகிறது.

எனக்கு கடந்த முப்பது ஆண்டுகளாக திரு. சந்தோஷ் சிவராமை நன்கு அறிவேன். கடந்த ஐந்து ஆண்டுகளாக இந்த அதிர்ஷ்ட பிள்ளையார் என்று அழைக்கப்படும் லக்கி கணேசாவை படைக்கும் கொடுத்துவருகிறார். நம்மது செய்யும் அதிர்ஷ்ட பிள்ளையார் மேலும் மேலும் பிரபலம் அடைந்து வருவது கண்டு எனக்கு மனம் நிறைந்த மகிழ்ச்சியாய் உள்ளது. இந்த ஆன்மீக பணியில் ஈடுபட்டுள்ள திரு. சந்தோஷ் சிவராமிற்கு என் வாழ்த்துக்கள். – மேஜர். எம். கேளுண்ணி (Retd)

(திரைப்பட நடிகை, சமூக சேவகி ரேவதியின் தந்தை)

**SANTACLAUS 88**

No. 10, 1st Floor, Alsa Mall, (Opp. Atlantic Hotel) Montieth Road, Egmore, Chennai - 600 008, Tamil Nadu.

- Our prices for LUCKY GANESHA Small (1.5") - Rs.30/-, Medium (2") - Rs.60/-, Big (3") - Rs.90/- Courier Charges + Rs.15/- for Tamil Nadu and Rs. 30/- for other states.
- For your requirements you could send the Money Order or Draft favouring "SANTACLAUS 88".
- For exclusive franchise in your locality, contact us for more details.

Please write your address correctly

குறிப்பு : எங்களுக்கு சென்னையில் வேறு கிளைகள் கிடையாது

# மற்றவைகளை விட தரம் மிக்கது வாங்குவோர் நிராலியே வாங்குவர்.



- கண்ணாடி போன்ற ஃபினிஷ்
- உறுதியான சேலம் ஸ்டீல்
- ஒப்பற்ற சோக்-ஸ்டாப்
- எடுக்கக்கூடிய கழிவுக் கூடை
- பாதுகாப்புக்காக பிளாஸ்டிகார்டு
- 22 மாடல்கள் 59 சைஸ்களில்

இந்தியாவின் நம்பர்.1 சிங்க்

**NIRALI**

STAINLESS STEEL KITCHEN SINKS

Mfgrs: JYOTI (I) METAL INDUSTRIES P. LTD.,
P.O. Box No: 9136, Mumbai -400025. Fax: 022-4362543

**Distributors: M/s. Sagar Metals Corp.**, Chennai. Tel: 044-5353871/4165 • **M/s. Goodlink**, Madurai. Tel: 0452-604440/624496 • **M/s. Shri Raja Traders**, Pondicherry. Tel: 0413-252681/254799




# பத்தாவது புத்தகம் பழைய காசுபத்தி!

சக்கரம் தயவுல இந்த பொஸ்தக வெளியீடு பங்ஷன் எல்லாம் செம போருன்னு நல்லாவே தெரிஞ்சுகினேன். அதனாலே அப்படியான விழாவுக்கு அவர் போனா திரும்பி வர்ற வரைக்கும் ஆட்டோ பின் சீட்ல ஒரு அலாதி தூக்கம் போடுறது வழக்கம். இந்த தபா தினமலர் ஆசிரியர் இரா. கிருஷ்ணமூர்த்தி எழுதின கிரேக்க நாணயங்கள் பத்தின ஆய்வு நூலை, முதல்வர் வெளியிடுறாருன்னு சொன்னப்போ ஒரு ஆர்வம். கடைசி வர்சையிலே காலை மடக்கி குந்திகினேன். நூலைப்பத்தி எல்லாரும் பேசின பிறகுதான் நம்ம கிருஷ்ணமூர்த்தி எத்தினி வருஷமா இந்த பழைய காசுங்களைச் சேர்க்க உழைச்சிருக்காருன்னு புரிஞ்சு நிமிந்து உக்காந்தேன். இதுக்கு முன்னாடி இதே டைப்புல ஒம்போது பொஸ்தகம் எழுதி இருக்காருன்னு சொன்னதும் ஆர்வம் இன்னும் அதிகமாயிபூடுச்சிது. பத்தாவதா, இப்போ வெளியிட்ட பொஸ்தகம் 'Non-Roman Ancient Foreign Coins from Karur in India'. அதாவது இத்தனை காலமும் சேரர்களின் தலைநகரம் திருவஞ்சிக்களம்ன்னு வரலாற்று ஆசிரியருங்க சொன்னதை தூள் தூளா உடச்சிப் போட்டுடுச்சி இந்தப் பொஸ்தகம். கரூர்தான் சேரர்களின் உண்மையான தலைநகரமுன்னு சொல்றதோட, ரோமானியர்களுக்கு முன்னாலயே கிரேக்கர்கள் தமிழகத்தோடு வணிகத் தொடர்பு வெச்சிருந்துருக்காங்கன்னும் சொல்றது.

விழா முடிஞ்சதும் சக்கரத்துக்கிட்டே ஒரு சந்தேகம்ன்னு ஒத்தை விரலை காட்டுனேன். அதாவது இத்தனி நல்ல பொஸ்தகத்தை ஏன் இங்க்லிபீசுலே எழுதியிருக்காருன்னு கேட்டேன். தமிழ்நாட்டுப் பெருமையை உலக வாசகர்கள் தெரிஞ்சுகனும்ன்னா பொஸ்தகம் தமிழ்லே இருந்தா முடியுமானு சொன்னதும்தான் நம்ம மரமண்டைக்குப் புரிஞ்சது.

சீக்கிரமா சென்ட்ரலாண்ட இருக்கிற கவருமெண்ட் ஆஸ்பத்திரிக்கு வெரட்டுன்னு சக்கரம் பதறினப்போ ஆடிப் போயிட்டேன். நேத்துவரைக்கும் நல்லாத்தானே இருந்துதுன்னு பயந்துகிட்டே காத்து கணக்கா போய்ச் சேர்ந்தா முதல்வரு கலந்துக்கிற பங்ஷனு.

இந்த ஜீ எச்சிலே நரம்புத்துறை மருத்துவம் அதாம்ப்பா... நியூராலஜி இன்ஸ்டிடியூட் தொடங்கி அம்பது வருஷம் ஓடிப் போயிருச்சாம். அதனால பொன் விழா. அஞ்சு படுக்கையோட அண்ணா ஆட்சி காலத்துலே தொடங்குன துறை, இன்னிக்கி ஏகப்பட்ட வசதியோட இருக்கு. ஆனா ஏழைங்களுக்கு ஒழுங்கா இங்க வைத்தியம் பாக்குறதில்லே. டாக்டருங்க ஏமாத்திடறாங்கோன்னு" ஒரு பெரியவரு முதல்வர் முன்னாலயே பகிரங்கமா ஒரு குண்டைத் தூக்கிப் போட்டாரு. அவரு யாருன்னு பார்த்தா இந்த நியூராலஜி துறை தொடங்கினப்போ அதுக்குத் தலைவராக இருந்த இன்னும்



## நகர்வலம்

# இன் நகரம்



மூன்று கை அகட்டிய அகலம்
நாலு கை நீட்டின நீளம்
குடிசை.

சில்லென்றிருக்கும்
சாணி மெழுகிய வாசலில்
படுக்கச் சொல்வாள் அம்மா.

அடித்துக் கொல்லும்
பேய்கள் அதிகம் -
சொல்வதுண்டு கிராமத்தில்

திலகா தூக்கில் செத்த
வேப்பமரக் காற்று
சுவாசம் சீராக்கிப் போகும்.

முன்னையதைவிட
நகரச் சிறுவீடு
சிமெண்ட் தரை இப்போது

உள்ளேயே படுக்கச் சொல்கிறாள்
கதவுகளோடு வரும்
திருடர்கள் பயம்.

- த. தமிழ்ச் சிமிழன்

கௌரவத் தலைவரா இருக்குற டாக்டர ராமமூர்த்தி! எமருசென்சி காலத்துல இங்கே சிகிச்சைக்கு வரும் திமுக மிசா கைதிங் களைப் பார்த்துப் பயந்து சிகிச்சை கொடுக் காமல் எல்லா டாக்டர்களும் ஓடுவாங் களாம். இல்லாக்காட்டி வேலை போயிடு மாம். ராமமூர்த்தி மட்டும்தான் தைரியமா எங்களுக்குச் சிகிச்சை கொடுத்தாருன்னு நம்ம நல்வாழ்வு அமைச்சரு வீராசாமி சொன்னதும்... பெரியவரு கண் கலங்கிட் டாரு. அரசாங்க ஆஸ்பத்திரிகள்லே நிறைய டாக்டருங்க வேலை செய்யுறதே இல் லைன்னு மினிஸ்டரே வாக்குமூலம் கொடுத் ததுதான் பெரிய வேதனை. அப்பாலே பூங்கா நகரு எம்.எல்.ஏ. டி.ராஜேந்தரு பேசும்போது ஏழைகளுக்கு எட்டாத உயரத் துல நரம்பு சிகிச்சை இருக்கக்கூடாது. அதுக் குத்தான் இந்தப் பிரிவு ஆரம்பிச்சது. எல் லோரும் இந்த இன்ஸ்ட்டிடியூட்டைப் பயன்படுத்திக்கலாம்னு சொன்னாரு. முதல் வரும் இன்னும் என்ன வசதி தேவையோ அதை எல்லாம் செஞ்சி தாரேன்னு சொன்னதும் டாக்டரு ராமமூர்த்திக்கு ரொம்ப சந்தோஷம்.

அப்பாலே அடிக்கடி மயக்க பிஸ்கட்டு கொடுத்து சென்ட்ரல் வந்து இறங்குற பயணி களை டாபாய்க்கிற கில்லாடி திருடனுங்க, வெளிநாட்டு, உள்நாட்டு தீவிரவாதி பயலுக எல்லாரையும் புடிக்கிறதுக்கு நம்ம ரயில்வே பாதுகாப்புத் துறை பல ரகசிய சிஐடி கேமராக்களை சென்ட்ரல் ஸ்டேஷன்ல பொருத்தியிருக்கு. அதுகளைத் தொறந்து வெச்சவரு மினிஸ்டரு ஆற்காடு வீராசாமி. ரயிலு துறை ஐஜி திலகவதி, டிஜிபி சர் மான்னு நிறைய போலீசு அதிகாரிங்க கலந்து கிட்டாங்க. ஆனா போன வருஷமே யாருக்கும் சொல்லாம ரகசிய கேமராவைப் பொருத்தி வெள்ளோட்டம் வுட்டுப் பார்த் தோம். அதுலயே பல திருடனுங்க மாட்டிக் கிட்டானுங்கன்னு திலகவதி சொன்னப்போ, அவங்களைப் பார்த்துப் பாராட்டணும்ன்னு தோணுச்சி... ஆனா அவங்க போலீஸ் உடுப்புலே இருந்ததுனால இஸ்கூலு பையன் கணக்கா பயந்துபோயி சக்கரத்தை இட்டு கினு வந்துட்டேன்.

மீண்டும் சந்திக்கும்வரை,
மீட்டருக்கு மேல் கேட்காத
ஆட்டோ செல்வம்

ஓம் ஸ்ரீ மஹா கணபதயே நம! ஹரி : ஓம் நற்பவி ஓம் ஸ்ரீ குருப்யோ நம.



# ஸ்ரீ ஆதிசங்கரா பௌண்டேஷன்ஸ்

# SRI ADHI SHANKARA FOUNDATIONS




Off : 53, 55, Navratina Jothidar Lion Dr. Surana's Bldg., Ground Floor,
C.N.K. Road, Triplicane, Chennai - 5

S.SUNDARESUN, ✆ (O) : 8593616, ✆ (R) 4480501

E-mail : sitasundaresan@radiffmail:com


## ஸ்ரீ வைகுண்ட ஏகாதசி - ஆருத்ரா தர்ஸன பௌர்ணமி - ஸ்ரீ சிவ - ஹரி தர்ஸன ஸ்பெஷல்

**2-1-2001ம் தேதி முதல் 13-1-2001ம் தேதி வரை**

## பண்டரிபுரம் மற்றும் 6 ஜோதிர்லிங்கங்கள் க்ஷேத்ர தர்ஸனம்

பூனா அஷ்டகணபதி, வஜ்ரேஸ்வரி, பீமா சங்கரம், த்ரயம்பகேஷ்வரம், பரல்யவைத்ய நாதம், நாசிக், பஞ்சவடி, ஷீர்டி, உஜ்ஜயின் (மஹா காளி) மஹா காளேஸ்வர், ஓம் காரேஸ்வர்

**12 நாட்கள் யாத்திரை - நபருக்கு கட்டணம் ரூ.4,870/- மட்டும்**
(2ஆம் வகுப்பு இரயில் கட்டணம், சைவ உணவு, 2 x 2 சூப்பர் டீலக்ஸ்பஸ் யாத்திரை, தூய காற்றோட்ட வசதியுள்ள தங்கும் அறைகள் உட்பட)

**பதிவு செய்ய கடைசி நாள் : 20-11.2000**

## மஹாசிவராத்ரி - சிவ தர்ஸனம் மற்றும் சிரார்த்த யாத்திரை ஸ்பெஷல்

**அலஹாபாத் - காசி - கயா**

**14 நாள் டூர் - ரூ. 5,450/- மட்டும். உணவு, தங்குமிடம், யாத்திரை உட்பட**

ஒவ்வொரு குடும்பத்திலும் காலமான தங்கள் பெற்றோர் மற்றும் மூதாதையர்களுக்கு மஹாசிவராத்திரி/அமாவாசை காலத்தில் சிரார்த்தம் செய்து பெற்றோர், மூதாதையர்கள் நல்ல கதியடையவும், நம் சந்ததிகள் சௌக்யமாக சுபிக்ஷமாக வாழவும், நம் பாரத தேசத்தில் ரிஷிகளும், மஹான்களும், ஞானிகளும் வேத சாஸ்திர சம்பிரதாய முறையில் கூறியபடி வட இந்தியாவின் மிக சக்தி மற்றும் பிரசித்தி பெற்ற ஸ்தலங்களான ப்ரயாக் (அலஹாபாத்), வாரணாசி (காசி), கயா ஆகிய ஸ்தலங்களில் சென்று ஸ்வாமி தர்ஸனங்கள், சிரார்த்தம் மற்றும் தான தர்மங்கள் செய்யவும் 17.2.2001 சனிக்கிழமை சென்னையில் இருந்து ரயில் மூலம் புறப்பட்டு மேற்கண்ட புண்ணிய க்ஷேத்திரங்களை தரிசித்து 2.3.2001 வெள்ளிக்கிழமை சென்னை அடைகிறோம். இந்த அரிய வாய்ப்பை பயன்படுத்திக் கொள்ளும்படி அன்புடன் அழைக்கிறோம்.

*அலஹபாத், அயோத்யா - முக்திநாத் - பசுபதிநாத் (நேபாள்) - வாரணாசி சென்னை ஏப்ரல் மாதம் அழைத்து செல்ல உள்ளோம்.*

**பதிவு செய்ய கடைசி நாள்: 25.12.2000**

**OUR SPECIALITY :**
Can make excellent arrangements for any type of tours in India and Nepal.

# நடக்குமென்பார் நடக்கும்!

## அக்னிசர்மா பக்கம்

## நவம்பர் 8 முதல் 14 வரை

**மேஷம் :** உங்களுக்கு ஜாலிதாங்க. உங்க ஆசைங்கள்ளாம் நிறைவேறி, மதிப்பும் மவுசும் உயரும். அதுவும் பொறியியல், சட்டம், காவல், இராணுவம், கலைத்துறை முதலானதுல இருந்தீங்கன்னா டாப் டக்கர்தான். புதுசா வீடு, நிலம், ஆடை அணிகலன்னு சேரும். கணவன் - மனைவி உறவு ஸ்மூத்தாயிருக்கும். டிம்பக்டு பயணம்கூட ஓகே! வேற மொழிக்காரங்க ஹெல்ப் பண்ணுவாங்களே! ஆனா அப்பா, அம்மா உடம்பு ஜாக்ரதை. அம்மா வழி உறவுக்காரங்க சில்மிஷம் பண்ணலாம். கொஞ்சம் அதிக உழைப்பு, வீண் அலைச்சல் இருக்கலாம். தொந்தி கணபதியை வழி படுங்க. சிந்தை தெளிவா இருக்கும்.

**ரிஷபம் :** சுமாரான வாரந்தாங்க. ஆனா உங்க புத்திசாலித்தனத்தால பிரச்னைகளை அசால்டா சமாளிச்சுடுவீங்க. கம்ப்யூட்டர், அரசியல், மருத்துவம், விஞ்ஞானம், பத்திரிகை தொழில் செய்யறவங்க உழைப்புக் கேத்த ஊதியம் கிடைக்கும். கொடுக்கல் வாங்கல், ஸ்பெகுலேஷன் எல்லாம் வாணாங்க. புது முயற்சி, வெளியூர்லேர்ந்து வார நியூஸ் எல்லாம் கவுத்துக்கும். வாயை யும் (தெரியாதவங்ககிட்ட பேசாதீங்க) வயித்தையும் (ஃபுட் பாய்ஸனிங் ஆகலாம்) கட்டிப் போடுங்க. குடும்பம், குழந்தை குட்டிங்க செலவு வைப்பாங்க. பீஸ் ஆஃப் மைண்டுக்கு, முருகனைப் பிடிங்க.

**மிதுனம் :** கிரகங்க வக்ரமா இருக்குதுங்கோ. ஜாக்ரதையாவே இருங்க. செலவுகள் அதிகங்க. சுபகாரியத்துக்கும் இருக்கும். உல்டாவாவும் இருக்கும். இயந்திரம், மின்சாரம், நெருப்பு முதலானதோட வேலை செய்யிறவங்க உஷார். கலைத் துறை, சினிமா, பத்திரிகை தொழில் செய்யிறவங்களுக்கும் தலைவலிதான். மனை, நிலம், வீடு, வாகனம் எல்லாம் பேஜார் படுத்துங்களே. அனாவசியமா யார்கிட்டயும் வாயை வுடாதீங்க. நண்பர்களே எதிராளியாயிடற சான்ஸ் உண்டு. உடம்பையும் ஜாக்ரதையாப் பாத்துக்கங்க. பயணமெல்லாம் வாணாம். பக்த ஆஞ்சநேயர்தாங்க உங்களுக்கு இப்ப ஒரே ஃபிரெண்டு.

**கடகம் :** யாரையாவது 'லவ்'வு 'கிவ்'வு பண்ணிட்டிருக்கீங்களா? இல்லன்னாலும் இப்ப ட்ரை பண்ணுங்க. 'ஓஹோ'ன்னு வெற்றி குவியற நேரம் இது. காதலுக்கு மட்டும் 'ஜே' இல்ல. கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ், கணிதம், எழுத்து, சினிமா, விளையாட்டு இப்படி எந்தத் துறையில இருந்தாலும் உங்களுக்கு எல்லாரும் 'ஜே' போடுவாங்க. பொம்பிளைங்க நினைச்சா காரியத்தை நிறைவேத்திக்குவாங்க (இதென்ன புதுசான்றீங்களா?) வீடு, வாகனம், ஆடை, ஆபரணம் எல்லாமே சேரும். அப்புறம் மனசுல உற்சாகத்துக்குக் கேப்பானேன்? இந்த குஷியில அப்பா அம்மாவை மறந்துடாதீங்க. அனாவசியத்துக்கு அலையாதீங்க. சத்ய சாய்பாபா உங்களுக்கு ஸப்போர்ட்டா இருக்காருங்க.

**சிம்மம் :** உங்க அறிவாற்றலும் சாமர்த்தியமும் வெளிப்படப் போகுதுங்க. வெளிநாட்டுப் பயணங்கள், தொடர்புகள் ஆதாயமாயிருக்கும். நீங்க அரசியல்வாதின்னா, உங்க கொள்கைக்கு (அட அப்படீன்னு ஒண்ணு வச்சிருந்தீங்கன்னா..) எக்கச்சக்க வரவேற்பிருக்கும். எல்லாத் துறையிலயும் எல்லாருக்கும் ஓரளவு வளர்ச்சி இருக்கும். ஸெண்ட், காஸ்மெடிக்ஸ் வகையில லாபம் கிடைக்குமாமே? (பொட்டிக் தரக் கப்போறீங்களா பார்ட்னர்ஷிப் (வீட்லயும் வெளிலயும்) பயன் தரும். ஆனா நாக்கைக் கட்டிப் போடுங்க. அதைப் பல்லுமேல போட்டு கன்னா பின்னான்னு பேசினா பல்லு பேந்துப் புடுங்க... அதுல மட்டும் ஜாக்ரதை... ஹக்காங்.. சாந்தமா எப்பிடி இருக்கணும்னு ஷிரிடி சாயிபாபாவைக் கேளுங்களேன்.

**கன்னி :** அட! மூஞ்சில என்னங்க இப்

பிடி ஐஸ்வர்ய (ராய்) டாலடிக்குது? இந்த வசிகரத்துனாலயே எல்லாரையும் வளைச்சுப் போட்டு வளர்ச்சி அடைஞ்சுட மாட்டீங்களா? (மிஸ்) வர்ல்டு லெவல்ல எல்லாம் அனுகூலமாயிருக்குங்க. அதுக்குனு கண்ணை மூடிக்கிட்டு கனா காணாதீங்க. விழிப்புணர்ச்சி அவசியம். யாரான டாக்டரை ஃபிரெண்டு பிடிக்கறது உபயோகமாயிருக்கும். உஷ்ணம், பிபின்னு ஏறினா, ஆக்ஸிடண்ட் ஆனா, குழந்தைங்களுக்கு காய்ச்சல்னா கைகுடுக்குமே? (இல்லனா கை கடிக்குமே?) எது செஞ்சாலும் ராகவேந்தரரைக் கேட்டுக்கிட்டு அவர் பர்மிஷன் குடுத்தா செய்யுங்க.

**துலாம் :** முகராசியால மகராசியா வாழற காலம் இது. பேச்சும் நைச்சியமா இருக்கும். அதுனால சுபகாரியங்கள் ஈஸியா நடக்கும். லௌகீகத்தை விட்டுக் கொஞ்சம் ஆன்மீக சைடுல எட்டிப் பார்த்தாலும் உங்களுக்கு அமோக வரவேற்பு இருக்கும். ஆனா மனசுக்குள்ள எப்பவும் 'திருடர்கள் ஜாக்ரதை' போர்டு மாட்டிக்குங்க. கொஞ்சம் அசந்து மறந்தா ஆளையே அபேஸ் பண்ணிடுவாங்க. அரசியல்வாதிங்களுக்குக் கட்சிக்காரங்க, ஆர்ட்னரியாளுங்களுக்கு அண்ணன் தம்பிங்களால பிரச்னைகள் வரும். அமைதி வேணும்னு வேங்கடாஜலபதியை வேண்டிக் குங்க.

**விருச்சிகம் :** எடுத்த காரியம் யாவினும், வெற்றி, எங்கும் வெற்றி எதிலும் வெற்றின்னு நீங்க பாடற நேரமிது. நீங்க சினிஸ்டார்னா, புதுசாக்கூட படம் ஒப்பந்தமாகலாம். ஆனா புதுப் பார்ட்டிங்க கிட்ட ஜாக்ரதையாயிருங்க. டூரெல்லாம் வாணாம். கவர்மெண்ட் விஷயங்கள்ல 'நெவர் மைண்ட்'டா இருக்காதீங்க. அப்பா தப்பாம செலவு வைப்பார். அதுனால என்ன? கருமாரி அம்மன் அருள் மாரி பெய்ய மாட்டாளா என்ன?

**தனுசு :** கஷ்டங்க வந்தாலும் உங்க புத்திசாலித்தனத்தால அதை எல்லாம் சமாளிச்சுக்குவீங்க. நல்ல செழிப்பானப் பாதை புலப்படும். அரசியல்வாதிங்களுக்கு மக்கள் மத்தியில அந்தஸ்த்து உயரப்போகுது. கொடுக்கல் வாங்கல், வீடு, மனைவி, மக்கள் எல்லாமே ஓகேதான்! ஆனா கொஞ்சம் வீண் அலைச்சல் இருக்கும். புது ஃபிரெண்ட்ஷிப் வாணாம். வாரத்தின் முன் பகுதியில பிரச்னைகள்னாலும், பின் பகுதி நல்லாத்தான் இருக்குது. அதான் பாலாதிரிபுர சுந்தரி அம்மன் உங்களைப் பாத்துக்கிட்டே இருக்காளே.



கடக ராசிக்காரரான டி.வி. தொகுப்பாளர் மம்தாவுக்கு நகைகள் வாங்க சான்ஸ் இருக்கிறதாம்.

**மகரம் :** ஒரு உத்வேகத்தோட செயல் படப் போறீங்க நீங்க. எந்தத் துறையில இருந்தாலும் உங்களுக்கு சிரான வளர்ச்சி இருக்கும். கைப் பொருள் பத்திரம். பிள்ளைங்க செலவு வைப்பாங்க. எதிலும் நிதானமா நடந்துக்குங்க. சிரிச்சு சிரிச்சு சக்கரையாப் பேசுங்க. காஞ்சி காமாட்சி அம்மன் உங்களுக்கு கஞ்சி ஊத்துவா.

**கும்பம் :** ஒரு துணிச்சலோட நீங்க எதிலும் வெற்றி நடை போடுவீங்க. அதுக்காக ஓவராத் துணிஞ்சுடாதீங்க. வியாபாரிகள் அகலக் கால வைக்ககூடாது. மாணவர்களும் ஒழுங்காப் படிக்கல்லீன்னா, தேர்வுல ஊத்திக்க வேண்டியதுதான். உ.பி.சக்களால் (உடன் பிறந்தவங்க) வழக்கம்போல சங்கடங்கள்தான். இயந்திரப் பணியாளர்கள் ஜாக்கிரதை.. விபத்துக்கள் ஏற்படலாம். அன்னை அபிராமியை அழைத்தால், துன்பங்களை குறைச்சுடுவாங்க.

**மீனம் :** ஆசிரியர்கள், சட்டவல்லுனர்கள், சினிமாக்காரர்கள் நிலை உயரப் போகுது. புனிதப் பணிகள் பெருகும். பெண்கள் வீட்டுக்குத் தேவையானவற்றை எல்லாம் வாங்கிக் குவிப்பாங்க. கஞ்சப் பிரபுக்கள் கூட உங்களை விருந்துக்கு அழைப்பாங்க. வாரப் பின் பகுதி முக்கியமான காரியங்கள் நிறைவேறும். பயணத்தைத் தவிர்க்க முடியல்லைனா, ரொம்ப எச்சரிக்கையா ட்ராவல் பண்ணுங்க. நிதானமா பேசிப் பழகுங்க. ஆயுதங்களை ஜாக்கிரதையா உபயோகியுங்க. மாதா புவனேசுவரி உங்க மனசுலயே இருக்கட்டும்.

**தஞ்சை நகரில்**
**சில ஹனுமான் கோவில்கள்**

**மூலஹனுமார் : வடக்கு வீதியும் மேல வீதியும் இணையுமிடத்தில் அமைந்த வரப்ரசாதியான ஹனுமான்.**

**நாலு கால் மண்டபத்தில் உள்ள ஹனுமான் - மூர்த்தி சிறியவராக இருந்தாலும் கீர்த்தி மிக்கவர். இசைப் பிரியர் ஆண்டுதோறும் அனைத்து முன்னணி இசைக் கலைஞர்களும் இங்கு வந்து பாடுகிறார்கள்.**

**ரயில்வே ஜங்ஷன் அருகில் இருப்பவர் ஸ்ரீ சஞ்ஜீவி ஆஞ்சநேயர். வியாபாரிகளும் மற்றும் உள்ள பக்தர்களும் நிறைந்து எப்போதும் ஜே ஜே என்ற கூட்டம்!**

சீதையைக் கண்டுபிடிக்க முடியாமல் மனம் தளர்ந்த சமயத்தில், அவர்களையே ஹனுமான் மனத்தில் இறுத்தி தியானம் செய்தார் என்று சொன்னேன். ஹனுமானின் மனம் அந்தக் கணத்திலே நேரே ராமனிடம் சென்றது. 'ஜகாம மனஸா நாமம்' என்கிறார் வால்மீகி. உடனேயே அவனுக்கு சம்பாதி சொன்னது நினைவுக்கு வர, அசோக வனத்தைச் சென்று அடைகிறான். அங்கே, சிம்சுபா விருக்ஷத்தின் கிளையிலே அமர்ந் திருக்கும் ஹனுமானின் உள்ளம், சீதையைக் கண்டதுமே மீண்டும் ராமனிடம் செல்கிறது.

அந்தக் கணத்தில் ராமனிடம் ஒரு பெரிய குறையையும் கண்டதாம் ஆஞ்சநேயனின் மனம். வால்மீகி சொல்கிறார் :

'இப்படிப்பட்ட உயர்ந்த லக்ஷணங்களை யுடைய, உத்தமமான பெண்மணியை மனைவியாக அடைந்த ராமனுக்கு அவளை விட்டுப் பிரிந்திருக்க எவ்வாறு முடிந்தது? எப்படி இந்த ராமன் உயிர் வாழ்கிறான்? அவன் நெஞ்சில் ஈரமில்லையா?' - இவ்வாறு எண்ணுகிறானாம் ஹனுமான்.

ஏற்கெனவே மண்டோதரியைப் பார்த்து அவள் சீதையோ என்று ஒரு கணம் எண்ணியவன், இப்போது சீதையைப் பார்த்ததும் உடனே அடையாளம் தெரிந்து கொண்டான். எந்த சந்தேகமும் அவனுக்கு எழவில்லை. இது எவ்வாறு சாத்தியமாயிற்று என்பதையும் வால்மீகி சொல்கிறார்.

அசோகவனத்தில் சீதை இருக்கிறாள். அவள் ஆபரணங் களெல்லாம் சேர்த்துக் கட்டி மரக்கிளையிலிருந்து தொங்கவிடப்பட்டிருந்தன வாம். கணவனைப் பிரிந்த சோகத்தில் ஆபரண அலங் காரங்களை வெறுத்து சோகமே உருவாக இருக்கிறாள் வைதேகி - இதைப் பார்க்கிறான் ஹனு மான். சீதையைக் குறித்து ராமன் கூறிய அடையாளங்களையும் ஞாபகப்படுத்திக் கொண்டு பார்க் கிறான்.

அது மட்டுமல்ல... ரிச்யமூகபர்வதத்தில் மூட்டையாகக் கட்டிப் போடப்பட்டிருந்த ஆபர ணங்களை ஹனுமான் ஏற் கெனவே பார்த்திருக்கிறான். அவையெல்லாம் ராவணனால் அபகரிக்கப்பட்டபோது அவள் அவிழ்த்துக் களைந்தவை. அந்த நகைகளுள் எதுவும் இப்போது அசோக வனத்திலிருக்கும் சீதா தேவியிடம் இல்லை என்பதையும் பார்க்கிறான். எனவே இவள் நிச்சயமாக சீதையாகத்தான் இருக்க வேண்டும் என்கிற தீர்மானத்துக்கு வருகிறான்.

சீதையைக் கண்டறிவதற்கான மனோசக் தியை ஸ்ரீராம தியானத்தின் மூலம்தான் பெறுகிறான் ஆஞ்சனேயன். ஆனால் அவளைப் பார்த்தபிறகு எத்தனை அறிவு பூர்வமாகவும் ஆராய்ந்து முடி வுக்கு வருகிறான்

ஸ்ரீராமபக்த ஹனுமான்

என்பதைக் கவனிக்க வேண்டும். ஒரு தூதனின் செயல்பாடு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதற்கு இலக்கணமாக அமைந்திருக்கிறது ஹனுமானின் சிந்தனையும் செயலும்.

மேற்கொண்டு அவன் சிந்தனை எவ்வாறு ஓடுகிறது என்பதைப் பாருங்கள்.

'என் பிரபுவும் லக்ஷ்மணனது குருவுமான ஸ்ரீ ராமனின் பத்னி சீதை இவ்வளவு துக்கத்தில் ஆழ்ந்திருக்கிறாளே! இவள் நிமித்தமாகத் தானே பலம் பொருந்தியவர்களான வாலி, கபந்தன், விராதன், கரன் முதலான பதினாலாயிரம் அரக்கர்களை ராமன் வீழ்த்தினான். இந்தச் சீதா தேவியின் கண்ணீரல்லவா சுக்ரீவனுக்கு அவனது செல்வத்தை மீட்டுக் கொடுத்தது! ராவணன் கடத்திச் சென்ற போது அவள் துயரத்துடன் அவிழ்த்துக் கட்டிப்போட்ட ஆபரணங்களின் மூட்டை சுக்ரீவன் கைகளுக்கு அகப்பட, அவற்றை அவன் ராமனிடம் காட்ட, அந்தத் தொடர்பு தானே வாலி வதத்துக்கும் சுக்ரீவனின் மீட்சிக்கும் காரணமாயிற்று...' என்றெல்லாம் எண்ணமிடுகிறான் ஹனுமான்.

அதோடு ஆஞ்சனேயன் மனத்திலே ஒரு பட்டிமண்டபமே நடக்கிறது. ஸ்ரீ ராமன் பெற்ற பாக்கியம் பெரிது. மூவுலகமும் ஆள்கின்ற மகிமையைப் பெற்றவன் அவன். ஆனால் அந்த பாக்கியத்தினைக் காட்டிலும் உயர்ந்த பாக்கியம் அவனுக்கு வாய்த்த வைதேகிதான் என்று மாறி மாறி ஹனுமான் மனத்தில் தோன்றியவண்ணமிருக்கிறது. கடைசியில் மூவுலகங்களின் மொத்த செல்வமும் இந்த சீதையின் பதினாறில் ஒரு பங்குக்குக்கூட ஈடாக முடியாது என்று தீர்மானிக்கிறான் ஹனுமான்.

கூடவே, 'ஐயோ! இப்பேர்ப்பட்ட மேன்மை பொருந்திய சீதா பிராட்டி, ராக்ஷஸிகளின் மத்தியிலே அகப்பட்டுத் துன்புறுகிறாளே..! சுகத்துக்கே உரியவளும் கஷ்டமென்றால் என்னவென்றே தெரியாமல் வளர்ந்தவளுமான இந்த சீதா பிராட்டி அல்லும் பகலும் ராமனை நினைத்து இப்படி உடல் மெலிந்து துக்கப்படுகிறாளே என்று ஹனுமானின் மனம் அல்லலுறுகிறது.

ஆஞ்சனேயனின் மனவேதனையானது எப்படியிருந்திருக்கும் என்பதை கவிகளின் கற்பனையில் சற்று பார்ப்போமா...?

கம்பன் சொல்கிறார் : 'அரிய மூலிகை ஒன்று, பாறைகளுக்கிடையே சிக்கித் தவிப்பதைப் போல் ஆஞ்சனேயனுக்குத் தென்பட்டாளாம் அரக்கிகளுக்கு மத்தியிலே அகப்பட்டுக்கொண்ட சீதை.



## அருள்வாக்கு

மனசில் எண்ணமே தோன்றாமல் இருந்தால்தான், எந்தக் காரியமும் இல்லாத பிரம்ம நிலையை அடையமுடியும். ஆனால் இந்த மனசால் ஒரு க்ஷணம்கூட எதையும் நினைக்காமல் இருக்க முடியவில்லையே! இதை எப்படி நிறுத்தப் பழக்குவது?

இந்தப் பழக்கத்துக்கு வழிதான் பக்தி. காரியமில்லாத பிரம்மத்தை நாமும் காரியமில்லாமலிருக்கிற நிலையில்தான் சகல பிரபஞ்சங்களையும் நடத்தி வைக்கிற -

அருணாசலக் கவிராயர், சீதையைக் கண்ட ஹனுமானை எவ்வாறு வர்ணிக்கிறார் பாருங்கள்.

*சீதையைக் கண்டானே அனுமான்*
*செடிமேல் நின்று*
*சேவையைக் கொண்டானே அனுமான்*
*ஆதவன் காணாத இலங்கைத்*
*தொடிவிலே*
*அரக்கியர் என்கிற புலிக்கூட்டம்*
*நடுவிலே (சீதையைக்...)*

புலிகளுக்கு நடுவிலே சிக்கிய மானைப் போல் தென்படுகிறாள் அரக்கிகளுக்கிடையிலே காணப்படும் சீதா தேவி!

எந்த மரத்தினடியில் சீதை அமர்ந்திருக்கிறாளோ, அதே மரத்தின் கிளைமீது இருந்தபடி கீழே நடப்பனவற்றை ஓசைப்படாமல் பார்க்கிறான் ஹனுமான். அவன் கண்ட காட்சி என்ன...?

ரம்பை, ஊர்வசியை நிகர்த்த மாதர்கள் புடை சூழ சீதையிருக்கும் இடம் வருகிறான் ராவணேசுவரன். அந்தப் பெண்களெல்லாம் அவனுக்குப் பணிவிடைகள் செய்தவாறே வருகிறார்கள். ராவணனைக் கண்டு சீதை நடுங்குகிறாள். - பெருஞ்சுழல் காற்றில் தத்தளிக்கும் வாழை மரத்தைப்போல் நடுங்குகிறாள் என்கிறார் வால்மீகி.

தகாத முறையிலே ஏதேதோ வேண்டுகோள் விடுக்கிறான் ராவணேசுவரன். அப்போது சீதா பிராட்டி ஒரு புல்லை எடுத்து ராவணனுக்கும் தனக்கும் இடையே இட்டு

அதாவது, காரியத்தைச் செய்கிற - ஈசுவரனாக இருக்கிறதல்லவா? இந்த ஈசுவரனையே சதா சிந்தனை பண்ணு - காரியத்தை எல்லாம் அதற்கே திருப்பு. உடம்பால் நமஸ்காரம், பூஜை, வாக்கால் ஸ்தோத்திரம், மனசால் தியானம் என்று சகல காரியங்களையும் ஈசுவரனிடம் செலுத்து. அவற்றை ஈசுவரன் அங்கீகரித்து, உன்னை பிரம்மஞானத்தில் கொண்டுபோய்ச் சேர்ப்பான். இப்படிப்பட்ட இடையறாத ஈசுவர சிந்தனைக்குத் தான் பக்தி என்று பெயர். இதில் அன்பு ரொம்பவும் முக்கியம். அன்போடு அவனை நினைப்பதே பக்தி.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

பலவிதமான நல்லுரைகளைப் பேசுகிறான். மரத்தின் மேலிருந்தபடி, ராவணனின் பேச்சையும் கேட்கிறான், சீதையின் பதிலையும் செவி மடுக்கிறான் ஹனுமான்.

கடைசியில் ராவணன் அகன்று போகிறான். போவதற்கு முன்பாக, சீதையைத் தனக்கு எப்படியாவது இணங்க வைக்க வேண்டும் என்று அரக்கிகளிடம் கோபமாகக் கட்டளையிட்டுவிட்டுப் போகிறான்.

அரக்கிகள் சீதையைத் துன்புறுத்த ஆரம்பிக்கிறார்கள். சீதை அவர்களிடம் கண்ணீர் மல்க மன்றாடுகிறாள்.

- இவை எல்லாவற்றையும் ஹனுமான் மரத்தின் மேலிருந்தபடி பார்த்துக் கொண்டிருக்கிறான்.

சீதையின் நிலையைக் கண்டு அவன் மனத்தில் தாள முடியாத துயரம் பெருகி எழுகிறது. மறுபுறம், அரக்கிகளிடம் தாள முடியாத கோபம் ஏற்படுகிறது ஹனுமானுக்கு.

ஆனாலும் கோபத்தையும் துயரத்தையும் விழுங்கிவிட்டு மிகவும் பொறுமை காக்கிறான் ஆஞ்சநேயன்.

சுத்த வீரன். மனத் தூய்மையும் உடல் பலமும் கொண்ட மகா வீரன். அப்படிப்பட்ட ஒருவனுக்கு இதுபோன்ற சந்தர்ப்பத்தில் பொறுமை காப்பதென்பது எத்தனை கஷ்டமான விஷயம்! யோகப் பயிற்சி தரும் மனோ விவேகத்தால் மட்டுமே ஏற்படக்கூடிய பொறுமை அது. அத்தகைய விவேகம் ஸ்ரீ ராம பக்த ஹனுமானிடம் இருந்தது.

அரக்கிகளிடையே திரிஜடை என்பவள் இருக்கிறாள் - விபீஷணனின் மகள் இந்த திரிஜடை. மற்ற அரக்கிகளிடம் அவள் எடுத்துச் சொல்கிறாள். தான் ஒரு கனவு கண்டதாகக் கூறி அந்தக் கனவை வர்ணிக்கிறாள்.

கனவின் அர்த்தம் இதுதான். வெகு விரைவில் ராவணன் அழிந்து போவான்; சீதையை ராமன் வந்து அழைத்துப் போவான்; ஒரு வானரம் இலங்கையை அழித்துத் தரைமட்டமாக்கப் போகிறது.

இந்தக் கட்டத்திலே வால்மீகியும் கம்பனும் சொல்லாத ஒரு கருத்தை துளஸிராயரும் அத்யாத்மராமாயணமும் கூறுகின்றன. என்ன கருத்து...?

ராவணனுடைய இலங்கை ராஜ்ஜியத்தை விபிஷணன் ஆள்வதாக திரிஜடை கண்ட கனவிலே வருகிறது. இது துளஸிதாஸர், அத்யாத்மராமாயணம் ஆகியவற்றில் மட்டும் வருவது. அருணாசலக் கவிராயர் இதை அடியொற்றியே பாடியிருக்கிறார். 'என் கனவைக் கேளாய்' என்று தொடங்கும் 'ராமநாடக கீர்த்தனை பாடலில்.

*இந்த மன்னன் வீடு விட்டெழுந்தொரு*
*பெண் தாவினாள்.*
*என் தகப்பன் வீட்டில் அவள் வந்து*
*சுந்து மேவினாள்.*

மன்னன் வீட்டிலிருந்து தாவி, திரிஜடையின் தகப்பன் வீட்டில் மேவியவள் 'ராஜ்ய லக்ஷ்மி' என்கிற பெண் - அதாவது அரசு அதிகாரம்.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கும் சீதா தேவிக்கு என்ன தோன்றுகிறது...? இத்தனை சுப சகுனங்கள் தெரிவிக்கப்பட்டு என்ன பயன். ராமன் இன்னமும் தன்னை மீட்க வரவில்லையே என்று தோன்றுகிறதாம் அவளுக்கு. ரொம்பவும் மனமொடிந்து போய் தன் உயிரை மாய்த்துக் கொள்ளவும் துணிகிறாள்.

இதுகாறும் பொறுமை காத்த ஆஞ்சநேயன் இனி செயல்வீரனாக மாறுவது என்று முடிவு செய்கிறான்.

சீதையைக் காண வேண்டும். பேச வேண்டும். அவள் துயர் தீர்க்க வேண்டும். தான் ராமதூதன் என்பதைச் சொல்லி நம்பிக்கையூட்ட வேண்டும். எப்படிச் செய்வது..? தீவிர சிந்தனையில் ஆழ்ந்தான் ஹனுமான்.

**(வளரும்)**

# குஞ்சனின் பெண்சாதி

**சா**ப்பறை ஒருமுறை முழங்கி ஓய்ந்தது.

அது விழுத்திய நிடும் நிசப்தத்தில் ஓங்கிக் கேட்ட பேச்சுக் குரல்கள் யாவும் அடங்கி, சிறிது நேரத்தில் மறுபடியும் மெல்ல மெல்லக் கிளர்ந்தெழுந்து ஒலிக்கத் துவங்கின.

வடிவேலர் அவற்றை வெறுப்போடு பார்த்துக் கொண்டிருந்தார். யார் கவனமும் படாததுபோல் வராந்தாவில் நீட்டி நிமிர்த்திக் கிடத்தப்பட்டிருந்தது அவர் மனைவி அழகம்மாவின் உடல். திரி கருகிவரும் தலைமாட்டு விளக்குக்குக் கூட எண்ணெய் விடச் சொல்லி அவரே அவ்வப்போது சொல்ல வேண்டியிருந்தது. அந்த அசிரத்தைத் தனங்களைச் சகிக்க முடியாததாலேயே விரைவில் 'மய்ய'த்தை எடுக்கச் சொல்லி விடலாமா என்றுகூட எண்ண ஆரம்பித்து விட்டது அவரது வெந்த மனது.

ஆனாலும்... இப்போதாவது குஞ்சன் பெண்சாதி வந்துவிட்டால் நிலைமையைத் தலைகீழாகவே மாற்றியமைத்துவிட முடியும்.

வெய்யிலுக்கு முன்னர் மய்யத்தை எடுத்துவிட வேண்டும் என்ற அவசரம் எல்லோர் மனத்திலும் துடித்துக் கொண்டிருந்தது.

வடிவேலர் இன்னும் ஏன் தாமதிக்கச் சொல்கிறார்?

குமாரசாமி, மற்றும் இரண்டொருவர் தவிர வேறு யாரும் காரணத்தை உணர்ந்ததாகத் தெரியவில்லை.

அவள் அவருக்குச் சகலமுமாக இருந்தவள்.

ஊதாரியாக ஊரிலே கெட்டபேர் எடுத்துக் கொண்டு திரிந்த வடிவேலரை, கல்யாணத்தின் பின் அடங்கிப்போக வைத்தது அழகம்மாதான்.

அவளுக்கு ஒரு நோயிருந்தது. அவ்வப்போது வரும் வயிற்று வலியில் அவள் துடித்துப் போவாள். 'செத்துப்போக வேளை வரவில்லையே' என்று அவளே புலம்பியிருக்கிறாள். அவளுக்கு ஐம்பது வயதுதான் ஆகியிருந்தது. திடகாத்திரமாகவும் இருந்தவள். மரணம் அவளை அப்போதைக்கு அண்டக்கூடும் என்ற எண்ணம் எவருக்கும் இருந்ததில்லை. குறிப்பாக, அவர் நினைக்கவில்லை. அவர் வாழ்வின் உன்னதமான தருணத்தில் அவள் இல்லாமல் ஆகியிருக்கிறாள். அவளின் அருமை அவருக்குத்தான் தெரியும்.

வடிவேலர் சாவு வீடென்கிற பிரக்ஞை இழந்து வரும் அந்த மனிதர்களைப் பார்த்தபடி விறைத்தவர்போல் அமர்ந்திருந்தார். மகன் வந்துவிட்டான். மகள் வந்துவிட்டாள். நெருங்கிய உறவினர்களும் வந்துவிட்டார்கள்.. ஆனால் அழுகை மட்டும் வர மறுத்திருந்தது. துக்கத்தின் வழியை ஏதோ இருந்து அடைக்கிறதா? அந்தத் தடைக்கல் எது? தானும் தன் குடும்பமும் என்று ஒரு சுயநல வட்டத்துள் அழகம்மா இருந்துவிட்டதில், வெளி மனிதர்களோடு அவளுக்கு இருந்த அந்நியோன்யமின்மை அதற்குக் காரணமா?

அல்லது நோய் நொடியென்று வருகிறபோதும் நல்லது கெட்டது நடக்கிறபோதும் அயல் மனிதர்களில் தன் சுயநல வட்டம் கடந்து அழகம்மா ஈடுபாடு காட்டாதது காரணமா? இந்தத் தடைக்கல்லை அகற்றவா குஞ்சனின் பெண்சாதியது வரவு அங்கே எதிர்பார்க்கப்படுகிறது?

அவள் வந்திருந்தால் சாவு வீட்டுப் பந்தலிலே இத்தனை ஏண்டாப்பு மனப்பான்மை விழுந்திராதுதான். ஒரு குசுகுசுப்புக்கூட பந்தலில் அநாவசியமாய் எழுந்திராது.

மெய்.

குஞ்சன் பெண்சாதி ஒப்பாரி வைத்தால்



**தேவகாந்தன்**

உருக மறுக்கிற மனமும் உருகும்; கலங்க மறுக்கிற கண்ணும் கலங்கும். அவளது சாரீரமும், சொற்கோர்ப்பு முறையும் அப்படி. உணர்வுகளைப் பிழிந்து சாறு இறக்குவதில் அவள் சாதுர்யக்காரி.

ஆனாலும் குஞ்சன் பெண்சாதியின் அருமை விலாசம் பெறுவது அதற்கும் மேலேதான்.

மய்யம் பந்தலில் கொண்டுவந்து வைக்கப்பட்டதும் சமய சம்பந்தமான கிரியைகள் பூர்த்தியாகும். பின்னர் சம்பிரதாய பூர்வமான காரியங்கள் தொடங்கப்படும். பெண்கள் மய்யத்தைச் சுற்றி வந்து மாரடிப்பது அப்போதுதான். அதுவே அந்த வீட்டுச் சாவின் துக்கத்தை உச்சபட்சத்தில் வைத்துக் காட்டுவது. குஞ்சன் பெண்சாதியும் வந்திருந்

தது. இன்னும் இரண்டு மூன்று பேரும் சோகம் மூண்டு எழுந்துவிட்டால், செத்தவரின் எதிரிகளுக்குக் கூட நெஞ்சு பொறுக்காது கண்ணீர் வெடித்தெழும்; விசும்பல் பிறக்கும்.

குஞ்சன் பெண்டாட்டி மாரடித்தால் அவளது நெஞ்சு மட்டுமில்லை, பக்கத்தில் நிற்பவர் நெஞ்சு மட்டுமில்லை, எட்ட நின்று பார்த்துக் கொண்டு இருப்போர் நெஞ்சுகளெல்லாம் கூட அதிரும்.

மாரடித்தலென்பது கிராமங்களிலே துக்க வெளிப்பாட்டுக்கான ஒரு வன் 'கலை'. அது ஒருவகையில் துக்க வடிகாலாகவும் இருந்தது. சோகத்தின் உச்சியில் ஒருவர் தன்னைக் கல்லாய்ப் பாவித்துக் கொண்டு அடித்து நொறுங்கி விடும் உக்கிரமம் கொண்டது. ஒரு நிர்க்கதியின் திகில், எல்லாவற்றையுமே



**''அந்த ஆளு ஏன் இவ்வளவு சந்தோஷமா குதிச்சுக்கிட்டு இருக்காரு?''**

**''தபாலாபீஸ் தீப் பிடிச்சு எரிஞ்சதுல, ஐம்பது தபால்கார்டுகள்ல நான் எழுதி அனுப்பின ஜோக்ஸ் எல்லாம் சாம்பலா மிடுச்சுன்னு சொன்னேன்...''**

**— சீர்காழி வி. ரேவதி**

இழந்துவிட்டதன் அவலம் அதில் தெரியும். அது சாவு வீட்டில் அந்த மனிதர்களது துக்கத்தின் அளவுகோலாய் இருந்தது.

துக்கம் குறைவுபடுகிற ஒரு சாவு வீடு வசைபடும். அந்த ஜீவன் வாழ்ந்ததைவிட இறந்துபோனதே நல்லதென தம்மாலும் பிறராலும் எண்ணப்பட்டதென ஊரால் கொள்ளப்பட்டுவிடும் என்ற பயம் அனைவரிடத்திலும் இருந்தது. அதனால்தான் தன் ஒப்பாரியாலும் மாரடிப்பாலும் இதயங்களை நெக்குநெக்காய் உருகவைத்துவிடுகிற குஞ்சன் பெண்சாதி போன்றோரின் வரவை கிராமங்கள் எதிர்பார்த்தன.

குஞ்சன் பெண்சாதி வராமல் சாவு வீட்டுக் காரியங்கள் பூரணப்பட்டதாய் யாரும் நினைப்பதில்லை சரவணை கிராமத்திலே.

அவளுக்குத் தங்கைக்காரி ஒருத்தி பக்கத்து ஊரிலே இருக்கிறாள். தனியாள் ஆனபடியால் அடிக்கடி அங்கே போய்த் தங்கி வருவாள். அங்கேயுள்ள நெருங்கிய உறவினர்களின் நல்லது கெட்டதுகளுக்கும் போய் வருவதுண்டு. அப்படியான தருணங்களில் ஆள் அனுப்பி அவளைக் கூப்பிட்டுதான் முக்கியமான மனிதர் வீடுகளிலே சாவுச் சடங்குகள் நடந்தன.

சாவு வீடுகளுக்கு அவள் சொல்லாமலே வருவாள். சொன்னால் தவறாது வருவாள். ஆனால் அன்றைக்கு..? அதுவும் வடிவேலர் வீட்டுச் சாவுக்கு...?

சாவு வீட்டில் பக்கத்தில் இருந்தவருடன் மணியம் பேச்சுக் கொடுத்தான். "வடிவேலரைப் பாக்கத்தான் பாவமா இருக்கு. சாவு வீட்டில துக்கத்தையே காணமே!"

"ம்....நானும் அதைத்தான் யோசிச்சுக் கொண்டிருக்கிறேன். குஞ்சன் பெண்சாதியும் வரேல்லை. அவள் வந்திருந்தால் நிலைமை இப்பிடி இருந்திராது. மய்யத்தைக் குளிப்பாட்ட தாமதிக்கிறதுக்கும் அவள் வந்தாலும் வரலாம் எண்ட எண்ணம்தான் காரணம் போல."

சலசலப்புகளுள் இவ்வாறு தெளிவான சில உரையாடல்கள்.

**வ**டிவேலரின் பார்வை தேடிவந்து குமாரசாமியின் முகத்தில் இறுக்கமாய்ப் பதிந்தது. இனி வேறு எவரையும் அனுப்பி பிரயோசனமில்லை என்று நினைத்த குமாரசாமி, தானே போய்ப் பார்த்து வருவதாக சைகையில் காட்டிவிட்டு ஓட்டமும் நடையுமாக விரைந்தார்.

குஞ்சன் பெண்சாதியின் குடிசையை நெருங்க நெருங்க ஒருவகை ஏக்கம் பற்றிக் கொள்ளத் தொடங்கிவிட்டது அவரை. வீட்டில் எவரேனும் இருப்பதற்கான அறிகுறியே இல்லை.

குஞ்சன் பெண்சாதி தங்கைவீடு போயிருக்கக் கூடுமோ?

ஆனாலும் இனி செய்வதற்கு எதுவுமில்லை. அதென்ன... உள்ளே சுவரோரமாய் அசைவது?

அவர் மேலும் நெருங்கி பார்வையைத் தீக்ஷண்யித்தார்.

சுவரோடு சாய்ந்து யாரோ உட்கார்ந்திருப்பது தெரிந்தது. தாழ்வான தாழ்வாரக் குடிசையாதலால் உள்ளே இருளடித்திருந்தது. யாரென்று தெரிய கணங்களாயிற்று.

தெரிந்தவர் திடுக்கிட்டுப் போனார்.

கருங்குன்றுபோல் நெடுமையும் இன்மையும் பெற்றிருந்த குஞ்சன் பெண்சாதியா

அது?

ஐயோ, பாதியாய்ச் சிறுத்துப் போனாளே!

என்ன நடந்தது அவளுக்கு?

"நல்லதங்கம்..." அவருக்கு மேலே கேட்க வாய் எழவில்லை.

"ஆர்...? ஓ.... சாமியாரோ? இத... இத... வாறன்'' என்றுவிட்டு மெல்ல எழுந்து முன்னே வந்து ஆற்றாமையோடு திண்ணை யில் அமர்ந்தாள்.

தனியேயிருந்து அழுதிருப்பாள் போலிருந் தது. கண்கள் கலங்கி, முகம் சுறுத்திருந்தாள்.

முண்டுபோல் சேலை கட்டி, மேலே சட் டைபோட்டு, துண்டொன்றை மார்மேலே போர்த்தியிருந்தது. அவளது நெஞ்சுப் பகுதி பலகைக் கணக்கில் தட்டையாய்க் கிடந் ததை அப்போதுதான் கண்டார் குமாரசாமி. கொடிகட்டியிருந்தனவே... எங்கே அவளது நெஞ்சுகள்?

அந்தக் கிராமத்தில் பெரும்பாலான வீடுகளில் விழுந்த துக்கத்தினது பங்காளி யாய் அவள் அத்தனை காலமாய் இருந்திருக் கிறாள்.

ஒப்பாரி வைப்பதால் அவ்வப்போது குரல் அடைத்துப் போய்த் திரிந்திருக்கிறாள் அவள். நெஞ்சிலே நோவு என்று 'பத்து' போட்டுக் கொண்டும், எண்ணெய் பூசிக் கொண்டும் அவஸ்தைப்பட்டு இருந்திருக் கிறாள். யார் அனுதாபப்பட்டு ஓர் ஆறுதல் வார்த்தை சொன்னார்கள்? ஆனால் அவள் எது குறித்தும் மனஸ்தாபப்பட்டதில்லை. உடல் அவஸ்தைப்பட்ட காலத்தில்கூட ஒதுங்கியிருந்ததில்லை. வாழ்வின் மகத்து வத்தை உணர்ந்து ஒவ்வொரு மரணத்துக்கும் அவள் சோகப்பட்டிருக்கிறாள். இறந்தவர் அனைவரையும் உறவாகக் கொள்ளும் பாவ னைச் சாதுர்யம் அவளுக்கிருந்தது. அந்தப் பாத்தியதையால் இன்று...

அவளது சோகமில்லையே அவள் தாங்கியது!

குமாரசாமியால் கேட்காமலிருக்க முடிய வில்லை. "என்ன நடந்தது, நல்ல தங்கம்?" என்றார்.

கேட்டு லேசாக அவள் சிரித்ததுபோல இருந்தது. ஆனால் அவள் சிரித்திருக்க முடியாதென்று நிச்சயப்பட்டார். அது சிரித்து வெளிப்படுத்துகிற துக்கத்தைவிடவும் பாரியது.

அவள் சொன்னாள்: "நெஞ்சில வலிக்கு தெண்டு ஆஸ்பத்திரிக்குப் போனன். கொழும்பில மகரகம ஆஸ்பத்திரிக்குப் போகச் சொல்லி துண்டு தந்தினம். அங்க... போனவுடன எக்ஸ்ரே எல்லாம் எடுத்துப் பாத்திட்டு புற்றுநோய் எண்டாங்கள். உள்ள கூடு வைச்சிட்டுதாம். அதால... ரண்டு நெஞ்சயும் எடுத்திட்டினம்..."

அவளது நெஞ்சில் விழுந்த அடிகளின் பின்விளைவா அது?

குமாரசாமிக்கு உடம்பு சில்லிட்டு வந்தது.

அவர் அவளது கண்களை ஊடு ருவினார்.

வெறுமைபற்றிக் கிடந்தன அவை.

அவளுக்கு எப்படி ஆறுதல் சொல்வ தென்று தெரியவில்லை அவருக்கு. பேசாமல் அப்படியே போகவும் முடியாதிருந்தது. நின்ற இடத்திலேயே நின்று தடுமாறிக் கொண்டிருந்தார்.

குஞ்சன் பெண்சாதி தொடர்ந்தாள்: "வடிவேலர் சம்சாரம் காலமான விஷயம்



**''என்ன இது! படம் பூரா யாராவது ஒருத்தர் சாயம்பூசிட்டு வயல்லயே அலையுறாங்களே!''**

**''படம் பேரு 'விவசாயம்' இல்லீங் களா, அதைத்தான் டைரக்டர் அப்படி சிம்பாலிக்கா காட்டுறாராம்!''**

**— ரெவீ**

எனக்கு நேற்றுப் பின்னேரமே தெரியும். காலமை ஆள்கூட வந்தது. ஆனால்... எப்பிடி சாமியார்... ஏலுமாயிருந்தால் வராமல் நிக்கிற ஆளில்லையே நான்..."

"மெய்தான். காலமை இஞ்ச வந்த ஆள் திரும்பி வந்து என்னிட்ட விஷயத்தைச் சொல்லேல்லை. சொல்லியிருந்தால் இப்ப நான் இஞ்ச வந்து உன்னைத் தொந்திரவு செய்திருக்க மாட்டன். வடிவேலர்தான் பாவம்... ஆனால் என்ன செய்யிறது? இனி அவரவரும் இருக்கிற சோகம் அளவுக்கு அழுதிட்டு விடவேண்டியதுதான். நான் வாறன், நல்ல தங்கம். உடம்பைப் பாத்துக் கொள்...'' என்றுவிட்டு அவர் திரும்பி நடந்தார்.

நிலைமையை அவர் புரிந்திருந்தாலும் ஓர் ஏமாற்றத்தினதும், ஒரு துக்கத்தினதும்

ஆன தாக்கங்களை அவரது தளர்ந்த நடையில் பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள் குஞ்சன் பெண்சாதி.

**சா**வு வீட்டிலே குமாரசாமியை நெருங்கி வந்து மணியம் மெல்லக் கேட்டான்: "குஞ்சன் பெண்சாதியைப் பாத்து வரப் போயிருந்தியளாமே! என்னவாம் அவள்? ஏன் இவ்வளவு நேரமாய் வராமல் நிக்கிறாளாம்? இஞ்ச, மய்யத்தைக் குளிப்பாட்டவும் துவங்கியிட்டினம்... ஒருவேளை ஊரில இல்லையோ அவள்? இல்லாட்டி... உடம்புக்குத்தான் ஏதேனும்...."

அவர் அவனுக்கு ஏற்பட்டுள்ள நிலைமையைக் கூறினார்.

சிறிது நேரத்தில் செய்தி கூடி நின்றவர்களிடத்தில் எல்லாம் குசுகுசுவெனப் பரவியது.

இனி தாமதிக்க வேண்டியதில்லை, மய்யத்தை எடுக்கலாம் என்று சொல்லி விட்டார் வடிவேலர்.

மய்யம் எடுக்கிற வேளை வந்தது.

பெண்கள் சுற்றி வந்து மாரடித்து அலறினர். ஏனோ தானோவென்றிருந்தது. யார் கண்ணும் பெரிதாய்க் கலங்கியில்லை. இலேசான துக்கம் இருந்ததுதான். ஆனால் அது அழகம்மாவுக்கானதா, குஞ்சன் பெண்சாதிக்கானதா என்பதைத் தெரிந்து கொள்ளச் சிரமமாயிருந்தது.

நிலைமையைக் கண்டு வடிவேலர் மறுபடி கண்கலங்கினார்.

திடீரென....

"ஐயோ.... என்ர ராசாத்தி.../ என்னை விட்டுப் போயிட்டியே / முத்தத்தில் இறங்கினால் / முழுக்காலும் வலிக்குமெண்டு / அவர் / முனகாமல் காத்தாரே...!"

பந்தலை ஸ்தம்பிக்கச் செய்து கொண்டு விரிட்டெழுந்தது ஒரு ஒப்பாரி. அது குஞ்சன் பெண்சாதியின் குரலென்று அறிய வெகு நேரம் ஆகவில்லை.

பெட்டியைத் தூக்கிப் போய் பாடையில் வைக்க வந்தவர்கள் திகைத்தவர்களாய் ஒதுங்கினர்.

அனைவரது பார்வையும் குஞ்சன் பெண்சாதி மேல் நிலைத்தது.

அதுபற்றிய பிரக்ஞையேதும் அற்றவளாய், தடாரென மண்ணில் அமர்ந்து ஒப்பாரி வைக்கத் துவங்கினாள் அவள்.

"படலைத் திறந்தால் / பட்டுக்கை நோகுமெண்டு / என்ர ராசாத்தி... அவர்/பக்குவமாய்ப் பார்த்தாரே/பாத்த மனம் பரிதவிக்க / என்னைப் பெத்த ராசாத்தி...நீர்/ கனபயணம் போனதென்ன?"

வடிவேலர் விம்மி அழுதார்.

மகன், தேவராஜன் அழுதான். மகள் ஓங்கியோங்கி தலையிலடித்து அலறினாள். அங்கே கூடி நின்றவர்கள் எல்லோருமே அழுதார்கள்.

அந்த இறுதிக் கணங்கள் மிக்க கனமானவையாக இருந்தன.

ஒரு மரணம் துக்கிக்கப்பட்டதன் மூலம் கௌரவிக்கப்பட்டதாயிற்று. அங்கே கௌரவம் பெற்றது மரணம் மட்டுமில்லை, அர்த்தமுள்ள வாழ்க்கையின் கனமாயிருந்த காலமும்தான்.

சிறிதுநேரத்தில் அழகம்மாவின் பிரேத ஊர்வலம் மிக்க சோகத்தோடு மயானம் நோக்கி நகர்ந்து கொண்டிருந்தது அந்த உச்சி வெய்யில் வேளையிலே.

---

## சஃபையருக்குச் சிக்கிய மாடல்!

பஜாஜ் நிறுவனத்தின் புதிய சஃபையர் ஸ்கூட்டரை மாதவன் ஓட்டுவது போன்ற விளம்பரம் டீவியில் வருகிறதல்லவா...? அதில் அவரை இரண்டு கல்லூரி மாணவிகள் அகலக் கண் விரித்துப் பார்க்கும் காட்சி வருகிறதல்லவா...? அந்தக் காட்சியில் நடிக்கும் இரு பெண்களுள் ஒருவர் அஸ்ஸாமிய முக ஜாடை கொண்டவளாக இருக்க வேண்டும் என்று முடிவு செய்தனர் ஜே.எஸ். விளம்பர நிறுவனத்தைச் சேர்ந்த ஜெயேந்திராவும் பி.சி. ஸ்ரீராமும். மும்பை டெல்லி என்று சலித்துத் தேடியும் முகம் கிடைக்கவில்லை. கடைசியில் எதிர்பாராத விதமாக சென்னை, மயிலை, கச்சேரி ரோடில் சிக்கினார் ஒரு 'மாடல்'.



ஜெயேந்திரா அந்தப் பக்கமாக காரில் போய்க் கொண்டிருந்தபோது, மொபைல் இஸ்திரிக் கடையில் துணி கொடுக்க வந்த ஒரு பெண்ணைக் கவனித்தார். தேடிக் கொண்டிருந்த முகம்! அங்கே, அப்போதே காரை நிறுத்திப் பேசினார். பெண்மணியும் ஓ.கே. சொல்ல, கல்கத்தாவிலும் சென்னை பிலிம் சிடியிலுமாக ஷூட்டிங் நடந்து முடிந்தது.

– மௌலி



# அமெரிக்காவில் தமிழ் வளர்க்கிறார்கள்!

அமெரிக்க வாழ் தமிழரான காஞ்சனா தாமோதரன் சிறுகதை எழுத்தாளர். சமீபத்தில் தமது சிறுகதைகளை 'வரம்' என்ற தொகுப்பாக சென்னையில் வெளியிட்டார். ஜெயகாந்தன், அசோகமித்ரன், சா. கந்தசாமி, பிரபஞ்சன் உள்ளிட்ட மூத்த எழுத்தாளர்கள் வாழ்த்திய வெளியீட்டு விழாவின் ஏற்புரையில் ஒரு நற்செய்தியைப் பகிர்ந்து கொண்டார் காஞ்சனா.

சம கால தமிழ் இலக்கியங்களில் தரமானவற்றைத் தேர்வு செய்து ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க அறக்கட்டளை ஒன்றைத் தொடங்க இருப்பதாகக் குறிப்பிட்டதும் அரங்கிலிருந்த அத்தனை பேர் முகத்திலும் மகிழ்ச்சி. அந்த அறக்கட்டளை குறித்து நம்முடன் கலந்துரையாடவும் செய்தார், இந்த திருநெல்வேலி திருமதி.

''புலம்பெயர்தல், உலகமயமாதல், இணையம் உள்ளிட்ட தொடர்புச் சாதன வளர்ச்சி போன்ற சமூகப் போக்குகளால் உலக சமுதாயமே பன்முகத்தன்மைக்கு மாறி இருக்கிறது. இலக்கியப் பணியும் அதில் முக்கியமானது. தமிழ் இலக்கியத்தை உலக அரங்கில் எடுத்துச் செல்ல இந்த மாறுதல் கட்டமே சரியான தருணம். சம கால தமிழ் இலக்கியங்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து ஆங்கில வாசகர் சமுதாயத்திற்கு எடுத்துச் சென்றுவிட்டால், தமிழ் இலக்கியம் உலகத் தரமானது என்ற அங்கீகாரத்தை வாசகரே கொடுத்து விடுவார்கள் என்பதே எங்கள் எண்ணம். அதைச் செயல்படுத்தவே இந்த அறக்கட்டளை'' என்றவரிடம் இந்த அறக்கட்டளை எங்கே நிறுவப்பட இருக்கிறது என்று கேட்டோம்.

''உலகத் தமிழ்மொழி அறக்கட்டளை என்பது உலக அளவிலான ஓர் அமைப்பு. இதன் ஒரு பிரிவாகத் தொடங்க இருப்பதுதான் சமகால தமிழ் இலக்கிய வளர்ச்சித் திட்டம்'' என்றவர் அதன் மூன்று முக்கிய நோக்கங்கள் குறித்து எடுத்துச் சொன்னார். ஒன்று, புதிய படைப்பாளிகளை இனம் கண்டு அவர்களின் தரமான முதல் படைப்புகளைப் பிரசுரிப்பது. இரண்டு, தமிழில் உள்ள சமகால, சிறந்த படைப்புகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பது. மூன்று, தேய்ந்துபோன குழந்தை இலக்கியத்தைப் புத்துயிரூட்ட தேவையான பதிப்பித்தல்களை மேற்கொள்வது. இதற்குப் புதிய குழந்தை இலக்கிய படைப்பாளிகளை உற்சாகமூட்டுவது. படைப்புத் தேர்வுகள் நடுவர் குழுக்கள் மூலமே நடைபெறும்.

''இத்திட்டத்திற்கான இணையத்தளம் விரைவில் தொடங்கப்பட இருக்கிறது. நானும் எனது கணவரும் முதல் நன்கொடையாக நிதி அளிக்க இருக்கிறோம். தமிழ்நாடு, மலேசியா, சிங்கப்பூர், இதர நாடுகளில் உள்ள தமிழர்களிடமிருந்து நிதி உதவியை எதிர்பார்க்கிறோம்'' என்கிறார் காஞ்சனா.

''முதலில் முப்பது சிறுகதைகள் தேர்வு செய்யப்பட்டு மொழி பெயர்க்கப்பட உள்ளன. கூடவே குழந்தை இலக்கிய சிறுகதைப் போட்டிமூலம் பரிசுபெறும் படைப்புகளைப் பதிப்பிக்க இருக்கிறோம். புதிய சிறுகதை மற்றும் நாவல் போட்டியும் உண்டு. எந்தப் பத்திரிகையிலும் வெளிவராத, பதிப்பிக்கப்படாத நாவலாகவும், சிறுகதைகளாகவும் இருக்க வேண்டும். சிறந்த சிறுகதைத் தொகுப்பிற்கு இருபதாயிரமும், சிறந்த நாவலுக்கு முப்பதாயிரமும் ரொக்கப் பரிசுகள் வழங்கப்பட்டு ஒவ்வொரு ஆண்டும் பரிசு பெறும் படைப்பாளிகளுக்கு அமரபாரதி விருதுகளும் வழங்க இருக்கிறோம்'' என்கிறார்.

தமிழ்ப் படைப்பாளிகள் யாருடைய ஆலோசனைகளையும் பரிசீலித்து, ஏற்றுக் கொள்வதோடு ஒரு திறந்த புத்தகமாக இந்த அறக்கட்டளை செயல்படும். அதற்குத் தமிழ்கூறும் நல்லுலகில் இருந்து வரத் தொடங்கியிருக்கும் வாழ்த்துச் செய்திகளே சாட்சி'' என்று நம்பிக்கையோடு கூறுகிறார்.

**ஜெயன்**

படம் : **வெங்கடேஷ்**

❑ ரூ.50 பரிசு பெறுபவர்
**என். சுப்பிரமணியன்,**
4, ஆறாவது தெரு,
கே.வி.காலனி,
சென்னை - 33

★ ரூ. 25 பரிசு பெறுபவர் :
**விமலா கணேசன்**
100, முருகன் கோயில் தெரு,
உசிலம்பட்டி - 625 532

# கண்டதும்

● எம்.சிவகுருநாதன், சென்னை-42

*? 'நல்ல மனிதர் ஒருவரைத் தேடி பாகிஸ்தானை ஒப்படைப்பேன்' என்கிற முஷரஃபின் பேச்சு பற்றி என்ன நினைக்கிறீர்கள்?*

! ஆடு நனைகிறது என்று ஓநாய் வருந்துவதாகத் தமிழில் ஒரு பழமொழி உண்டு.

● ஆர். தங்கராஜ், திருப்பூர்

*? இரண்டாயிரமாவது ஆண்டில் இந்தியாவின் சாதனை என்று எதைக் குறிப்பிட்டுச் சொல்லலாம்?*

! வன்முறை, லஞ்ச - ஊழல்களில் நம்மை விஞ்சக் கூடியவர்கள் இருக்கிறார்கள். ஆனால் காவல் நிலையங்களில் கைதிகளுக்குப் பாதுகாப்பின்மை; ஆஸ்பத்திரிகளில் நோயாளிகளுக்குப் பாது காப்பின்மை, மிருககாட்சி சாலைகளில் மிருகங்களுக்குப் பாது காப்பின்மை; இவற்றை உலகில் வேறு எங்கும் காண முடியாது. முப்பெரும் சாதனைகள்!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

*? 'ஒரு நாள் போட்டிகள் கிரிக்கெட்டின் அழகைச் சீரழித்து விட்டது' என்று முன்னாள் கேப்டன் வெங்சர்க்கார் வருத்தப் பட்டுள்ளது சரியா?*

! சரியில்லை; 54 ஆல் அவுட் அவலட்சணமாகத் தோன்றி னாலும் ஸ்ரீலங்கா ஆடிய அழகை ரசிக்கக் கற்றுக் கொண்டவர்கள் வெங்சர்க்காரின் முடிவை ஏற்றுக் கொள்ளமாட்டார்கள்!

● வி. லக்ஷ்மி ராமன், சென்னை - 73

*? பாரம்பரிய கலைப் பொக்கிஷமான சென்னை தலைமை தபால் நிலையம் தீக்கிரையானது குறித்து...?*

! தீ விபத்துக்கெதிரான பாதுகாப்பு ஏற்பாடுகள் எதுவும் செய்யப்படவில்லை என்று அலுவல கப் பொறுப்பாளர்களே ஒப்புக் கொண் டிருக்கிறார்கள். சில மாதங்களுக்கு முன்பு தான் நிபுணர் குழு பாதுகாப்பு ஏற்பாடு களைப் பரிசீலித்து, சிபாரிசுகள் கொடுத் துள்ளது. எதுவும் நடைமுறைப்படுத்தப் படவில்லை என்பது அலட்சியம், அஜாக் கிரதை இரண்டையும் காட்டுகிறது.



• பயணத்தின் முடிவில்...



• அழகுதான்!



• தக்கரும் நிஜமும்!

● ம.எஸ்.ம.ராயன் நல்லத்துக்குடி

*? கோவா இரு விளையாடல் கள், உ.பி. முதல் வர் மாற்றம் - இதெல்லாம் காங்கிரஸின் பாரம்பரியம் ஆயிற்றே... எப்போது*

*பா.ஜ.க.வைத் தொற்றிக் கொண்டது?*

! ஆட்சி அதிகாரத்தை அனுபவித்து ருசி கண்டபோது.

● இரா.கணேசன், சேலம்

*? அண்மையில் நீங்கள் ரசித்த மிகப் பெரிய அர சியல் ஜோக்?*

! இலங்கை நிலவரத்தை இஸ்ரேல்-பாலஸ்தீன நிலவரத் துடன் ஒப்பிட்டு வைகோ பேசியிருப்பதுதான்.

● கே.வி.ராமன், சென்னை-73

*? இருபத்து நாலு வருடங்கள் மேற்கு வங்க முதல்வராகப் பணியாற்றிய ஜோதி பாசு வின் ஓய்வு குறித்து...?*

! நீண்ட வெற்றிகரமான பய ணத்தின் முடிவில் பெறுகிற அவசியமான ஓய்வு.

● எஸ். அப்துல்லா அஹ்மது, நாகூர்

*? பண்பாடு எப்போது மதிப்பை இழக்கும்?*

! போச்சுடா! உலகில் மதிப்பை இழக்கவே இழக்காத ஒரு சில விஷயங்களுள் முக் கியமானது பண்பாடு.

● கே.ஆர்.வெங்கடேஷ், சீர்காழி.

*? தீபாவளி தொலைக்காட்சி சிறப்பு நிகழ்ச்சிகளில் தராக வைக் கவர்ந்தது?*

! ரமணியும் ரமணியும் தீபா வளி கொண்டாடிய குடும்பச் சித்திரம். எளிமையான 'அள வான மிகை' கலந்த நகைச் சுவை. அதனாலேயே நம்பும் படி, ரசிக்கும்படி இருந்தது.

● என். சுப்பிரமணியன்,

விடுதலைக்கு வழிவகுக்குமாறு வேண்டுகிறோம்.

● முகவை முத்துசாமி, தொண்டி.

? நமது நாட்டை உலக நாடுகளின் சந்தையாக்குவதற்குப் பதிலாக, பிரதமர் வாஜ்பாய் அமெரிக்க அதிபர் கிளிண்டனிடம் நாட்டை ஒப்படைத்துவிடலாம் என்று லாலுபிரசாத் யாதவ் அபூர்வ யோசனை கூறியுள்ளாரே?

! அது sarcastic remark. புதிய பொருளாதாரக் கொள்கை என்ற பெயரில் சகலத்துக்கும் கதவுகளை அகலத் திறந்து வைப்பது. நமது செல்வமெல்லாம் பறிபோக வழிவகுக்கும் என்ற அச்சம் பல பொருளாதார நிபுணர்களிடம் கூட நிலவுவது உண்மை.

● ந.சிவாயமூர்த்தி, பெருந்துறை

? புத்திசாலி மக்களுக்குத் தங்கள் சுற்றுப்புறச் சூழ்நிலையைச் சுத்தமாக வைத்துக்கொள்ள மட்டும் தெரியாதது ஏன்?

ஹைஜீன்' என்ற பாடமே முன்பெல்

• சிலருக்குச் சாத்தியம்

# காதல் சாத்தியம்தானா?

சென்னை - 33 ❑

? ஜெயலலிதாவின் நீதிமன்ற அவமதிப்பு பற்றி கூறிய நீங்கள், அதே இதழில் சுப்ரீம் கோர்ட்டின் நோக்கும் போக்கும் விசித்திரமானதாகத்தான் இருக்கிறது எனக் கூறியுள்ளது அவமதிப்பதாகாதா...?

! நிச்சயமாக அவமதிப்பு அல்ல; மாநில அரசுகள் குறித்த உச்சநீதிமன்றத்தின் கண்டனங்கள் நியாயமானவை என்பதை ஏற்றுக்கொண்ட பிறகுதான், ஒரு நெருக்கடியான கால கட்டத்தின் கட்டாயத்தைக் கருதி தாமதமின்றி ராஜ்குமாரின்

லாம் பள்ளிகளில் இருந்தது. அதாவது 35 ஆண்டுகளுக்கு முன்! தொட்டில் பழக்கம்... பழமொழி தெரியுமல்லவா?

● விமலா கணேசன், உசிலம்பட்டி ★

? கண்டதும் காதல் என்பது சாத்தியப்படும் நிஜமா? இல்லை சினிமாக்காரர்களும் கதாசிரியர்களும் இணைந்து நடத்தும் பூச்சுற்றலா?

! நிஜத்திலிருந்து உருவாவதுதானே சினிமாவும் கதைகளும் -கற்பனை என்பதே அனுபவங்களை, உணர்வுகளை அமைதியாக உட்கார்ந்து அசைபோட்டு அடுக்குவதுதான். ஆகவே, கண்டதும் காதல் என்பது சிலருக்கு மலரக்கூடிய நிஜம்தான்.



• ஒதாயின் வருத்தம்!



• ஒப்பீடு ஜோக்!




**ம**னநல சிகிச்சை பெற சைக்கியாட்ரிஸ்ட் ஜெயராமிடம் வருகிறார் கமல். வந்த இடத்தில் ஜெயராமின் தங்கை ஜோதிகாவுடன் காதல். டாக்டர் ஜெயராம் கொதித்தெழ, இரண்டரை மணி நேரம் காமெடி மேளா!

இலங்கை ராணுவத் தாக்குதலில் பெற்றோரைப் பறிகொடுத்தக் கமல் அதை விவரிக்கும் போது அதற்கு முந்தைய காட்சியில் இருந்த ஹ்யூமர் மனநிலையை, சட்டென மாற்றி ஒருகணம் எல்லோரையும் உலுக்கி விடுகிறார்.

உங்களுக்கு எதற்கெல்லாம் பயம் என்று ஜெயராம் கேட்க, ஒரு நூறு பயங்களை இலங்கைத் தமிழில் கமல் கடகடவென அடுக்க, விழி பிதுங்குவது டாக்டர் ஜெயராம் மட்டுமல்ல நாமும்தான். அய்யய்யோ.. படம் முழுக்க கமல் பேசும் தமிழ் இதுதானா என்று காதைப் பொத்த முயன்ற போது மனுஷர் அடுத்த காட்சியிலிருந்து ரிதமிக ஈழத் தமிழை அக்ஷர சுத்தமாய் டெலிவரி செய்து அசத்துகிறார்.

ஆனால் படத்தில் சூப்பர் ஆக்டர் என்ற பட்டத்தைத் தட்டிச் சென்று விடுவது ஜெயராம்தான். ஒரு பேஷன்ட் தமது தங்கையைக் காதலிப்பதா என வெகுண்டு, அடிக்கடி கமலை அவர் பேக்-அப் செய்வதும், போன வேகத்தில் திரும்பி வரும் கமல் 'தெய்வமே எனக்கு ட்ரீட்மெண்ட் கொடுக்கத்தானே இப்படிச் செய்தீங்க' என்று கேட்பதும், ஜெயராம் லிட்டர் கணக்கில் ரத்தக் கண்ணீர் வடிப்பதும் வெடிச் சிரிப்பைத் தூண்டும் புதிய காமெடிக் களம்.

ஒவ்வொரு காட்சியிலும் பேக் செய்யப்பட்ட ஆக்ஷன் காமெடி, டயலாக் காமெடி இரண்டிலுமே சூப்பர் டைமிங் சென்ஸ். சும்மா சொல்லக் கூடாது. வசனம் எழுதிய கிரேஸி மோகனின் மூளையை க்ளோனிங் எடுத்து நாட்டில் உலவும் நரசிம்மராவ்களுக்கு டிரான்ஸ்பிளாண்ட் செய்யலாம்!

பாவம் ஜோதிகா. நாடகத்தில் வரும் கட்டியக்காரன் மாதிரி ஒவ்வொரு பாட்டுக்கும் வந்து ஆட்டம் போடுவதோடு சரி.

தனது மனைவியையும் கமல் கபளீகரம் செய்கிறாரோ என ஜெயராம் கற்பனை செய்து பார்ப்பதாகக் காட்டுவது சீப்பான சிந்தனை. சேலை கட்டிய தேவயானியை, கவர்ச்சி உடையில் ஆட விடும்போது தியேட்டரில் தாய்க்குலம் நெளிகிறது.

இடைவேளைக்குப் பிறகு அடிக்கடி வரும் பாடல்களுக்குப் பயந்து 'புகை'மண்டலத்துக்குப் போய்விடுகிறார்கள் ரசிகர்கள்.

பாடல்கள், பின்னணி இசை இரண்டிலுமே கோட்டை விட்டவர் ஏ.ஆர். ரஹ்மான். கொடி நாட்டியிருப்பவர் கே.எஸ். ரவிகுமார்.

— விஷுவல்தாசன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka